24-5

உ சிவ மயம்.
ஓம் தத் சத் பரப் பிரஹ்மணே நம:

# சப்ததா சப்ததி:ஸ்தோத்ர ரச மஞ்சரி.
(ஏழு வகை எழு பது புகழ்ப் பாச் சுவைப் பூங் கொத்து.)

# விம்சதி ஸ்தோத்திர ரச மஞ்சரி.
(இரு பது புகழ் பாச் சுவைப் பூங் கொத்து.)

இது,

திருப் பூ வணம், வேதாந்த மடாதிபதி, அஷ்ட வித சக்தி வாய்ந்த (எண் வகை ஆற்றல் உடைய) திரி பாஷா பண்டித மணி (மும் மொழிப் புலமை ரத்நம்)
திருக் களர், ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள் அவர்கள் மாணுக்கர்,
ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகளால்
செய்யுள் செய்யப் பெற்று,
சிதம்பரம், கோ சித. மடம், ஸ்ரீ சிதம்பர ஞாந தேசிகர் மாணுக்கரும்,
திரு வை யாறு, அறு பத்து மூவர் மடாதிபதியும்,
மதுரை, தமிழ்ச் சங்கத்து பண்டிதரும்,

ஆகிய,

ஸ்ரீ நாராயண சுவாமிகளால் எழுதப் பெற்ற
நுந்தா ஒளி (நித்தியப் பிரகாச) உரையுடன்
மதுரை, V. சுப்புராயலுநாயுடு பிரஸில்,
திருப் பூ வணம், வேதாந்த மடத்தாரால்,
அச்சிடப்பட்டது.

 1964 [விலை ரூ. 00—75

இராம நாத புரம் ஜில்லா, திருப் பூ வணம், வேதாந்த மடம், ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள், இயற்றிய நூல்கள், பதிப்பித்தன.

1 ஹிந்தி மொழி பெயர்ப்பு.

1. வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா-வசநம். 2—50
2. விசார சாகரம். வசநம் 2—25

2 சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.

3. காத சரித் சாகரம், வசநம், கதை. 2—25
4. ஹரிமீடே, ஹரி தத்துவ முக்தாவலி. பத உரை. 0—75
5. வியாச தாத்பரிய நிர்ணயம். வசநம். 0—50
6. நைஷ்க் கர்மிய சித்தி. வசநம். 0—50
7. வேதாந்த சித்தாந்த முக்தாவலி. வசநம். 0—50
8. ஸ்வாராஜ்ய சித்தி. வசநம். 0—50
9. பகவற் கீதை 15-வது அத்யாயம் பத உரை. [தமிழ் கவி உரை]
10. மூர்க்க சதகம், பத உரை. [நிர்க்குண அஷ்டோத்ர சத நாமாவலி 0—50
11. வேதாந்த பரிபாஷை வசநம். 0—44
12. மண்டல பிராஹ்மண உபநிஷத் [ராஜ யோக பாஷ்யம் வசநம். 0—25
13. ஈசாவாஸ்ய உபநிஷத்-சங்கர பாஷ்யம். வசநம். 0—25
14. வேதாந்த சஞ்ஞா—வசநம். 0—13

3 உரை நூல்.

1. நாநா ஜீவ வாதக் கட்டளை, [சத்யார்த்தப் பிரகாசிகை உரை. 2—00
2. கீதா சாரத் தாலாட்டு, லகு சந்திரிகை, உரை. 2—00
3. மேற்படி, நக்ஷத்திர விளக்க உரை. 0—25
4. சசி வர்ந போதம், பதார்த்த பாஸ்கரன் உரை. 2—00
5. மகா ராஜத் துறவு, மநப் பிரசாதிநி உரை. 2—00
6. பக்தி (வைராக்ய) சதக—பத உரை. பொழிப் புரை. 1—50
7. மேற்படி உரை, உதாரணக் கவி பக்தி ரச உரை. 1—00
8. வைராக்கிய தீப பத உரை பொழிப் புரை. 0—50
9. மேற்படி உரை, உதாரணக் கவி, சுடர் உரை. 1—00
10. சிடாசாரம்—பால போதிநி உரை. 0—50
11. கைவல்ய நவநீதம், தத்துவார்த்த தீப உரை. [உதாரணக் கவி 233க்கு ஆதித்தன் உரை. 2—50

உ

ஓம் தத் சத் பரப் பிரஹ்மணே நம:

சப்த தா சப்ததி:

# ஸ்தோத்ர ரச மஞ்சரி.

(ஏழு வித மாக எழு பது புகழ்ப் பாச் சுவைப் பூங் கொத்து.)



இது,

திருப் பூ வணம், வேதாந்த மடாதி பதி. திருக் களர்.
ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிகர் மாணுக்கர்,
அஷ்ட வித சக்தி வாய்ந்த, (எண் வகை ஆற்றல் உடைய)
ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகளால்
இயற்றப்பட்டு,

திரு வை யாறு, அறு பத்து மூவர் மடாதிபதியும்,
மதுரை, தமிழ்ச் சங்கத்து, பண்டிதரும், சிதம்பரம்,
கோ. சித. மடம், ஸ்ரீ சிதம்பர ஞாந தேசிக ரவர்கள்
மாணுக்கரும் ஆகிய,
ஸ்ரீ நாராயண சுவாமிகள்

இயற்றிய

நந்தா ஒளி (நித்தியப் பிரகாச) உரையுடன்,

திருப் பூ வணம், வேதாந்த மடாதி பதி.
ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகளால்,
மதுரை, V. சுப்புராயலு நாயுடு பிரஸில்
பதிப்பிக்கப்பட்டது.

காப்பிரைட்] 1964 [விலை பைசா 50

இதில் உள்ள ஸ்தோத்திரங்கள் 7.

1 காசி, அந்ந பூரண ஸ்தோத்ரம். கவி. 10
2 காசி, கங்கா ஸ்தோத்ரம். கவி. 10.
3 காசி, விசுவ நாதர் ஸ்தோத்ரம். கவி. 10.
4 ராஜ ராஜேசுவரி அம்பிகை ஸ்தோத்ரம். கவி. 10
5 காரைக் குடி, கொப் புடை அம்மன் ஸ்தோத்ரம் கவி. 10
6 பிள்ளையார் பட்டி, கர்ப்பக விநாயகர் ஸ்தோத்ரம். கவி. 10
7 சிருங்க கிரி, ஜகத் குரு, ஸ்ரீ சங்கர பகவத் பாதர் [ஸ்தோத்ரம். கவி. 10

ஆக வகை ஏழுக்குக் கவி 70

---

விம்சதி: (20) ஸ்தோத்ரம் 2.

1 திரு அண்ணா மலை, அண்ணா மலையார் ஸ்தோத்ரம் கவி 10
2 தில்லைச், சிவ காம சுந்தரி ஸ்தோத்ரம் கவி 10

ஆக வகை இரண்டுக்கு கவி 20.

---

## ஸ்ரீ காசிகாநந்த ஞானச்சார்ய ஸ்வாமிகள் இயற்றிய ஸ்தோத்திரங்கள்.

### 1 விநாயகர். (3)

1 திருப் பூ வண மடத்துக் கணபதி கவி. 10.
2 மதுரை, பொற் றாமரைக் கரை, விபூதிக் கணபதி 10
3 பிள்ளையார் பட்டி, கர்ப்பக விநாயகர் கவி. 10

### 2. தண்ட பாணி (5)

4 தேவி கோட்டை, தண்டாயுத பாணி கவி. 10
5 பழநி—தண்டாயுத பாணி கவி. 10
6 மதுரை—சுந்தரேசர் வடபால், தண்டாயுத பாணி கவி 10
7 திருச் செந் தூர், முருக வேள் கவி. 10
8 குன்றக் குடி, முருக வேள் கவி. 10

### 3. சிவன். 6.

9 திருப் பூ வணம், பூ வண்ண நாதர் கவி. 10
10 மதுரை, சொக்க லிங்கேசர் கவி. 10
11 தில்லை, நட ராஜர் கவி. 10
12 கோவி லூர், கொற்ற வா ளீசர் கவி 10
13 காசி, விசுவ நாதர் கவி. 10
14 திரு வண்ணா மலை, அண்ணா மலையார் கவி. 10

### 4. விஷ்ணு. 1.

15 தில்லை, கோவிந்த ராஜப் பெருமாள் கவி. 10

### 5. தேவி. 8.

16 திருப் பூ வணம், சௌந்திரிய நாயகி கவி. 10
17 மதுரை, மீநாக்ஷி அம்பிகை கவி. 10
18 திரு அண்ணா மலை, உண்ணா முலை அம்பிகை கவி. 10
19 காசி, கங்கை கவி. 10
20 காசி, அந்ந பூரணி அம்பிகை கவி. 10
21 ராஜ ராஜேசுவரி அம்பிகை கவி. 10
22 காரைக் குடி, கொப் புடை யம்மை கவி. 10
23 தில்லைச், சிவ காம சுந்தரி கவி. 10

### 6. குரு. 4.

24 சிக்கல், உகந்த லிங்க ஞான தேசிகர். கவி 10
25 கோவி லூர், முக்தி ராம லிங்க ஞான தேசிகர் கவி. 10
26 திருக் களர், வீர சேகர ஞான தேசிகர். கவி 46
27 சிருங்க கிரி, ஜகத் குரு சங்கர பகவத் பாதர் கவி. 10

---

27 6 வகை (1, 3, 4, 5, 6, 8) (27 விதம்) கவி 306.

---

உ

## பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 7 | 1 | தேசிஙைக | தேசிஙைக் |
| 9 | 14 | வுலத்தில் | வுலகத்தில் |
| 16 | 6 | றீரங்கிக் | றீரங்கி |
| 27 | 16 | யின் | நின் |
| 33 | 1 | வகையர் | வகையா |
| 34 | 15 | கழுமும் | கடுமும் |
| 35 | 10 | கழுமும் | கடுமும் |
| ,, | 31 | தகும் | தாகும் |
| 37 | 2 | தனிக்கும் | தளிக்கும் |
| 39 | 11 | பெறுக்கும்படி | பெருக்கும்படி |
| ,, | 22 | விழுப்பம் | விழுப்பம் |
| 51 | 21 | அசிலா | ஆசிலா |
| 52 | 5 | பொறுதற் | பெறுதற் |
| ,, | 15 | நாதரின் | நாதரின் சீர் |
| 70 | 20 | மைம்பத | மைம்பத் |
| 72 | 26 | தோணம் | கோணம் |
| 73 | 12 | ஜக்த் | ஜகத் |
| ,, | 22 | சகக்ரம் | சக்கரம் |
| 74 | 17 | உவுழ | உழவு |
| ,, | 26 | உளாத்தர் | உளத்தர் |
| 75 | 24 | அவனருள் | அவன்ருள் |
| 76 | 12 | மணே | மனே |
| ,, | ,, | பொருகளுடன் | பொருள்களுடன் |
| ,, | 30 | குருபரை | குருபரரை |
| 78 | 25 | பழிபாடு | வழிபாடு |
| 79 | 14 | மதவன் | மாதவன் |
| ,, | 24 | எனக் | எனச் |
| 92 | 3 | சம்மதாய் | சமமதாய் |
| 93 | 19 | ஆக | ஆகி |
| 94 | 1 | குடைரவ | குடையவ |
| ,, | 14 | கர்பக | கர்ப்பக |
| ,, | 26 | விடு | வீடு |
| 96 | 22 | துண்டி | தாண்டி |







## ॥ श्री राजराजेश्वरी श्रीचक्रं ॥

ஊர்தவ கோணம் ஐந்து. அதோ கோணம் நான்கு, ஆக ஒன்பது கோணத்தால், நாற் பத்து மூன்று கோணம். எட்டு இதள், பதி னாறு இதள், மூன்று வளையம், சதுஷ் கோணம் மூன்று, ஆக 51. ஐம்பத் தோர் அக்ஷரம் பூ பிரஸ்தம், கைலாச பிரஸ்தம், மேரு பிரஸ்தம். மூன்றும் அதோ ரேகை, ஊர்த்துவ ரேகை உடையது என அறிக.


श्री वीरशेखर ज्ञान देशिक:
ஸ்ரீ வீரசேகர ஞான தேசிகர்.


श्री नारायण स्वामिगळ्
ஸ்ரீ நாராயண சுவாமிகள்.


श्री काशिकानन्द ज्ञानाचार्य:
ஸ்ரீ காசிகாநந்த ஞானாச்சார்யர்.


श्री शंकराचार्य वर्य:
ஸ்ரீ சங்கராச்சார்யவரியர்.

24-5

உ

சிவ மயம்.

## சப்த தா சப்ததி: ஸ்தோத்ர ரச மஞ்சரி,

ஏழு வித மாக எழுபது புகழ்ப் பாச் சுவைப் பூங் கொத்து

(நுந்தா ஒளி உரை)

## நித்தியப் பிரகாச உரை.

---

# காசி, அந்ந பூரணி ஸ்தோத்திர ரச மஞ்சரி.

---

நுந்தா ஒளி உரை.

ஊசியி லிருந்து தவஞ்செயா வெனக்கு
முளந்தெளி வடைவதற் குரிய,
மாசிலாச் சாத நந்தனைக் கொடுத்து
மாறிடாப் பிறவியை நீக்கி,
ஆசிலாத் தேவர் தமையுளத் தெண்ணி
ஆநந்த மோக்கம தீவான்,
காசியில் உறையும் அந்நபூ ரணியின்
கழலிணை அநுதிநம் பணிவாம். 1

(இ-ள்) உளம் தெளிவதற் குரிய-சித்தம் (சுத்தி யுடைய தாகி ஒரு நிலைப்பட்டு நான்கு சாதநங்களும் கை வரப் பெற்றுச் சற் குருவை யடைந்து கேட்டு மகா வாக்கிய சிரவணத்தால், அகம் பிரஹ்மாஸ்மி என்று தெளியும்) தெளி வடைவதற் குரிய (சாதந மாகிய), ஊசியி லிருந்து தவம் செயா எனக்கும்-ஊசியை (க் கீழே நிலை நாட்டி) அதன் மேல் நின்று (ஊண் உறக்கம் இன்றித் தன்னைச் சிந்தித்த லாகிய) தவத்தைச் செய்யக் கருதாத அடியேற்கும், ஆசு இலா தேவர்தமை உளத்து எண்ணி- (தன்னை வழிபட்ட வழிபாட்டின் மூல மாகப் பகிரங்க அந்த ரங்க சாதநங்களைப் பெறுதலால்) மல விக்ஷேப ஆவரண தோஷங்க ளற்று (ச் சீவந் முக்தி விதேக முக்திகளை அடைந்த)

உயர்ந்தோர்க ளாகிய தத்துவ ஞாநிகளை, (இவனையும் அவர்களைப் போல ஆக்குவாம் என்னுந் தண்ணளியால்) நினைத்து, மாசு இலா சாதநந்தனைக் கொடுத்து- (காசியாகிய தன்னகரத்தில் தங்கித் தன்னை வழிபட்ட மட்டில் உள்ளம் பாப மலமும், விக்ஷேப மலமு மறப் பெறுதலால்) குற்ற மற்ற நான்கு சாதநங்களையும் பெரும் பேருகப் பெறும்படி சங்கற்ப வாயிலாக ஈந்து, மாறிடாப் பிறவியை நீக்கி,- (அச் சாதநங்களைப் பெறுதலால் வேதாந்த சாஸ்திரப் பயிற்சி யுடையவனுய் மகா வாக்கிய விசாரம் செய்து பெறும் தத்துவ ஞாநத்தின் வாயிலாக) வேறெவற்ருலும் நீங்கப் பெருத பிறவி யெடுத்தலை யொழித்து, -ஆநந்த மோக்கமது ஈவான் - அநர்த்த நிவிர்த்தி ஆநந்தப் பிராப்தி வடிவ மோக்ஷத்தை யளிக்கும் பொருட்டு, காசியில் உறையும் அந்ந பூரணியின் கழல் இணை அநுதிநம் பணிவாம் - முக்தி க்ஷேத்திர மாகிய காசி என்னும் சிவ ஸ்தலத்தில் எழுந்தருளி இருக்கின்ற அந்ந பூரணு தேவியின் இரண்டு திரு வடிகளையும் (வேறு கைம் மாறு செய்தற்கியலாமையினுல், வணங்கு நிலையை அறிவிக்கின்ற சத் சங்கத்துடன் கூடி) நாடோறும் வணங்குவோ மாக. எ-று.

கடுந் தவம் புரிந்தாற் ருன் தன் னுள்ளந் தூய்மையும், ஒருமையும், பெறும் என்னும் நிலையைக் கண்டதால், "ஊசியி லிருந்து தவம் செயா எனக்கும்" என்றனர், 'செய்யா' என்பது, 'செயா' என இடை குறைந்து நின்றது. 'இருந்து' என்பது, ஈண்டு 'நின்று' என்னும் பொருளைக் குறிப்பித்து நிற்கின்றது தத்துவ ஞாநத்திற்குப் பரம்பரா சாதந மாக இருத்தலால், நித்தியாநித்திய வஸ்து விவேக முதலிய நான்கும், 'மா சிலாச் சாதநம்' எனப்பட்டன. ஒரு வகை போக, மற் ெருரு வகையாக அமைந்து துன்புறுத்தலால், 'மாறிடாப் பிறவி' என்ருரெனினு மாம். தேவர்-உயர்ந்தவர். இஃ திங்கு எல்லாரினு முயர்ந்த தத்வ ஞாநிகளைக் குறித்து நிற்கின்றது. ஆத்மாவிலேயே கிரீடிக்கின்ற வுள்ள மமைந்தவ ராகலான் என்க. 'இவர்



தேவ ரவர்தேவ ரென் றிரண் டாட்டாது' (திரு நாவுக்கரசர்) என்னுந் தமிழ் மறை முதலியவற்ருல், அஃ துயர்ந்தவர், மெய்ஞ் ஞாநிகளைக் குறிக்கு மென்ப தறிக. பாலர் பித்தர் பேயர் போல இருத்தலால் மெய்ஞ் ஞாநிகளை, 'தேவ ரனையர் கயவர்' எனக் கயவருக் குவமை யாக்கினர் போலும், உலகத்துத் 'தேவர்' எனப்படுவார், இவ் வுலகத் தில்லாத உயர்ந்த வா னுலக வின்ப மெய்தினும், அவ் வின்பத்தோடு துன்பத்தையும், துய்த்தலானும், பிறவி அருமையால், மேலுந் துன்பந் துய்த்தற் குரிய ராக இருத்தலானும், 'இன்பமே யெந் நாளும் துன்ப மில்லை' (திரு நாவுக் கரசர்) என்று கருதும் மெய்ஞ் ஞாநிகளை, 'ஆசிலாத் தேவர்' என்ருர் எனினு மாம். 'கொடுத்து' என்பது, 'ஈந்து' என்னும் பொருள தாகலின், வழு வமைதியாய்த் தன்மைக் குறித்தாயிற்று. 'செலவினும்' (தொல்-சொல்-கிளவி) என்னு நூற்பாவில், வரைவின்றி யா மெனவும் வைத்தமையால், தன்மைக்கும் உரியதாயிற் றெனினுமாம். பிற மோக்ஷங்கள் சிறிதேனும் துன்பதுடன் கலந்திருத்தலால், அவ் வா றின்றிய அநர்த்த நிவிர்த்தி ஆநந்தப் பிராப்தி வடிவ மோக்ஷம், 'ஆநந்த மோக்கம்' எனப்பட்டது. 'எனக்கும்' என்றதிலும்மை, இழிவு சிறப்பைத் தருதலோடு, நற் றவ முடைய பிறரையும் தழுவநின்றது. 1

நாசியின் நூனியை நாடியே யிருந்து
நல்லருள் பெறுந்தன்மை யில்லாத்,
தோசியா யிருக்கும் எனையுமோர் பொருளாத்
தோற்றியே தன்னருள் கொடுத்துக்,
கூசிடாப் பெரும்வாக் கியப்பொருள் தன்னைக்
கூவியே அறிவுறச் செய்யக்,
காசியில் உறையும் அந்நபூ ரணியின்
கழலிணை அநுதிநம் பணிவாம். 2

(இ—ள்) நாசியின் நுனியை நாடியே இருந்து-மூக்கின் நுனியை நோக்கி யிருத்தல் முதலிய சாதநங்களால் மநதை ஒரு நிலைப்படுத்தி (தன்னைத் தியாநித்திருத்தல் வாயிலாக), நல்ல அருள் பெறும் தன்மை இல்லா - தன்னுடைய நல்ல திரு வருள் வாய்த்த தென்பதற்கு அடையாளமாக,ஞாந சாதநங்களைப் பெறுதற் குரிய தன்மைக ளில்லாமையால், தோசியாய் இருக்கும் - (பாப முதலிய) குற்றமுடையவ னாக இருக்கின்ற, என்னையும் ஓர் பொரு ளாகத் தோற்றி - அடியேனையும் ஒப் பற்ற மெய்ப் பொருளை யுணர்ந்த தத்துவ ஞாநி யாகத் தோன்றும்படி செய்ய, கூசிடாது நல் அருள் கொடுத்து - (இவனையு மிவ்வா ருக்கலாமா என்று பிறர் எள்ளுவரே யென்று) பின் னிடாமல் நல்ல திரு வருளால் ஞாந சாதநங்களை ஈந்து, கூவியே - (ஞாந சாதநம் பெறுதலால் உண்மை உணரும் வேட்கையுட னிற்கும் அடியேனை) வலிய அழைத்து, பெரும் வாக்கியப் பொருள் தன்னை அறி வுறச் செய்ய - (ஞாந சாதநம் முற்றுப் பெருத காலத்தில் சற் குரு வீர சேகர ஞாந தேசிக மூர்த்திகளிடத்தில் அவர்க ளருளா, லுபதேசித்த) மகா வாக்கியத்தின் இலக்கியார்த்த மாகிய பிரஹ்மாபிந்ந பிரத்தியக் காய தன்னைத் திட மாக அகம் பிரஹ்மாஸ்மி யென் றறிந் தாறி யிருக்கும்படி செய்வதற் காக, காசியில் உறையும் அந்நபூ ரணியின் கழல் இணை அநுதிநம் பணிவாம் - முக்தி க்ஷேத்திர மாகிய காசி என்னும் சிவ ஸ்தலத்தில் எழுந்தருளி யிருக்கின்ற அந்ந பூரண தேவியின் இரண்டு திரு வடிகளையும் (வேறு கைமாறு செய்தற் கியாலாமையினுல், வணங்கு நிலையை அறிவிக்கின்ற சத் சங்கத்துடன் கூடி) நா டோறும் வணங்குவோ மாக. எ—று.

மூக்கின் நுனியை நோக்கி யிருத்தல் முதலியன மநதை ஒரு நிலைப் படுத்தும் முத்திரைக ளாகும். 'தோஷி' என்பது, 'தோசி' எனத் திரிந்த தற் பவ மொழி.



இது பாண்டி நாட்டார் வழக் காகும், பெரும் வாக்கியம்- மகா வாக்கியம், இங் குபதேச வாக்கியத்தை யுணரநிற்கின்றது. 'இருந்து' என்பது, 'இருக்க' என்னும் பொருள தாகும். 'தோற்றி' என்பதும், 'தோற்ற என்னும் பொருள தாகும். இவை எல்லாம், 'வினை யெஞ்சு கிளவியும் வேறு பல் குறிய' என்பதனுல், வினை யெச்சங்கள் தம் பொருளை விட்டு வேறு வினை யெச்சப் பொருளையுந் தரும் என்பதற் கேற்ப நிலவுகின்றன என்க. 'இல்லாது' என்பதன் (வினை எச்சத்தின்) துவ் வீறு குறைய, 'இல்லா' என நின்றது. ஞாந சாதநங்களைப் பெறுதற் குரிய அருளாதலால், அவ் வருள், 'நல் லருள்' எனப்பட்டது. 2

தேசினைப் பெற்றுத் தேவலோ கத்திற்
சென்றிடத் தகுதியின் றியநான்,
மாசினைத் துடைத்துன் மலரடி திநமும்
மன்னியே வழுத்துதற் காக,
ஆசினை நீக்கி ஆரணப் பொருளை
அவனியில் என்றுநன் றருளக்,
காசியில் உறையும் அந்நபூ ரணியின்
கழலிணை அநுதிநம் பணிவாம். 3

(இ—ள்) தேசினைப் பெற்று - 'அகம் பிரஹ்மாஸ்மி' யென் றுணரும் திட ஞாநத்தை(சற் குரு உபதேசிக்கு முபதேச மகா வாக்கிய சிரவணத்தா) லடைந்து, தேவ லோகத்தில் சென்றிட-மெய்ஞ் ஞாநிகளால் அடையத் தக்க அநர்த்த நிவிருத்தி ஆநந்த பிராப்தி வடிவ வீட் டுலகத்திலே (தேகாதிப் பிரபஞ்சத்தில் பற்று விட்டுச்) சேர்வதற் குரிய, தகுதி இன்றிய நான்-அந்த ரங்க பகி ரங்கங்க ளாக வுள்ள ஞாநசாதநங்களைப் பெற்று நிற்குந் தகுதி(யோக்கியதை)யில்லாத அடியேன், மாசினை துடைத்து - (பொய் யாக மெய்யடியார் போல் நடிக்குங்) குற்றங் களைந்து, உன் மலர்

அடி தினமும் மன்னி- (மெய்யன்புடன்) ஞான வடிவின ளாகிய உன் னுடைய தாமரை மலர் போன்ற திரு வடி களில், (தத்துவ ஞானத்தைப் பெறுவதற் காக) மனதை நிலைபெற வைத்து, வழுத்துதற் காக-துதிப்பதற் காகவும், ஆரணப் பொருளை அவநியில் ஆசினை நீக்கி என்றும் நன்று அருள- இப் பூ வுலகிலே வேதப் பொருளை எப் பொழுதும் மிகவும் ஐயம் திரி பின்றி விளங்கும்படி விளக்கி யருளவும், காசியில் உறையும் அந்ந பூரணியின் கழல் இணை அநுதினம் பணிவாம்- (முக்தி க்ஷேத்திர மாகிய) காசி என் னும் சிவ ஸ்தலத்தில் எழுந்தருளி யிருக்கின்ற அந்ந பூரணு தேவியின் இரண்டு திரு வடிகளையும் (வேறு கைமாறு செய்தற் கியலாமையினுல் வணங்கு நிலையை அறிவிக்கின்ற சத் சங்கத்துடன் கூடி) நா டோ றும் வணங்குவோ மாக. (எ—று).

தேசு-ஞானம், 'தேசோ மயானந்தமே' (தாயு மானவர்) எனப் பிற சான்ருேர்களு மாண்டிருத்தல் காண்க. 'தேவ லோகம்' என்பது, ஞானிக ளுலக மெனப்பட்டு, வீட் டுல கத்தை யுணர நின்றது. வீட்டை யுலக மெனக் கொள்ளும் படி வள்ளுவனுரும், 'வர னென்னும் வைப்பு'(திருக் குறள் 1-3-4) என ஆண்டிருத்தல் காண்க. 'மன்னி' என்பது, அந்தர்ப்பாவித ணி சந்த வினை யெச்ச மாகும். மாசு-நாடகத் தால் மெய் யடியார் போல் நடித்தல். அது 'நாடகத்தால் மெய்யடியார் போனடித்து, வீடகத்தே புகுந்திடுவான் மிகப்பெரிதும் விரைகின்றேன்' (மாணிக்க வாசகர்2) அறிவுறுத்தல் 1) என்பது முதலியவற்ருல் புலப்படும். 3

தேசினை உடைய கங்கைநற் கரையிற்
சேர்ந்துமே அநேகநாள் இருந்து,
ஆசினை அகற்றும் ஆரிய மொழியில்
ஆர்மவித் தையினை நன் களித்துத்,



தேசினைக கொடுத்துத் திருக்களர் வீர
சேகரன் அடிகளைச் சேர்த்துக்,
காசியில் உறையும் அந்நபூ ரணியின்
கழலிணை அநுதினம் பணிவாம். 4

(இ—ள்) திருக் களர் வீர சேகரன் அடிகளை சேர்த்து - திருக் களர் ஆண்டவர் என வழங்கப் பெறும் கோவி லூர் ஸ்ரீ வீர சேகர ஞான தேசிக சுவாமிக ளாகிய மெய்க் குருபரரையே குரு பர ராக யான் கொண் டவர்கள் திரு வடிகளைப் பற்றுக் கோடாகப் பற்றி நிற்கு மா றென்னை யடைவித்து, தேசினை கொடுத்து - அக் குரு மூர்த்திகளின் மூல மாக தமிழி லுள்ள அத்வைத சித்தாந்த சாஸ்திர ஞானத்தை யளித்து, தேசினை உடைய - (முழுகு வார்க்கு புறந் தூய்மை அகந் தூய்மைகளை யளிக்கும்) தூய் மையை உடைய, கங்கை நல் கரையில் சேர்ந்தும்-கங்கை ஆற்றின் நல்ல கரையை அடைந்து முழுகியும், அநேக நாள் இருந்தும் - சேர்ந்து ஒரு நாள் இரு நாள் சீ ராடித் தங்கியிருத்தலோ டமையாது பல நாள் அந்தத் தீர வாசம் புரிந்தும், ஆசினை அகற்றும்-ஐயந் திரிபுக ளெல்லாவற்றை யும் போக்கும்படியான, ஆரிய மொழியில் ஆர்ம வித்தை யினை நன்கு அளித்து-ஆரிய மொழியிலே யுள்ள அத்வைத சாஸ்திர ஞானத்தைப் பெறவும் செய்து திடாபரோக்ஷ தத் துவ ஞானி யாகும்படியும், அருள் புரிந்து, காசியில் உறை யும் அந்ந பூரணியின் கழல் இணை அநுதினம் பணிவாம்— (முக்தி க்ஷேத்திர மாகிய) காசி என்னும் சிவ ஸ்தலத்தில் எழுந்தருளி யிருக்கின்ற அந்ந பூரணி தேவியின் இரண்டு திரு வடிகளையும் (வேறு கைம் மாறு செய்தற் கியலாமை யினுல், வணங்கு நிலையை அறிவிக்கின்ற சத் சங்கத்துடன் கூடி) நா டோறும் வணங்குவோ மாக. (எ—று.)

எல்லாந் திரு வருட் செய லெனவுணர்ந்தமையால், திருக் களர் ஆண்டவ ராகிய குருபரரை அடைந்தது முதலிய யாவும் அந்ந பூரணியின் திரு வருளாலே ஆயின வாமெனக் கருதிக் கூறப்பட்டன என்க.

கங்கை புண்ணிய வடிவின தாக இருத்தலால், அதன் கரையிற் றங்குவோ ரிதயந் தூய்மைப்படு மாதலின், அதன் கரை, 'நற் கரை' எனப் பட்டது. பல சான்றோர்கள் தங்கி ஜெபந் தியாந முதலிய புண்ணியச் செய லாற்றுதலால், 'நற் கரை' என்றார் எனினும் ஆம். அது, 'கண்ணகல் நிலத்த கங்கைக் கரையினும்' (பிரபு லிங்க லீலை மாயையின் உத்பத்திகதி 32கவி) என்பது முதலியன கொண் டறியலாம். பிறரும், 'கங்கையே முதலா மிக்க கடவுண் மாநதி' (மகா ராஜத் துறவு 10) எனப் படுதலால், கங்கை, 'தேசினை உடைய கங்கை' எனக் கூறப்பட்டது. வட மொழியில் எவ்வகைப் பட்ட நூல்களும், விரிந்து கிடத்தலால், எதையும் ஐயந் திரி பறத் தெரிந்துகொள்ள இயலு மாதலால், அம் மொழி, 'ஆசினை அகற்று மொழி' எனக் கூறுதற் கேற்புடைய தாயிற்று. இது, வடமொழி வெளி பெற வழங்கு மென்க, (இலக்கணக் கொத்து) என்பது முதலிய சான்றோர் உரையால் வெளி பெறும்.

4

மாசிலா மணியாம் வீரசே கரன்றன்
மாண்புடைக் கழலிணை அடைந்து,
பேசிடா மோநப் பொருளையே பெற்றுப்
பேரின்பம் அடைகுவாய் என்று,
ஆசிலா துணர்த்தும் அருளினை நினைந்திங்
கநேகநாள் இருப்பதற் கருளக்,
காசியில் உறையும் அந்நபூ ரணியின்
கழலிணை அநுதினம் பணிவாம். 5



(இ—ள்) மாசிலா மணியாம் - காக பாத முதலிய குற்றங்க ளற்ற நவ மணிகளுக் கொப் பான, வீர சேகரன் தன் - வீர சேகர ஞாந தேசிகரது, மாண்புடைக் கழல் இணை (நினைந்து) அடைந்து-மாட்சிமை பொருந்திய இரண்டு திரு வடிகளையும் சிந்தித் தடைந்து, பேசிடா மோநப் பொருளையே பெற்று-வேதாகமங்களா லும், இத் தன்மைத்து எனச்சுட்டி யுணர்ந் துரைக்க முடியாமல், மௌந நிலையினின் றுணர்த்தத் தகுந்த தத் பத த்வம் பத இலக்கியார்த்த மாகிய பிரத்தியக் கபிந்ந பிரஹ்மத்தை யடைந்ததன் அடை வாகப் பெற்று, பேர் இன்பம் அடைகுவாய் என்று- (அழி வற்ற) பிரஹ்மாநந்தத்தை நீ அடைதி என்று, ஆசு இலாது உணர்த்தும் அருளினை-குறைவற உண்ணின் றுணர்த்துந் தன் திரு வருளை. நினைந்து இங்கு அநேக நாள் இருப்பதற் கருள-எண்ணி (இரும்பூதுடன்) இவ் வுலகத்தில் (இவ் வுடலுடன்) பல் லாண் டாக அடியேன் வாழ்ந்திருப்பதற் காக, அடியேனுக்குத் திரு வருளை மே லும் பாவிப்பதற் காக. காசியில் உறையும் அந்ந பூரணியின் கழல் இணை அநுதிநம் பணிவாம்-(முக்தி க்ஷேத்திர மாகிய) காசி என்னும் சிவ ஸ்தலத்தில், எழுந்தருளி யிருக்கின்ற அந்ந பூரணு தேவியின் இரண்டு திரு வடிகளையும் (வேறு கைம்மாறு செய்தற் கியலாமையினால் வணங்கு நிலையை அறிவிக்கின்ற சத் சங்கத்தோடு கூடி) நா டோறும் வணங்குவோ மாக எ—று.

குற்ற மற்ற நவ மணிகள், தம்மை மேற்கொள்வோர்க்குப் பல தீமைகளையும் போக்கி, நன்மைகள் பலவற்றையும் உண்டாக்குதல் போலத், திருக் களர் ஆண்டவரும், தம்மைக் குருபர ராக மேற்கொண் டணுகுவார்க்கு, எல்லாத் துன்பங்களையும் போக்கிப், பே ரின்பத்தைத் தருதலால், 'மாசிலா மணி' என உரு வகிக்கப் பட்டனர். இறைவனை, 'மன்னே மாமணியே' (சுந்தரர்) என்பது போலச் சான்

ளோர்களை, மணியாக வுருவகித் திருத்தல் காண்க. திருவடி பிறவிப் பிணி யறுத்தலால், 'மாண் புடைக் கழல்.' எனச் சிறப்பிக்கப்பட்டது. 'மறுபிறப் பறுக்கு மாசில் சேவடி.' எனப் பிறரும் பயனை வெளிப்படுப்திச் சிறப்பித்தல் காண்க. மறைகளும், சுட்டப்படும் பொருள்களை, 'நேதி நேதி,' என்று நீக்கி, மெய்ப் பொருளை மௌந மாக நின் றுணர்த்தலால், 'பேசிடா மோநப் பொருள்' என்றனர். மணிகளின் குற்றங்களைச் சிலப்பதிகார முதலிய தொடர் நிலைச் செய்யுள்களை நோக்கிக் காண்க. திருக்களராண்ட வரையா னடுத்துத் தத்பத துவம் பத இலக்கியார்த்தப் பொருளாகிய என்னை பெற்றதன் பேருகப் பெற்றுப் பேரின்ப மாகிய சீவங் முக்தி யாநந்தந் துய்ப்பதற் குண் ணின்று தோன்ருத் துணையா யுணர்த்தியதோ டன்றி, இவ் வின்பத்தை நீளத் துய்ப்பதற் காக என் னுடலையும் நீண்ட கால மிருக்க அந்நபூரணி அருளுகின்ருள். ஆத லால், அத் தேவியின் திருவடிகளை வணங்குவோ மாக என்ப தாம்.

அந்நபூரணி இறைவன் அருட் சத்தி யாதலால், அவ் வருட் சத்தியின் வழி நின்ருர்க்கே, குரு வருளும், அத்து வித மெய்ப் பொருளுணர்ச்சியும், அழியாத பேரின்பமுங், கைகூடும் என்ப திதனுற் பெறப்படுகின்றது. 5

பேசிடா நிலையில் இருந்துபேர் இன்பம்
பெறுவதற் கவாவுட னிங்கே,
காசிலாக் காநகந்தனிற் சென்று
கரங்குபோற் சுழன்றிடா திருக்க,
வீசிலா ஆத்ம வித்தையை ஈந்து
விரைவினில் ஞாநியாக் குதற்குக்,
காசியில உறையும் அந்நபூரணியின்
கழல்இணை அநுதிநம் பணிவாம். 6



(இ—ள்) பேசிடா நிலையில் இருந்து-மாற்ற மநங் கழிய நின்ற ஆத்ம நிலையில் நிலைத்து, பேரின்பம் பெறுவ தற்கு அவாவுடன் இங்கே - பிரஹ்மாநந்த மாகிய சீவன் முத்தி யாநந்தத்தைப் பெறுவதற் குரிய இச்சையுடன் இவ் வுலகிலே, காசு இலா காநகந்தனில் சென்று - (உள்ள நெகிழ்ச்சி யில்லாதிருத்தற்கும், தத்துவ விசாரஞ் செய்வ தற்கும், தக்க இட மாகு மெனக் கொடிய விலங்குகளின் மையாலும், நீர் பழம் முதலியன வாய்க்கப் பெறுதலா லும்,) நல்ல கா டென்று மதிக்கத் தக்க காட்டை யடைந்து, கரங்கு போல் சுழன்றிடாது இருக்க-(அவ் விடம் நல்லது இவ் விடம் நல்லது என்று) காற்ருடி போலச் சுற்றித் திரியாதபடி இருந்த இடத்திலே அவ் வாத்மாவை நோக்கி ஆறியிருப்பதற் காக, வீசு இலா ஆத்ம வித்தை யினை ஈந்து - நீக்கத் தகாத ஆத்ம சாத்திர ஞாநத்தைக் கொடுத்து, விரைவினில் ஞாநி ஆக்குவதற்கு - பின்னர்ப் பொள்ளெனத் திடாபரோக்ஷ தத்துவ ஞாந முடையவ னுகத் (தன்னை வழிபடு மென்னை) யாக்குவதற்கு, காசியில் உறையும் அந்நபூரணியின் கழல் இணை அநுதிநம் பணி வாம்- (முத்தி க்ஷேத்திர மாகிய) காசி என்னும் சிவ ஸ்த லத்தில் எழுந் தருளியிருக்கின்ற அந்நபூரணி தேவியின் இரண்டு திருவடிகளையும் (வேறு கைமாறு செய்தற் கிலா மையினுல் வணங்கு நிலையை அறிவிக்கின்ற சத் சங்கத் துடன் கூடி) நாடோறும் வணங்குவோ மாக. எ—று.

காசு-குற்றம், கரங்கு - காற்ருடி, வீசுதல் என்பது நீக்குதற் பொருண்மே னின்றது. உலகத்தி லாத்ம வித்தை யன்றி மற்றைய வித்தைக ளனைத்தும் துன்பத்திற் கேது வாகலின், அவை விவேகிகளால் தள்ளத் தக்கன வாகு மாதலால், இன்பமே தரு மாத்ம வித்தையே கொள்ளத் தக்க தாகும் என்பதைக் குறிக்க, 'வீசிலா ஆத்ம வித்தை' என்றனர். 6

மாசறுக் காட்சி மன்னுற நன்றா
மனத்தினைச் சொச்சமாச் செய்து,
தூசறு துளக்க மெனுங்குறை துடைத்துச்
சுத்தமா வாக்கியங் கேட்டுப்,
பாசம தகற்றிப் பரசுக சுகமே
பற்றிநின் றழிதரல் ஒழியக்,
காசியில் உறையும் அந்நபூ ரணியின்
கழலிணை அநுதினம் பணிவாம். 7

(இ—ள்) மாசறு காக்ஷி மன்னுற-ஐயந் திரி பில்லாத திடாபரோக்ஷ ஞானம் நிலை யாக வுண்டாவதற்கு நன்றாம் மனத்தினை சொச்சமா செய்து - நிஷ்காம புண்ணியச் செய லால் நன்றாகச் சித்தத்தைச் சுத்தி யாக்கி, தூசறு துளக்கம் எனும் குறை துடைத்து - முக் குற்றங்களுள் ஒன்றாகிய விக்ஷேப தோடத்தையும் இல்லாமற் செய்து, சுத்த மா வாக் கியங் கேட்டு - (என்றும்) சுத்த மாக வுள்ள பிரமா பிந்ந பிரத்தியக்கை அறிவிக்கும் உபதேச மகா வாக்கியத் தைச் சிரவணித்து (அதனால் தத்துவ ஞானத்தைப் பெற்ற பின்), பாசமது அகற்றி-ஆவரண தோடம் நீங்கப் பெற்ற மையால், பரசுக சுகமே பற்றி நின்று-பிரஹ்மாநந்த மாகிய ஆநந்தத்தையே ஆநந்த மாகக் கொண்டு பிற வாநந்தங்களை யாநந்த மாகக் கருதாது நின்று, அழிதரல் ஒழிய-பிற வாநந் தங்களைப் பெறக் கருதுவதால் வரும் வருத்தங்க ளெல்லா மொழிந் திருக்கு மாறு அருளுவதற் காக, காசியில் உறை யும் அந்ந பூரணியின் கழல் இணை அநுதினம் பணி வாம்- (முக்தி க்ஷேத்திர மாகிய) காசி என்னும் சிவ ஸ்தலத்தில் எழுந்தருளி யிருக்கின்ற அந்ந பூரணா தேவியின் இரண்டு திரு வடிகளையும் (வேறு கைம்மா று செய்தற் கியலாமை யினால் வணங்கு நிலையை அறிவிக்கின்ற சத் சங்கத்துடன் கூடி) நா டோறும் வணங்குவோ மாக. எ—று.



சொச்சம்-தூய்மை, தத்வ மசி முதலிய மகா வாக்கி யங்கள், இலக்ஷணை மூல மாக ஜீவப் பிரஹ்மங்களின் ஐக்கி யத்தை யுண்டு பண்ணுதலால், சுத்த மா வாக்கியம் எனப் பட்டன. இலக்கியார்த்தத்தைச் சில சான்றோர் (சுத்தம்) என வழங்குதலின், என்க. 7

நீசனா யினுமே தன்பத மடையின்
நீக்கமில் கருணையைப் பெற்றுத்,
தூசறும் மனதைச் சிரவணா திகளாற்
சுத்தசிற் குணமதாச் செய்து,
பாசம தனைத்தும் பறைந்திடத் தனது
பார்வையை என்றுமே ஈயக்,
காசியில் உறையும் அந்நபூ ரணியின்
கழலிணை அநுதினம் பணிவாம். 8

(இ—ள்) நீச னாயினும் - (ஒருவன் அழுக்கா றவா வெகுளி முதலிய குற்றங்களை யுடைய) இழி சநாக இருந்து, தன் பதம் அடையினும் - (மனம் பற்றாது) தன் னுடைய திரு வடியை அடைந்தா லும், நீக்க மில் கருணை யைப் பெற்று-(அவன் தன்பால்) நீங்கா து நிகழுந் தண் ணளி யைப் பெற்று, தூசறு மனதை- (அவ் வாறு பெறுதலால் பாப மலம் நீங்கப் பெற்று) மற்றைய விக்ஷேப ஆவரண தோடங்கள் நீங்கப் பெறாத மனதை, சிரவணாதிகளால்-சிர வண மநந நித்தியாசநங்களால், சுத்த சித் குணமதா செய்து- (மாயை மாயா தற் காரியங்களுக் குள்ள) அசுத்தங்க ளில் லாத சித்துப் பொருளின் றன்மையே அதன் றன்மையாக ஆகுமாறு சித்துப் பொருளையே பற்றி நிற்கச் செய்து (விட் சேப தோடத்தைப் போக்கி), பாசமது அனைத்தும் பறைந் திட-ஆவரணத் தோடங்க ளனைத்தும் அழியவும் (செய்ய),

தனது பார்வையை என்றுமே ஈய-தன் னுடைய கிருபா நோக்கத்தை என்றைக்கு மளிப்பதற்குச் செவ்வி யுடையவளாக, காசியில் உறையும் அந்ந பூரணியின் கழல் இணை அநுதிநம் பணிவாம் - (முக்தி க்ஷேத்திர மாகிய) காசி என்னும் சிவ ஸ்தலத்தில் எழுந்தருளி யிருக்கின்ற அந்ந பூரணு தேவியின் இரண்டு திரு வடிகளையும் (வேறு கைமாறு செய்தற் கியலாமையினுல், வணங்கு நிலையை அறிவிக்கின்ற சத் சங்கத்துடன் கூடி) நா டோறும் வணங்குவோமாக. எ—று.

'அடையினும்' என உம்மையைப் பிரித்துக் கூட்டுக. அந்ந பூரணியின் கருணைப் பண்பு, மக்கட் பண்பு போல, மாறி மாறி வருத லின்றி, என்று மொரு படித் தாக நீங்காது நிற்றலின், 'நீக்க மில் கருணை' எனப்பட்டது. ஆவரணம், அசத்துவாபாதகம், அபாநாபாதகம் என இரு வகைப்படுதலால், 'பாசமது அனைத்தும்' எனப்பட்டது. பாசம் அது, என்பதில், அது பகுதிப் பொருள் விகுதி. பாசம் - கயிறு, பாசம் போல, வரிந்து நிற்றலின், 'பாசம்' என ஆவரணம் கூறப்பட்டது. 8

மாசறு மணியே மாமறைப் பொருளே
மாதவ ருளத்திருள் கடியும்,
தூசறு சுடரே சோதியே எனவே
துதித்தருள் பெறுவதற் காக,
ஆசறு மன்பர் அனைவரும் பெற்றிங்
காநந்த மடையவீ றுடனே,
காசியில் உறையும் அந்நபூ ரணியின்
கழல்இணை அநுதிநம் பணிவாம். 9

(இ—ள்) அருள் பெறுவதற் காக - (தனது) நீ தத்துவ விசாரஞ் செய்து மெய்ப் பொரு ளிது வெனத் தேறியாறி யிருப்பா யாக என்றருளும்,)திரு வருளை யடைவதன்



பொருட்டு, மா சறு மணியே-குற்றங்க ளற்ற மணிகளைப் போல வழிபடுவார்களுக்கு அவர் விரும்பும் நலன்களையெல்லாம் ஈந் தருள்பவளே, மா மறைப் பொருளே-சிறந் துயர்ந்த வேதாந்த சித்தாந்த மான பிரத்திய கபிந்ந பிரமமே, மாதவர் உளத்து இருள் கடியும்-நிட்காம புண்ணியமும், ஈசுவரத் தியாநமும், வேதாந்த சாஸ்திர விசாரமு முடைய, தவசிகளின் உள்ளத்திலே யுள்ள ஆவரண அந்தகாரத்தை ஒழித் தருளுகின்ற, தூசு அறு சுடரே-சந்தேக விபரீத தோடங்க ளற்ற திடாபரோக்ஷ ஞாநச் சுட ராக வுள்ளவளே, சோதியே- (நின்) னருளா லுண்டாகிய அகண்டகார விருத்தியினுல் ஆவரணம் நாச மாகவும், பல வியாத்திக்கு விடய மாகாமல்) சொப்பிரகாச மாக விளங்கும் பே ரொளியே, என துதித்து-என் றுள்ளபடி புகழ்ந்து, ஆ சறும் அன்பர் அனைவரும் - காமிய மாக வன்றி, நிட்காமிய மாக வழிபடும் அன்பர்கள் யாவரும், அருளை பெற்று அத் திரு வருளைப் பெறுதலால், இங்கு ஆநந்தம் அடைய - (விரும்பிய வாறு) இங்கேயே (சீவந் முக்தி) யாநந்தம் அடையும்படி செய்வதற் காக, வீறுடனே-இணையில்லாத சிறப்புடனே, காசியில் உறையும் அந்ந பூரணியின் கழல் இணை அநுதிநம் பணிவாம்- (சீவந் முத்தி க்ஷேத்திர மாகிய) காசி என்னும் சிவ ஸ்தலத்தில் எழுந்தருளி யிருக்கின்ற அந்ந பூரணு தேவியின் திரு வடிக ளிரண்டினையும் (வேறு கைமாறு செய்தற் கியலாமையினுல் வணங்கு நிலையை அறிவிக்கின்ற சத் சங்கத்துடன் கூடி ) நா டோறும் வணங்குவோமாக. எ—று.

பிறர். மறை யெனக் கூறப்படுவன, மெய்ப் பொருள் விளக்கா வாகலின், மெய்ப் பொருளை விளக்கும் இருக்கு எஜுர் சாமம் அதர்வணமும் ஆகிய நான்கும், 'மாமறை, எனப்பட்டன. நிட்காம புண்ணியச் செயலும், ஈசுரத் தியாநமும் சாத்திர விசாரமு மாகியன பெருந் தவச் செயலாதலால், அவற்றை யுடையாரை, 'மாதவர்' எனக் குறித்தனர். 9

நாசியின் வழிக்கொள் வாயுவை நிறுத்தி
நல்லயோ கத்தினை நாட்டிப்,
பேசிடா ஆன்ம ரூபத்தைப் பெறவே
பேரின்ப வாக்கியம் உணர்த்தத்,
தேசுறும் தனது வடிவத்தை எவர்க்கும்
தெளிவிக்க வேண்டுமென் றிரங்கிக்,
காசியில் உறையும் அந்நபூ ரணியின்
கழலிணை அநுதினம் பணிவாம். 10

(இ—ள்) நாசியின் வழி கொள் வாயுவை நிறுத்தி-மூக்கின் வழியாக வெளிச் சென்று மீளுகின்ற பிராண வாயுவை உள்ளே கும்பிக்கும்படி செய்து, நல்ல யோகத்தினை நாட்டி - அப் பிராண நிக்கிரக சாதநத்தாலே இறைவியாகிய தன்னிடத்திலே உள்ளம் பற்றி அசைவற நிற்குமாறு அதனை நிலை நாட்டி, பேசிடா ஆன்ம ரூபத்தினை பெற -வாக்கு மநங்கட் கெட்டாத பிரமமாகிய இறைவியாகவே 'பிரத்தியக் காய் யான் இருக்கின்றேன்' என்னும் அபேத உணர்ச்சியை அன்பர் ஒவ்வொருவரும் பெறுவதற் காக, பேர் இன்ப வாக்கியம் உணர்த்த - பிரஹ்மாநந்தத்தை அளிக்க வல்ல தத்துவமசி மகா வாக்கியத்தின் உபதேசத்தால், அத் தத்த்வம் பதப் பொருள்களின் உண்மையான அபேதத்தை அறிவிப்பதற் காக, தேசுறும் தனது வடிவத்தை-அநுக்கிரகத்திற் குரிய தான தனது சகுண சொரூபத்தை, எவர்க்கும் தெளிவிக்கவேண்டும் என்று இரங்கி-எல்லாருக்கும் தெளிவாகத் தெரிந்து கொள்ளும் முறையில் காண்பிக்க வேண்டும் என்னும் இரக்கங் காரணமாக, காசியில் உறையும் அந்நபூரணியின் கழல் இணை அநுதினம் பணிவாம் - (சீவந் முக்தி க்ஷேத்திர மாகிய) காசி என்னும் சிவ ஸ்தலத்தில் எழுந்தருளி இருக்கின்ற அந்நபூரணா தேவியின் திரு வடிகளிரண்டையும் (வேறு கைமாறு செய்தற்கு இயலாமையினால் வணங்கு நிலையை அறிவிக்கின்ற சத் சங்கத்துடன் கூடி) நாடோறும் வணங்குவோமாக. எ—று.



பிராணன் அடங்க மநம் அடங்கும், மந அடக்கமே யோக மாகும் என்பார், நாசியின் வழிக் கொள்—நாட்டி, என்றனர். மந அடக்கம் தான் யோகம் ஆகும் என்பது, 'உள்ள நெகிழ்ச்சியின் ஒடுக்கமே யோகம்' (பாதஞ்சல யோக சூத்திரம் ......) என்பது முதலியவற்றால் புலன் ஆகும்.

பிராண நிக்கிரகம் மந விக்ஷேபத்தை ஒழிப்பதற்குச் சிறந்த சாதநம் என்பதும், கிருத உபாசகன் மகா வாக்கிய சிரவணத்தால் பிரஹ்ம சாக்ஷாத்காரத்தையும், சீவந் முக்தி யாநந்தத்தையும், பெறுவான் என்பதும் பெறப்பட, 'நல்ல யோகத்தினை நாட்டி—பேரின்ப வாக்கிய முணர்த்த' எனக் குறிப்பித்தனர்.

காண்பவர் கண்ணும் மநமும் தவராது நிலை பெறக் கவரும் மங்கள வடிவம் இறைவி வடிவம் என்பார். 'தேசுறு தனது வடிவத்தை' என்றனர்.

அன்பருக்குச் சகுண வடிவக் காட்சியால், நிர்க் குண நிஜ வடிவக் காக்ஷி பெறச் செய்யும் குறிப்புடன் அந்நபூரணா தேவி காசியில் உறைகின்றனள் என்ப துட் கோளாகும். 10

*இந்தக் காசி, அந்நபூரணா ஸ்தோத்திரத்திற்கு, கோயிலூர் மரபு, சிதம்பரம், கோ. சித. மடம், காசிவாசி, சிதம்பர ஞாந தேசிக சுவாமிகள், மாணாக்கர், திருவையாறு, அறுபத்து மூவர் மடாதிபதி, மதுரைத் தமிழ்ச் சங்கத்து பண்டித, ஸ்ரீ நாராயண சுவாமிகளால், இயற்றப் பெற்ற நுந்தா ஒளி உரை முற்றுப் பெற்றது.*

---

## காசி - கங்கா ஸ்தோத்திர ரச மஞ்சரி.

### நுந்தா ஒளி உரை.

---

மாசிலா திருந்து பகீரதன் விரும்ப
மாதேவன் முடிவழி வழிந்து,
தூசிலாச் சகரர் உடல்இடம் சென்று
தூய்மையாய்ப் பரவுல கடையத்,
தேசுடைத் திருவார் புகழுடைத் தென்னத்
திகழ்ந்திடும் மோக்கம தருளும்,
காசியில் வளரும் கங்கைநின் கழலைக்
கனிவுடன் அநுதினம் பணிவாம். 1

(இ—ள்) மாசு இலாது இருந்தும் பகீரதன் விரும்ப -தாம் ஒரு குற்றமும் இல்லா திருந்து கொண்டு பகீரதச் சக்ரவர்த்தி யானவர், தம் மூதாதைகளான சகர ருடைய குற்றம் இது எனக் கண்டு, அவ ருடைய குற்றத்தைப் போக்கி, யவரை நல் லுலகிற் புக விடுப்பதற்குப் பூ வுல கில் நீ வரவேண்டும் எனப் பல் லாண்டு தவங் கிடந்து விரும்பி வேண்ட, மா தேவன் முடி வழி வழிந்து-எல்லாத் தேவருக்கு மே லான தேவ ராகிய பரமேசுரன் நீ நேரே இறங்கின் பூ வுலகம் தாங்கா தென்பதை யொப்பித் தன் முடி மே லிறங்கச் செய்து, அதன் வழி யாகப் பூமி பொ றுக்கு மளவில் விடச் சிறுக வழிந்து ஒழுகி தூசிலாச் சக ரர் உடல் இடம் சென்று - ததீசி முனி வரை மதியாமை யாகிய குற்றத்தைத் தவிர வேறு எவ் வகைக் குற்றமு மில் லாத சகர ருடைய சாம்பல் வடி வான உடல்களிற் புகுந்து நனைத்து, தூய்மையா பர உலகு அடைய - ததீசி முனிவர் கோபத்தாற் சாம்ப லாய அவர், அம் முனிவர்பாற் செய்த அபசார பாபத்தினின்று நீங்கிச் சுவர்க்க வுலகிற் சென் றின்புறச் (செய்தலால்,) தேசு உடை திரு ஆர் புகழ்



உடைத்து என்ன - அதி லிருந்து பூ வுலகில் முழுகுவார் எல்லா ருடைய குற்றங்களையும் போக்கித் தான் ஒரு குற்ற மும் இல்லாமல் அழ கார்ந்து ஒளி படைத்து விளங்கு கின்ற தாய் எல்லாராலும் புகழ் கொண்டதா யுள்ளது கங் கையே யாகும் பிற யாறுகள் இல்லை யென்று கூறும்படி, திகழ்ந்து - இவ் வுலகில் விளங்கி, இடு மோக்கமது அரு ளும் - சுவர்க்க முதலியவற்றிற் பெறும் இன்பமே யன்றித் தத்துவ ஞானம் தரத் தக்க அழிபா இன்ப வடி வாகிய வீடு பேற்றையும், அத் தத்துவ ஞான வாயி லாக அளித் தருளு கின்ற. காசியில் வளரும் கங்கை நின் கழலை-உயர் வுடைய காசித் தலத்தில் பல புண்ணியக் கட்டங்கள் பெருகி விளங் கும்படி பய னளிக்க வல்ல தாய்ச் செல்லுகின்ற கங்கா தேவியே நின் னுடைய திரு வடிகளை, கனிவுடன் அநு தினம் பணி வாம் - அன்பு கொண்டு மனங் கனிந்து நா டோ றும் யான் என்னோடு உற்றாருடன் கூடி எல்லாரும் வணங்குவோம் நீ கடைக் கணித் தருள்வா யாக. எ—று.

தன் குற்ற நீக்கிப் பிறர் குற்றம் பார்த்துத் தீர்த்தல், நல் லரச ரியல் பாதலால், ‘தூசிலா திருந்து’ என்றனர்.

மனத்தொடுபடாத செயல் பயன் றரா தாதலால், ‘கனிவுடன் பணிவாம்’ என்றனர். தான் பணிதலே யன் றித் தன்னொடுற்றவரையும் பணியச் செய்யின், றன் பணிவு வன்மை பெறு மாதலின், ‘பணிவாம்’ என்றனர். அற வினை யோவாது செய்தா லொழிய, ஒரு நாட் செய்யிற் பயன் தரா தென்பார் ‘அநுதினம்’ என்றனர். கழல் என்றது அடி என்ற அள வில் நின்றது. அல்லது, சிலம்பை உணர்த்தி, ஆகு பெய ராக திரு வடியை யுணர்த்திற்று எனினு மாம். வீர கண்டை பெண்கட் இன்மையால். 1

ஆசுடை அன்பர் அனைவரும் விரும்பி
அகத்தினில் தூய்மையைக் கருதித்,
தேசுடை நினது நீரினில் மூழ்கிச்
சிவபதம் அடைந்தனர் அலரோ,
மாசுடை யானும் மகிமையை உணரா
மதியினன் மூழ்கினேன் அருளக்,
காசியில் வளரும் கங்கைநின் கழலைக்
கனிவுடன் அநுதினம் பணிவாம். 2

(இ—ள்) ஆசு உடை அன்பர் அனைவரும் விரும்பி-அன் றறிவா மென்னுமல், நன்மையைச் செய்வதில் விரைவுடைய தீவிர தர அன்புடையவரெல்லாரும் விருப்பம் கொண்டு, அகத்தினில் தூய்மையைக் கருதி - புறந்தூய்மையை மட்டும் கருதாமல், மநத் தூய்மையும் பெறக் கருதி, தேசு உடை நினது நீரினில் மூழ்கி - புண்ணியத் தேசசை யளிக்க வல்ல தன்மையை உடைய நின்னுடை நீரிலே மூழ்கி, சிவ பதம் அடைந்தனர் அலரோ-சிவ மாக நிலவு மியல் பான நிலையை பெற்றதன் பேருகப் பெற்றனராவர், மகிமையை உணரா மதியினன்-அவ் வாருய நின் மாட்சிமையை யறியாத புத்தியை யுடையவனுகிய, மாசு உடை யானும் - பாப மாசு உடைய அடியேனும் அருளமூழ்கினேன்-நீ பாப மாசு போக்குதன் மூல மாகப் பரமாய் இலகு நிலையை அடியேற் கருளுதல் குறித்து நின் னீரலே முழுகினேன், காசியில் வளரும் கங்கை நின் கழலை கனிவுடன் அநுதிநம் பணி வாம் - உயர்வினை உடைய காசித் தலத்தில் பல புண்ணிய கட்டங்கள் பெருகி விளங்கும்படி பய னளிக்க வல்லதாய்ச் செல்லுகின்ற கங்கா தேவியே நினது திரு வடிகளை அன்பு கொண்டு மநங் கனிந்து நா டோறும் யான் என்னோடு உற்ருருடன் கூடி எல்லாரும் வணங்குவோம் நீ கடைக் கணித் தருள்வா யாக. எ-று



நல்வினை விரைந்து செய்யு மன்பர் என்பார், "ஆசு உடைய அன்பர்" என்றனர் ஆசு-விரைவு, "தேசுடை" என்பதற்குத், தெய்வ வொளியை உடைய எனப் பொருள் கூறலு மாகும். மா சிலாதவர்க் கருளுதல் நின் புகழிற்கு ஏற்ற தாகாது; மா சுடைய எனக் கருளுதலே நின் புகழிற் கேற்ற தாகும் என்பார் "மாசுடை யானும்" என்றனர். அன்பர்கள் நின் மகிமையை அறிந்ததால், விரும்பி மூழ்கினர். யான் நின் மகிமையை யறியு மதி வன்மை யின்ருல், அவரைப் பார்த் தவர் முழுகுவது போல முழுகினேன், அருள்தலைக் குறித்து என் தொடர் புடையாரோடு வணங்குதலையுஞ் செய்தேன். அதன் மேற் செய்வது நின் பரம் ஆகும் என்பார், "மகிமையை .......பணிவாம்" என்றனர். நினது நீர் என்றது, இராகுவினது தலை என்பது போல, ஆருவது ஒற்றுமைப் பொருட்கண் வந்தது என்க. 2

பூசுரர் போற்றும் புநிதநல் பெயரைப்
பொருந்தியே பூமியில் வந்து,
ஆசிலாச் சகரர் தம்பொருட் டாக
அனைவர்க்கும் பாவத்தைப் போக்கித்,
தேசுடை மநதைச் சிவனிடம் செலுத்தச்
சிறியனேற் கருள்செய வேண்டிக்,
காசியில் வளரும் கங்கைநின் கழலைக்
கனிவுடன் அநுதிநம் பணிவாம். 3

(இ—ள்) பூசுரர் போற்றும் புநித நல் பெயரை பொருந்தி—பூ தேவர்களாக வுள்ள அந்தணர்கள் கொண்டாடும்படி யான தூய்மை யான கங்கை என்னும் திருப் பெயரை மேற்கொண்டு, பூமியில் ஆசு இலா சகரர் தம் பொருட் டாக வந்து-பகீரதச் சக்கரவர்த்தியின் வேண்டு கோளுக் கிணங்கிப் பூ லோகத்திலே வாநத்தி லிருந்தும் இழிந்து நீதியின்கண் குற்ற மில்லாது வாழ்ந்த சகர மன்ன

ரின் பொருட் டாக வந்து. அனைவர்க்கும் பாவத்தை போக்கி-பூ லோகத்திலே வந்து பிறந்து தன் னீரில் புத்தி பூர்வமாகவும் புத்தி பூர்வம் இன்றியும் முழுகும் எல்லாச் சீவர்கட்கும் அவர் தம் பாவங்களை எல்லாம் போக்கி (சித்த சுத்தியை யளித்து பத்தி மூல மாக சிவ பெருமானி டத்திலே மநதை நிலை பெறச் செய்து மோக்ஷ சாதநங் களையும் தோற்றுவித்து மகா வாக்கிய சிரவணத்தால் தத்வ ஞாந நிஷ்டர்களாக ஆக்கு நோக்குட னிருத்தல் போல) தேசு உடை மநதை சிவனிடம் செலுத்த சிறிய னேற்கும் அருள் செயவேண்டி- 'குணம் பொல்லேன் குலம் பொல்லேன் குற்றமே பெரிதுடையேன்' என்னும்படி எல்லாவற்றினுமிகத் தாழ்ந்தவனுக இருக்கிற எனக்கும் என் போன்ருர்க்கும் நின்பால் முழுகுதலால் பாப நீக்க முண்டாகச் சுத்த மாக விளங்குதலால் விசேஷப தோஷம் அறு மாறு சிவ பெருமானிடத்தில் மநதை நிலை பெறச் செய்து, ஞாந சாதநங்களைப் பெற்று, மகா வாக்கிய சிரவணத்தால் தத்துவ ஞாந நிஷ்டராக இருக்கும்படி திரு வருள் பாலிப்பதற் காக விரும்பி, காசியில் வளரும் கங்கை நின் கழலை கனிவுடன் அநுதிநம் பணிவாம்- அது மட்டும் அன்றி, உயரிய காசித் தலத்திலே கங்கா தேவியே நின்னுடைய திரு வடிகளையும் வணங்குவோ மாக எ—று.

பூ சுரர் போற்றும்-அறிந்து போற்றற் குரியா ரவரே யாதலால், அவ் வாறு கூறினுர் பூசுரர் என்பது சான்ருேர் கள் என்னும் பொருட் டாகும் பிறப்பா லப் பெயரை இடுகுறியாக ஏற்ருரை மட்டும் குறித்த தன் ருகும். பூசுரர் போற்றும் எனவே, பிறர் போற்றுதலும் அடங் கிற்று. என்னை? "உலக மென்ப துயர்ந்தே மேற்றே, நிகழ்ச்சி யவர்கட் டாகலா னென்க" என்பதனு லென்க. "கங்கை" என்னும் பெயரைச் சொன்னுலும் புநிதர்களாக ஆதலால், "புநித நற் பெயரை" என்றனர் கங்கை தெய்வ வடிவ மாதலா லென்க. "ஒரு பொருட் பன்மொழி சிறப்



பினின் வழா" என்றலின், புநித நல் எனப் பன் மொழி கொடுத்தனர். இது "நல்லாரைக் காண்பதுவு நன்றே" என்னும் திருப் பாட்டை நினைப்பிக்கின்ற தென்னலாம்.

இனித் தான் ஒரு குற்றமும் மில்லா திருத்தலால், "புநித" என்றும், தன்னைச் செபிப்பார்க்கு, அற முதலிய நற் பயனை அளித்தலால், "நல்" என்றும் கூறப் பெற்றது. எனலு மாகும். (ஹரி சரணுத் ஆகதா கங்கா) விஷ்ணுவி னுடைய பாதங்களி னின்றும் பூமியை யடைந்தவள் கங்கை. (ஹரோத்தமாங்காத் ஆகதா கங்கா) அர னுடைய சிரசி லிருந்து பூமிக்கு வந்தவள் கங்கை என்பது அதன் பொருளாதலால், கங்கை என்ற அளவிலேயே அரியர னுகிய கடவுளை நினைப்பித்தலோடு அது அக் கடவுளை இட மாகக் கொண்டு வருதலாலும், அக் கடவுட் பரிசத்தால் பாவந மாக இருந்து, முழுகுவார்க்கும் பாவநத்தை யளித்து நன்மைகளையும் தருதலாலும். சொற்கும் பொருட்கும் ஒற்றுமை யுண்மையான், பொருளின் பாவநத்தைச் சொன் மே லேற்ற லமையு மாதலானும், "புநித நல் பெயர்" என்ருரெனினு மாம். சேய் நில நோக்க, அணி நில மீங்கெ னப்படுதலின், "பூமியில் வந்து" என்றனர். "செலவினும் வரினும்" (தொல்-சொல்) என்னு நூற் பாவிகண், ஈங்கு முதலியன தன்மைக்கண் அடக்கப்பட்டன எனச் சேனு வரையர் எழுதி விளக்கி யிருத்தலைக் காண்க. 3

நாசியில் ஓடும காற்றினை அடக்கி
நற்றவம் புரிகிலா என்னைக்,
காசியில வருதற் கழைத்துமே கலையைக்
கற்பதற் குளமதைக் கொடுத்துப்,
பேசிடும் பலநூல் கற்றுவித் தானுயப்
பிறங்கவே நினதருள் வேண்டிக்,
காசியில் வளரும் கங்கைநின் கழலைக்
கனிவுடன் அநுதிநம் பணிவாம். 4

(இ-ள்) நாசியில் ஓடும் காற்றினை அடக்கி நல் தவம் புரிகிலா என்னை-நாசியின் வழி யாகச் செல்லுகின்ற காற்றைக் கும்பித்து மனதை ஒரு நிலைப் படுத்தி இறைவனைத் தியானித்த லாகிய தவம் செய்தற் குரிய ஆற்ற லில்லாத என்னையும், காசியில் வருதற்குமே அழைத்து - சிறந்த காசிக் க்ஷேத்திரத்தி லே வரும்படி கூப்பிட்டு, கலையை கற்பதற் குளமதை-வியாகரணம் தர்க்கம் பூர்வ மீமாம்சை சாங்கியம் உத்தர மீமாம்சை முதலிய வித்தைகளை கற்பதற் குரிய ஊக்கத்தையும், பேசிடும் பல நூல் கற்று வித்வான் ஆய் பிறங்க அளித்து - நன் னூல்கள் எனப் புகழப்படுகின்ற அவ் வித்தைகளிலே சிறப் பாக உள்ள பல நூல்களையும் 'நூல் பலகல்' என்பதற் கேற்பப் பயின்று சிறந்த வித்வா னுக விளங்கும்படியும் தண் ணளி செய்து (இரக்கங் காட்டினமையால்), நினது அருள் வேண்டி - யான் கற்று வித்வா னுக ஆனதற் கேற்பத் தத்துவ ஞான நிஷ்ட னுக விளங்குதற் காக, நின் னுடைய திரு வருளை பெறுவதற் காக வேண்டிக்கொண்டு, காசியில் வளரும் கங்கை நின் கழலை கனிவுடன் அநுதிநம் பணிவாம்-உயர்ந்த காசித் தலத்தில் பல புண்ணியக் கட்டடங்கள் பெருகி விளங்கும்படி பய னளிக்க வல்ல தாய்ச் செல்லுகின்ற கங்காதேவியே நின் னுடைய திரு வடிகளை அன்பு கொண்டு மனங் கனிந்து நா டோறும் யான் என்னோடு உற்ருருடன் கூடி எல்லாரும் வணங்குவோம் நீ கடைக்கணித்தருள் வாயாக.

சான்றோர் செய்யும் தவம், அஷ்டமா சித்தி முதலியவற்றை விரும்பாமல், தத்துவம் உணரும் வேட்கையால் செய்யப்படும் தவ மாதலின், 'நற் றவம்' எனப்பட்டது. 'கங்கையே முதலா மிக்க கடவுண் மா நதி' (மகாராஜத் துறவு 10) எனப்படுதலின், தான் காசிக்கு அக் கங்கா தேவியின் அருளாலேயே போய்க் கற்றுப் பண்டித னுக ஆயின தாகக் கூறின ரென்க வாயு அடங்க மனனடங்கும்' என்பதனுல், 'நாசியி லோடும்' எனக் கூறினர். தவப் பேருகச் சாதனம் பெருத யானும் அத்வைத சாஸ்திரங்களையும்,





அவற்றை கற்பதற்குக் கருவி யாக உள்ள வியாகரண முதலிய சாஸ்திரங்களையும், கற்பதற்கு ஊக்க மளித்தது, அதாவது. மனஞ் சலியாது சிரவணத்தில் புக விடுத்தது, கங்கா தேவியின் செயலே யாகும் என்ற படி யாம். தான் காசியில் இருப்பதாகவே எண் ணிப் புகழ்தலின், 'காசியில் வருதற்கு, என்றனர் 'காசிக்கு வா' எனப் பிறர் அழைத்ததும், கங்கா தேவியின் அழைப் பாகவே கொண்டமையின், 'காசியில் வருதற் கழைத்துமே' என்றனர். ஈண் டும்மை உயர்வு சிறப்பாதலோடு எதிரது தழுவுத லாகவும் நின்ற தென்க. உலகத்தில் ஒருவர் ஒன்றை நினைக்கும் போதும், பேசும் போதும், மற் ரெருவர் இயல் பாக அவர் நினைப்புக்கும், பேச்சுக்கும், ஒத்த தாக ஒன்று சொல்லின், அச் சொல்லை தெய்வச் செய லாகக் கொள்ளுதல், பண்டு மின்று முண்டா தலை யறிய, இதனை, 'நற்சொல் லோர்த்தல்' என்ப நூல்களின்க ணென்க. 4

தேசினை உடைய கங்கையே நினது
திருஉளப் பாங்கதாய் நடந்து,
ஆசினை நீக்கும் அருளுடை நூலை
அங்கையில் நெல்லியில் ஆய்ந்து,
பேசிடும் மதவா திகள்களைக் கண்டு
பின்னிடச் செய்வதற் காகக்,
காசியில் வளரும் கங்கைநின் கழலைக்
கனிவுடன் அநுதிநம் பணிவாம். 5

(இ—ள்) தேசினை உடைய கங்கையே - ஒளியும், புகழு மாகிய இரண்டையும் ஒரு சேரப் படைத்த கங்கா தேவியே, நினது திரு உளப் பாங்க தாய் நடந்து-காசியில் உறையும் சான்றோர்கள் நின் னிடை முழுகித் தூய்மை யுடையவர்க ளாக இருத்தலால், நின் னுடைய திரு வுள்ளத் தெண்ணத்திற் கேற்ப, நடை யருப் பெரும் செல்வ ராக உறைந்து, ஆசினை நீக்கும் அரு ளுடை நூலை அங் கையின்

நெல்லியில் ஆய்ந்து - மல விக்ஷேப ஆவரண மாசுகளை யொழிக்கும்படி யான, இறைவ னருளைப் பெற்றவர் படித் தற் குரிய தன்மை யுடையன வாக விளங்கும் அத்வைத நூல்களையும், அவற்றிற் கங்க மாக வுள்ள நூல்களையும், உள்ளங் கையில் நெல்லிப் பழம் போலப் புலப்பட ஆராய்ந்து தெளிந்து, பேசிடும் மத வாதிகளைக் கண்டு- வீண் வாதங்களைப் பேசுகின்ற பிற மத வாதிகளைப் பார்த்து, பின் இடச் செய்வதற் காக - அவர்கள் தோற்று பிறக் கிடும்படி வாதம் செய்து வென்று அவரையும் தம் மா சற்ற அத்வைதத்தில் பற்று வைத் தழியா வின் பெய்து விக்க வருளுதற் காக, காசியில் வளரும் கங்கை நின் கழலை கனிவுடன் அநுதிநம் பணிவாம் - உயர்ந்த காசி க்ஷேத்திரத் திலே பல புண்ணியக் கட்டங்கள் பெருகி விளங்கும்படி யாக பய னளிக்க வல்ல தாய்ச் செல்லுகின்ற கங்கா தேவியே நின் னுடைய திரு வடிகளை அன்பு கொண்டு மநங் கனிந்து நாடோறும் யான் என்னோடு உற்றாருடன் கூடி எல்லா ரும் வணங்குவோம் நீ கடைக் கணித் தருள்வா யாக.எ-று.

ஒளி, தான் உள்ள காலத்தில் உண்டாகும் புகழ், 'உண்ணு னொளிநிறுன் ஓங்கு புகழ் செய்யான். (நாலடி யார்) என்பதனுற் காணப்படும். கங்கை மாதா வாகலின், தன்பால் நிலவுஞ் சான்றோர்க ளாகிய மக்களை நல் வழியிலே புக விடுக்க எண்ணுத லியல்பாதலால், 'திருவுளப் பாங்கு' என்பதற்கு, மேற் கூறியதே உரையாகும் என்க.

தீர்த்த மென்பது நற்றிருக் கங்கையே
மூர்த்தி காசிமு முமுதற் தெய்வமே
ஏத்த ருந்தம் எழில்வார ணாசியே
சாத்திர மத்வைத சாத்திர மொன்றுமே.

என்று பிற மத வாதிகளிடை வாதிட்டு வென்று அவரையு மக் கொள்கையின ராக அங்குள்ள சான்றோர்க ளாக்குதல் இன்னுங் கண்கூடாக வுள்ளமையால், "பேசிடு



மத வாதிகளைக் கண்டு பின்னிடச் செய்வதற்காக" என்ற னர். "இவை எல்லாம் கங்கா தேவியி னருளா னிகழ் வனவே யாகும்" என அத் தேவியின் சிறப்பு வெளிப் படக் கூறியபடி யாம்.

பிற மத வாதிகள் காசியில் வெளிப்படை யாக வந்து வாத மிட மாட்டார்கள். எங்கேயோ மறைவாக நின்று ஒரு சிலரிடம் வாத மிடினும், அதனை அனைவரும் அறிந்து ஏதோ ஒரு நூல் வல்லானை விட்டு வெல்வர் என்பார், "கண்டு" என்றனர். வல்லான்-மாட்டாதவன். 5

மாசினை உடைய மநத்தினுல் உன்னை
வழுத்தியே வணங்குவார் தமக்குத்,
தூசினை நீக்கிச் சொச்சொரு பந்தான்
தூய்மையால் அகத்தினில் விளங்கத்,
தேசினைக் கொடுத்துச் சிவசிவ என்றே
திருப்பெயர் செவியினிற் கூறக்,
காசியில் வளரும் கங்கையின் கழலைக்
கனிவுடன் அநுதிநம் பணிவாம். 6

(இ-ள்) மாசினை உடைய மநத்தினுல் உன்னை வழுத்தியே வணங்குவார் தமக்கு-பாப மாசு உடைய மநதோடு கூடி தேவி யாகிய உன்னை அம் மாசு நீங்கு மாறு புகழ்ந்து வணங்கி வழிபடுகின்றவர்களுக்கு, தூசினை நீக்கி சொச் சொருபம் தான்-அப் பாப மாசினை நீக்குதலோடு அதனை நீக்குதலால் சித்த மாகவே, அதன் வாயி லாக பிரத் திய கபிந்ந மான தமது சச்சிதாநந்த சொருப மானது, தூய்மையா-உபாதிகளை நீக்கித் தெளி வாக, அகத்தினில் விளங்க- அம் மநத்திலே தானே தானுக பிரகாசிக்கு மாறு, தேசினைக் கொடுத்து-தத்துவ ஞாந மாகிற பிரகாசத்தை அஞ்ஞாந திமிர மொழியு மா றுதவி, சிவ சிவ என்றே செவியினில் கூற-உடலை விட் டுயிர் பிரியுங் காலத்தும்

அகம் பிரஹ்மாஸ்மி என்னும் திட ஞானம் நழுவாதிருக்குமாறு விசுவேசரும் விசாலாக்ஷியம்மையும் ஒருவர், மடியிற் றலையை யமர்த்த, ஒருவர், சிவய வசி சிவய வசி என்னும் முக்தி பஞ்சாக்கரத்தை செவியிலே உபதேசிக்கும்படி (சீவர் கட் கருளு மாறு), காசியில் வளரும் கங்கை நின் கழலை கனிவுடன் அநுதினம் பணிவாம் உயர்வுடைய காசித் தலத்தில் பல புண்ணிய கட்டடங்கள் பெருகி விளங்கும்படி பய னளிக்க வல்ல தாய்ச் செல்லுகின்ற கங்கா தேவியே நின்னுடைய திருவடிகளை அன்பு கொண்டு நாடோறும் யான் என்னொடு உற்றாருடன் கூடி எல்லாரும் வணங்குவோம் நீ கடைக்கணித் தருள் வாயாக. எ—று.

(ஸ்வ) சுவ சொருபம் என்பது, சொச் சொரும் என்று தற்பவம் ஆயிற்று. சிவ சிவ என்பது முக்தி பஞ்சாக்ஷரத்தைக் குறிக்கும் முதலாகும். 6

மாசிலாச் சிவன்றன் இரவுநாள் ஆக
மாசிசேர் புநிதநன் னாளில்,
ஆசிலா அன்பர் அளவிலார் வந்து
அன்புடன் முழுகியே இருந்து,
பேசிலா மோன நிலையுடன் பூசை
புரிவதைக் கண்டுமே களிக்கக்,
காசியில் வளரும் கங்கைநின் கழலைக்
கனிவுடன் அநுதினம் பணிவாம். 7

(இ—ள்) மாசு இலா-இயல் பாகவே பாசங்களினின்றும் நீங்கிய, சிவன் தன் இரவு நாள் ஆக-சிவன் ராத்திரி என்னும் நாள் ஆகி மாசி சேர் புநித நல் நாளில்-மாசி மாதத்தில் வந்து சேருகின்ற மிகத் தூய்மை யான நாளிலே, ஆசு இலா அன்பர் அளவு இலார் வந்து-தீய தொழிலிற் செல்லு மாறு தூண்டுகின்ற தீய வாசனை



யாகிற குற்ற மின்றிய அளவில்லாத அன்பர்கள் வந்து, அன்புடன் முழுகியே இருந்து-பக்தி சிரத்தையுடன் குளித்து அமர்ந்து, பேசிலா மோன நிலையுடன்-வாய்ப் பேச்சில்லாத மௌன நிலைபோடு கூடி, பூசை புரிவதை-பண்டாக்கள் விசுவேசுவரருக்குப் பூசை செய்தலை, கண்டுமே களிக்க-கண்டு களிப்பதற்கு ஏதுவாக, காசியில் வளரும் கங்கை நின் கழலை கனிவுடன் அநுதினம் பணிவாம்-உயர்வுடைய காசித் தலத்தில் பல புண்ணியக் கட்டடங்கள் பெருகி விளங்கும்படி பயனளிக்க வல்ல தாய்ச் செல்லுகின்ற கங்கா தேவியே நின்னுடைய திருவடிகளை அன்போடு மனங் கனிந்து நாடோறும் யான் என்னொடு உற்றாருடன் கூடி எல்லாரும் வணங்குவோம் நீ கடைக்கணித் தருள்வாயாக. எ—று.

சிவன் ராத்திரி யானது மிக்க புண்ணிய கால மாதலால், 'புநித நன் னாள்' என்றனர்.

கங்கையினாலேயே காசி க்ஷேத்திரத்திற்கு மிக மகிமையாகும் என்பதைக் கருத்துட் கொண்டே இப்பதிகம் முழுவதும் செல்லுகின்றது.

காசியில் சிவன் ராத்திரி பூசை மிகச் சிறப்பாக நடத்துவார்கள், ஆதலால், 'கண்டுமே களிக்க' என்றனர்.

'பேசிலா மோன நிலையுடன்' என்றது, அங்கு, பண்டாக்கள் பூசை செய்யு நிலையைக் குறிப்பதாகும். ஈசுர ஆகார மாக மனதைச் செலுத்திப் பூசை புரிவர் என்பதாம்.

தாசிகள் வலையிற் சிக்கிடா திருந்து
தவத்தினை உண்மனத் துடனே,
காசினை விரும்பாக் காசியில் வதிந்து
கற்பதைக் கண்டுமே பலபேர்,

சூசகம் தெரிந்து துணிந்துநன் குறையத்
தூய்மநம் அளித்துமே நாளும்,
காசியில் வளரும் கங்கைநின் கழலைக்
கனிவுடன் அநுதிநம் பணிவாம். 8

(இ—ள்) தாசிகள் வலையில் சிக்கிடாது இருந்து— சாதுக்களே மேலான தெய்வம் எனக் கருதி உடல் பொருள் ஆவி மூன்றனையும் கொடுக்கும் அன்பு மிக வாய்ந்த தாச தாசிகளின் அன்பு வலையிற் சிக்குண்டு தங்கள் தநமாகிய தபோ தநத்தை யீட்டுதற்கு மறந்து விடாமல் விழிப்புட னிருந்து, தவத்தினை உண் மநத்துடனே — தவத்தை மேற்கொண்ட நெஞ்சுடன், காசினை விரும்பாக் காசியில் வதிந்து - குற்றச் செயல்களை விரும்பாத மக்கள் உறையும்படி யான காசி என்னும் சிவ க்ஷேத்திரத்திலே தங்கி, பல பேர் கற்பதைக் கண்டும்-பல சாதுக்களும் நன்னூல்களை ஐயந் திரிபறக் கற்பதைப் பார்த்தவுடன்,சூசகம் தெரிந்து துணிந்து நன்கு உறைய - அவர்கள் தத்துவத்தை உணரவே கற்கின்றார்கள் என்னும் குறிப்பினை அறிந்து தத்துவத்தை யறிய விரும்புகின்ற நாமும்,இவர்களுட னிருந்து பயிலல் நன்றென நிச்சயித்துச் சேய்மையி லுள்ளாரும் வந்து, ஒரு காற் குளித்தமையால் நிலையாக வுறைந்து தவத்தை விடாமல் தத்துவம் தெரிக்கு நூல்களைப் பயின்று நிலைக்கு மாறு, தூய் மநம் அளித்தும் நாளும்-தூய நெஞ்சமதை அவர்கட்கு அளித்தலோடு என்றும், காசியில் வளரும் கங்கை நின் கழலை கனிவுடன் அநுதிநம் பணிவாம்— உயர்வுடைய காசித் தலத்தில் பல புண்ணியக் கட்டடங்கள் பெருகி விளங்கும்படி பயனளிக்க வல்ல தாய்ச் செல்லுகின்ற கங்கா தேவியே நின்னுடைய திரு அடிகளை அன்பு கொண்டு மநம் கனிந்து நாடோறும் யான் என்னோடு உற்றாருடன் கூடி எல்லாரும் வணங்குவோம் நீ கடைக்கணித் தருள்வா யாக.

எ—று.



காசியில் உள்ள இல்லறத்தினர் துறவிகளைத் தெய்வமாகக் கொண்டு உபசரித்தலால், அச் சாதுக்கள் உபசாரத்தில் மயங்காது தவத்தை மேற்கொண்டு தத்துவ நூல்களைக் கற்பதைக் கைவிடார்கள் என அங்குள்ள இல்லறத்தார் நிலையையும். துறவிகள் நிலையையும் விளக்க, 'தாசிகள்' எனத் தொடங்கிக் கூற லாயினர். இல்லறத்திற்கு பெண்களே நல்லதுணை யாதலாலும், அங்குள்ள பெண்கள் அவ் வாறிருத்தல் இறப்பூது பயத்தலாலும், 'தாசிகள்' என்று, பெண்களை வெளிப்படக் கூறினர். காசியில் புண்ணிய முடையாரே பிறந் துறைவ ராதலால், 'காசினை விருபாக் காசி' என்றனர். காசு-குற்றம் 8

மாசினை உடைய மநத்தனாய் வந்து
வளங்கொள்கா சியின்நகர்ச் சார்ந்து,
தூசிலாத் துறவோர் கூட்டத்தை மருவித்
தூயநன் னிலைமையை யடைந்த,
தேசினை நினைந்து நைந்துநைந் துருகித்
திருவடிக் கன்பனும் ஆறு,
காசியில் வளரும் கங்கைநின் கழலைக்
கனிவுடன் அநுதிநம் பணிவாம். 9

(இ—ள்) மாசினை உடைய மநத்தன் ஆய் வந்து— புண்ணிய பாப எண்ணங்களாகின்ற பெரிய கிளைகளையும், அவ் வெண்ணங்களின் பிரிவாகிய, நன்மை தீமை எண்ணங்களாகிற கோடுகள் வளார் ஈர்க்குத் தழைகளையும், இன்ப துன்பங்களாகிற பூ காய் கனிகளையும், கொண்ட மநமாகிய மரம்.வேர் ஊன்றி வளர்ந்து ஓங்கும் நிலமாக யான் வந்து, வளம் கொள் காசியின் நகர் சார்ந்து-செல்வம் கல்வி ஞாந வளங்கள் எல்லாவற்றையும் நிறையக் கொண்ட காசி நகரத்தை அடைந்து, தூசு இலா துறவோர்-காவி ஆடையை யன்றி, வேறு ஆடைகளை மேற்கொள்ளாத துறவிகளாகிய, கூட்டத்தை மருவி - சத் சங்

கத்தை அணைந்து, தூய நன் னிலைமையை அடைந்த, மாயை அவித்தைகளும், அவைகளாலாகிய சர்வஞ்ஞத்வ முதலியனவும், கிஞ்சிக்ஞத்வ முதலியனவும்: ஆகிய எல்லா மாசுகளையும், பொய்யெனக் களைந்த விடத்துச் சச்சிதாநந்த மாக விளங்குகின்ற மெய்ப் பொருளை யடைந்ததின் அடைவாகக் கொள்வதற் குரிய தாக நின் னருளாற் பெற்ற, தேசினை நினைந்து-தத்துவ ஞானத்தின் மகிமையை எண்ணி, நைந்து நைந்து உருகி-உள்ளம் கட்டு விட்டு உருகப் பெற்று, திரு வடிக் கன்பனும் ஆறு - மீண்டும் என்றும் நன்றி மறவாமல் நின் திரு அடிக்கு அன்புடையேன் என்பதை மெய்ப்பிக்கும்படி, காசியில் வளரும் கங்கை நின் கழலை கனிவுடன் அநுதிநம் பணிவாம் - உயர் வுடைய காசித் தலத்தில் பல புண்ணியக் கட்டடங்கள் பெருகி விளங்கும்படி பயன் அளிக்க வல்ல தாய்ச் செல்லுகின்ற கங்கா தேவியே நின் னுடைய திருவடிகளை அன்பு கொண்டு மநங் கனிந்து நாடோறும் யான் என்னோடு உற்றாருடன் கூடி எல்லாரும் வணங்குவோம் நீ கடைக்கணித் தருள்வாயாக.

எ—று.

தூய்மையான எல்லாவற்றிலும். தூய்மை யாக வுள்ளது மெய்ப் பொருளே யாதலால், சான்றோர்கள், 'சுத்தப் பிரமமா யிருக்கின்ற' (நாநா ஜீவ வாதக் கட்டளை) என்றனர் என்க.

9

வாசம தாக வதிந்துதான் இருந்து
வள்ளலாம் விசுவநா தரின்நற்,
பாசம தடைந்து பணிபல புரிந்து
பன்னெடுங் காலமாய்த் தன்னைப்,



பேசிடும் வகையா வாக்கினைத் தந்த
பெருமையை நினைந்துநைந் திருக்கக்,
காசியில் வளரும் கங்கைநின் கழலைக்
கனிவுடன் அநுதிநம் பணிவாம். 10

(இ—ள்) வாசமது ஆக, சத் சங்க சகவாச மாக வசித்தற்கு ஏற்ற தலம் காசித் தலம் என் றெண்ணி, வதிந்து தான் இருந்து-வசித்தலைச் செய்து, வள்ளல் ஆம் விஸ்வநாதரின்-தன்னையே பணிவார்க்குத் தரும் பெருங் கொடையாள ராகிய விசுவேசுரனுக் குரிய-நல் பாசமது அடைந்து-நல்ல அன்பை பெற்று, பணி பல புரிந்து-பூ மாலை புனைந்து ஏத்தல் முதலிய சிவப் பணிகளைச் செய்து, பன் னெடுங் காலமாய்-நீண்ட பல கால மாக, தன்னைப் பேசிடும் வகையா-அவ் விசுவேசுரனைப் புகழு மாறு, வாக்கினை தந்த-வாக்கு வன்மையை அளித்த பெருமையை நினைந்து - நின் பெருமையை எண்ணி நைந்து இருக்க - மநங் கட்டு விட் டுருகி ஏகாக்கிர மாக இருக்க, காசியில் வளரும் கங்கை நின் கழலை கனிவுடன் அநுதிநம் பணிவாம் - உயர் வுடைய காசித் தலத்தில் பல புண்ணியக் கட்டடங்கள் பெருகி விளங்கும்படி பயன் அளிக்க வல்ல தாய்ச் செல்லுகின்ற கங்கா தேவியே நின் உடைய திரு அடிகளை அன்பு கொண்டு மநங் கனிந்து நாடோறும் யான் என்னோடு உற்றாருடன் கூடி எல்லாரும் வணங்குவோம். நீ கடைக்கணித்தருள்வாயாக. எ—று.

காசி வாசம் ஊசி வாசம் போல்வ தாதலால், பனி வெய்யில் மழை முதலியவற்றின் கொடுமைகளைப் பொறுத் துறைந்து என்பார், 'வதிந்து தான் இருந்து' என வருத்தந் தோன்ற வுரைத்தனர். மோக்ஷத்திற்கு ஏது வான அன்பானதால், 'நற் பாச மது' என்றனர். 'தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னைச் சங்கரா யார்கொலோ சதுரர்.' என்னு மாறு தன்னையே தர வல்ல தனி வள்ளல் என்பார்.

'வள்ளலாம் விசுவ நாதர்' என்றனர். இனிப் பயனென்றை யுந் தனக் காக எண்ணுது சீவர்கள் அஞ்ஞாந நீங்கப் பெற் றுத் தன்னை யுணர்ந் தின்பு வடிவாக இருந்த படியே இருக்கு மாறு. புவந போகங்களைப் படைத்தலும், அவற்றை நிலை பெறுத்தலும், மீளத் துடைத்தலு மாகிய தொழில்களைச் செய்து நன்மை யளித்தலால், வள்ளல், என் றனர் எனினு ஆகும் 10

காசி கங்கா ஸ்தோத்திரம் முற்றுப் பெற்றது.

---

## காசி விசுவ நாதர் ஸ்தோத்திர ரச மஞ்சரி.

### நுந்தா ஒளி உரை.

---

மாசிலா மநத்தன் இவன் அலன் எனுது
மறைமுடி முடிவினை உணர்ந்து,
வேசறும் அடியர் குழுவினில் அமர்த்தி
மெய்ச்சுகம் பெறவருள் புரிய,
பாசம தகனற முநிவர்கள் கழுமும்
பரசிவ தலத்தினில் உயரும்,
காசியில் உறையும் விசுவநா தரின்சீர்க்
கழல்இணை அநுதிநம் பணிவாம். 1

(இ—ள்) மாசிலா மநத்தன் இவன் அலன் எனுது -வேதாந்த சித்தாந்தத்தை விளக்குதற் குரிய சித்த சுத்தியும் அதனுல் ஏற்படும் நித்த வநித்தங்களது வேறுபாட் டுணர்வு முதலிய சாதநங்களும் அற்றவன் இவன் என்று திரு வுள் ளத்தில் அடையாது, மறை முடி முடிவினை உணர்ந்து— சாதநம் எல்லாம் கைவரப் பெற்றமையால் குரு முக மாக வேதாந்த சித்தாந்தத்தை அறிந்து, வேசறும் அடியார் குளுவினில் இருத்தி, பிறப் பிறப் பாகிய சம்சார சாகரத் தில் அலையும் இளைப் பாறிச் சீவந் முக்தி ஆநந்த பாநராக விளங்கும், அடியவர் குழுவினில் இருத்தி-கற்பித மாகிய மாயை மாயா காரியங்கட் கெல்லாம் அதிஷ்டாந மாகிய மெய்ப் பொருள் தாம் எனச் சாக்ஷாத்கரித்த தத்துவ ஞாநிகளின் திருக் கூட்டத்தில் என்னையும் ஒருவ னுக அமரும்படி தத்துவ ஞாநி ஆக்கி, மெய்ச் சுகம் பெற அருள் புரிய-தார புத்திர தநாதிகளால் வரும் பொய்ச் சுகம், சுகம் அல என விடுத்துப், பிரமாநந்தம் ஆகிய தன் மெய்ச் சுகத்தைத் துய்த் திருக்கு மாறு திரு வருள் செய்ய. பாசமது அகன்ற முநிவர்கள் கழுமும்-யான் எனது என்னும் இரு வகைப் பற்றும் கழலப் பெற்ற மநந சீல ராகிய சான்ருேர்கள் என்றும் நிறைந்து வாழப் பெறு கின்ற, காசியில் உறையும் விசுவ நாதரின் சீர் கழல் இணை அநுதிநம் பணி வாம் - காசி க்ஷேத்திரத்தில் எழுந் தருளி யிருக்கின்ற விசுவேசுவரப் பெருமா னுடைய இரண் டான விழுப்பம் அமைந்த திரு வடிகளையும் நாளும் அன்பொடுங் கூடி வணங்குவோ மாக. எ—று.

மறை முடி - உபநிடதங்கள், முடிவினை-சித்தாந் தத்தை, வேதாநந்த சித்தாந்தம் என்று இங்கு உரைத்தது; அத்வைத சித்தாந்தத்தையே யாகும் பிற சித்தாந்தங்கள் சித்தாந்தங்கள் ஆகாமையின் என்க.

'சீர்' என்பது ஆகு பெயர்ப் பொருளாகிய திரு வடிக் குரிய அடை ஆகும். அன்றிக், கழலுக் குரிய தாக ஆக்கி னும் பொருந்தும். அதற்கு (கழலுக்கு) விழுப்ப மிருத்த லால் அதாவது, திரு வடியின் விழுப்பத்தைத் தோற்று விக்கும் விழுப்பம் இருத்தலால் என்க. திரு வடியின் விழுப்பத்தைத் தோற்றுவிக்கும் விழுப்பம் அதற் குண் டெனின், திரு வடியின் விழுப்பம் என்னை எனின், இறை வன் திரி புரத்தையும், மன்மதனையும் எரித்ததும், பிரமன் சிரத்தைக் கொய்ததும், தன்னெடு எதிர்த்தமை குறித்துச் செய்த த கும். எமனை யுதைத்தது அடியவர் பொருட்டுச்

செய்த தாகலின், அதற்கு விழுப்பம் எய்தியது அதனுனே தான் அதில் வீரக் கழலைச் சூட்டினர் என்ப சான்றோர். அன்றியும், அடியவர் பிறவிப் பிணி அறுப்பதும், அழிவி லின்ப மளிப்பதும் ஆகி யிருத்தலாலும், அதற்கு விழுப்பம் எய்தியது எனவுஞ் சான்றோர் கருதுப. இக் கருத்துக்கள்,

புரத்தை வென்றநகைக்குமென் போதினேன்,
சிரத்தை வென்றசெங் கைக்குஞ்சி லைமதன்,
எரித்த கண்ணிற்கும் இன்றெனக் கூற்றடுஉத்,
தரித்த வீரக்க ழலொடு தாளுற.

(பிரபுலிங்க லீலை) என்பதனுனும். 'நற் ருள்' (திருவள்ளுவர்,) 'மறுபிறப் பறுக்கு மாசில் சேவடி' (பரிபாடல்) 'அந்திய மின்மையி லரனடி செலுமே.' 'மாசில் வீணையும், மாலை மதியமும், வீசு தென்றலும் வீங்கிள வேனிலும், மூசு வண்டறைப் பொய்கையும் போன்றதே ஈசன் எந்தையி ணையடி நீழலே' (திரு நாவுக் கரசர்.) என்பவைகள் முதலியவற்றுலும், வெளிப்படும்.

கடும்பு சுற்றம் இங்குச் சுற்ற மென்றது தங்கள் குரு மரபின் வந்த முதியரும், இளை ஞரு மாய அடியர்கு முவினை என்க அவர், என்றும் இறை வழிபாடு குறைவறப் புரிபவ ராதலால், அவரை யடி பொட்டி அவரொடும் வணங்குவேன் என்ப தாம். கடும் பென்பது, சுற்றத்திற் காதல், 'கடும்பொடும் கடும்பொடும் பரவுதுங், கொடும்பாடறியற்க வெம்மறி வெனவே. (பரிபாடல்) என வருவது முதலியவற்றுற் புலப்படும். 1

தேசினை உடைய சீவர்கள் தமக்குத்
தெள்ளிய மறையினற் பொருளை,
ஆசிலா தகல உணர்த்துதற் கெண்ணி
அண்மையில் இருத்தியும் தரித்துக்,



கூசிடா துணர்த்திக் கங்கையின் கரையில்
குதூகலித் தளிக்கும்தண் ணளியாய்க்,
காசியில் உறையும் விசுவநா தரின்சீர்க்
கழல்இணை அநுதினம் பணிவாம். 2

(இ—ள்) தேசினை உடைய சீவர்கள் தமக்கு-சித்த விளக்க முடைய பரிபக்குவ ராகிய சீவர்களுக்கு. தெள்ளிய மறையின் நற் பொருளை - உணர்த்தப்படும் பொருளை மயக்க மின்றி யுணரு மா றுணர்த்த வல்ல இருக்கு முதலிய வேதங்களிலே உணரப்படும் பொருள்கள் எல்லாவற்றினும் சிறந்த பொரு ளாக விளங்கும் பிரஹ்மாத்ம ஐக்கிய மாகிய நற் பொருளை. ஆசு இலாது அகல உணர்த்துதற்கு எண்ணி-ஐயந் திரி பாகிய குற்றங்க ளில்லா தொழியும்படி விரி வாக அறிவித்தற்குத் திரு வுளம் பற்றி, அண்மையில் இருத்தி ஆதரித்து கூசிடாது உணர்த்த - பக்கத்தி லமரச் செய்து அன்பினுல் விருப்பம் காட்டித் தெளி வாக அறிவிக்க, கங்கையின் கரையில் குதூகலித்து அளிக்கும்-கங்கை யாற்றங் கரையிலே மகிழ்ச்சியுடன் தண் ணளி செய் தருளுகின்ற தண் ணளியாய்-கிருபையே வடி வாகி. காசியில் உறையும் விசுவ நாதரின் சீர்க் கழல் இணை அநுதினம் பணிவாம்-காசி க்ஷேத்திரத்தில் எழுந்தருளி யிருக்கின்ற விசுவேசுரப் பெருமா னுடைய இரண் டான விழுப்பம் அமைந்த திரு வடிகளையும் நாளும் கடும் பொடுங் கூடி வணங்கு வோ மாக. எ—று.

பல குருபர ராக விளங்கிப் பல பக்குவ ஜீவாத்மாக் களுக் குய்ய வழி காட்டுகின்றுர் விசுவநாதர் என்ப தாம்.

இனிக் காசியில் ஜீவர்களின் தேக வியோக காலத்தில் விசாலாக்ஷியும், விசுவ நாதரும் அண்மையில் வந்து மடித் தலத் திருத்தி யுபதேசிப்பார் என்னுங் கருத்தை யிப்பா

குறிக்கின்ற தென்னற் கில்லை. 'தேசினை யுடைய சீவர்க டமக்கு' எனத் தொடங்கி யிருத்தலால் என்க.

அங்குத் தோன்றுஞ் சத்துக்க ளாகிய சாதுக்க ளனை வரையும் விசுவ நாத ராக இவ்வாசிரியர் உண்மை யறிந்து பாவித்தமை யாலும், அவர்கள் என்றும் சீடர்களுக்குச் சிவேசுவர ஐக் கியத்தை யாதரவுட னுபதேசித்தலாலும், அவற்றை நினைவு கூர்ந் தக் காசிப் பெருமானைப் புகழ்ந்த தாகு மென்க.

பக்குவாந்மாக்களுக் காதலால், 'கூசிடாது' என்றனர். தன் னேக்கம் என்றும் வாய்த்தலால், 'குதூகலித்து' என்றனர். ஆந்மாக்களை இறைவன் மெய்ப் பொருளுணர்த்தி யுய்விக்குந் தண்ணளியே யுடையவ னாதலால், 'தண்ணளி வடிவாய்' என்றனர் மற்றைய அளி எல்லாந் தண் ணளி யாகா தென்க 2

ஊசிடும் உடலை நான்எனக் கருதி
ஊர்தொறும் கரங்கெனச் சுழன்று,
பேசிடும் பிறப்பைப் பெருக்குவ தற்காய்ப்
பிச்சையை யேற்றுமே திரிந்து,
ஏசிடு பவரை நன்னெறி உய்க்க
இணையிலாக் கங்கைநற் கரைக்கண்,
காசியில் உறையும் விசுவநா தரின்சீர்க்
கழல்இணை அநுதினம் பணிவாம். 3

(இ—ள்) ஊசிடும் உடலை நான் என கருதி— என்றும் புதி தாக விளங்கும் தன்னை மறந்து, புதுமை கெட்டுப் பழமை யாகிப் புலால் நாறுகின்ற தூல உடலும். பார்த்தல் கேட்டல் முதலிய தந் தொழில் களைக் கொள்கையில் வல்லமை யற்று விளங்க நிலை யடை யும் சூக்கும வுடலும், இவ் விரு உடல்களையும் என்றும்



ஒரு படித் தாகச் செய்ய இபலாமலும், என்று மொரு படித்தாக நிலவ இயலாமலும் (அநிர்வசநீய மாயும்) சொல் லுணர்ச்சி நேருணர்ச்சிகளால் இல்லை இலங்கிற் றிலை என மறைத்தல் இயலாமையாலும், வலி கெட் டழியுங் காரண (அவித்தை) வுடலு மாகிய இம் மூ வகை யுடல்களையும், தா னாகக் கருதி ஊர் தொறும் கரங்கு என சுழன்று— எல்லா ஊர்களிலும் காற்றாடி போலச் சுற்றி, பேசிடும் பிறப்பை பெருக்குவதற் காக-துன்ப வடிவ மெனச் சான் றோர்களாலும். மெய்ந் நூல்களாலுங் கூறப்படுகின்ற பிறவியை மேலும் மேலும் எடுத்துத் துன்புறு நிலையைப் பெறுக்கும்படி. பிச்சை ஏற்றுமே திரிந்து - ஐய மேற் றுண்டு மெய்ப் பொருளில் நாட்ட மின்றி வீணே அலைந்து (வாழ்தலால்,) ஏசிடுபவரையும் நல் நெறி உய்க்க-நல்லோ ரால் வீண ரென இகழப்படுகின்றவர்களையும், மெய்ப் பொருளை யடைவிக்கும் நல்ல வழியில் செலுத்தி யாளுவதற் காக, இணை யிலாக் கங்கை நல் கரைக்கண்-யாறுகள் பலவற் றுள்ளுஞ் சிறந்து விளங்கும் ஏழு புண்ணிய யாறுக ளுள் ளும் ஈ டின்றிச் சிறந்து மிளிர்கின்ற கங்கை யாற்றங் கரை யிலே (அமைந் துள்ள.) காசியில் உறையும் விசுவ நாதரின் சீர் கழல் இணை அநுதினம் பணிவாம்-காசி க்ஷேத்திரத்தில் எழுந்தருளி யிருக்கின்ற விசுவேசுரப் பெருமா னுடைய இரண்டு ஆன விழுப்பம் அமைந்த திரு வடிகளையும் நாளும் அன்பொடுங் கூடி வணங்குவோ மாக. எ—று.

ஊசுதல்-முன் னிருந்த நன் னிறம் நன் னாற்ற முதலிய பண்பு மாறி, வேறு நிறம் முதலிய தீப் பண் புறுதல், வலி குலைந்து நலிவுறுதல் முதலிய நிலை யடைந்து, கொள்ளத் தக்க நிலை யின்றாதல் முன் னிருந்த நன் னிலை கெட்டு நிற் றல். மெய்ப் பொருளின் நாட்ட மில்லாதார் பெற்றது கொண் டுண்டு நில்லாது, நிச்ச நிரப் புடைய ராய்த் திரித லின், 'பேசிடும் பிறப்பைப் பெருக்குவதற் காய்' என்ற னர். அவருக்குப் பிறவி வளர்வ தன்றி, யொழிய வழி யில்

லாமற் போதலின் என்க. ஏசிடுபவரையும் என்னு மிழிவு சிறப் பும்மை விகாரத்தாற் றொக்கது. 3

ஆசிலா நிலையை அடைவதற் காக
அன்புடன் சாதநம் அடைந்து,
பேசிடும் உலகம் அனைத்தையும் கானல்
நீரெனப் பிறங்கிடக் காட்டித்,
தூசகல் பிரம சொரூபமே நினது
சொரூபமாம் எனத் துலக் குறவே,
காசியில் உறையும் விசுவநா தரின்சீர்க்
கழல்இணை அநுதிநம் பணிவாம். 4

(இ—ள்) ஆசிலா நிலையை அடைவதற்காக-சான்று சாக்கியம் என்பது இறையும் இன்றிச் சுத்தப் பிரஹ்ம மாக இருக்கும் நிலையைப் பெற்றதன் பேறாக பெறுவதற் காக, அன்புடன் சாதநம் அடைந்து- (சாதந மின்றி யொன்றைச் சாதிப்பார் உலகில் இல்லை யாதலின்) அப் பெரும் பேற்றைப் பெறுவதற் குரிய அந்த ரங்க சாதந மாகிய தத்துவ ஞாந முதலிய வற்றைப் பெறுவதற்குப் பகி ரங்க சாதந மாக வுள்ள நித்தியாநித்திய வஸ் து விவேக முதலிய நான்கு சாதநங்களையும் முதலில் விருப்புடன் அடையும்படி செய்து, பேசிடும் உலகம் அனைத்தையும் கானல் நீர் எனப் பிறங்கிடக் காட்டி-அஞ்ஞாநிகளால் மெய் யெனவும், சுஞ் ஞாநிகளால் பொய் யெனவும் பேசப்படுகின்ற, மாயா காரியங்கள் ஆகிய சகத் தனைத்தையும் பொய் யென அறிந்தாலும் அது சோபாதிகம் பிராந்தி வயப்பட்ட தாக லான் பேய்த்தேர் போலத் தோற்ற நீங்காது விளங்கு மன்றி, யுண்மையி லில்லை யென அறிவித்து. தூசு அகல் பிரமமே நினது சொரூபம் எனத் துலக் குறவே - மாயை மாயா காரியங்களுக் குள்ள குற்றங்க ளொன்று மில்லாத சச்சிதாநந்த வடிவப் பிரஹ்ம சொரூபமே நின்னுடைய சொரூபம் ஆகும் (இடர் சடம் பொய் வடிவின னீ யல்லை)



என் றுண்மையை விளக்குதற் காகவே (தத்துவ ஞாநத்தை யடைவித்தற் காகவே,) காசியில் உறையும் விசுவநாதரின் சீர்க் கழல் இணை அநுதிநம் பணிவாம்-காசி க்ஷேத்திரத்தில் எழுந்தருளி யிருக்கின்ற விசுவேசுரப் பெருமா னுடைய இரண் டான விழுப்பம் அமைந்த திரு வடிகளையும் நாளும் கடும் பொடுங் கூடி வணங்குவோ மாக. எ—று.

காசி க்ஷேத்திரம் முத்தி யளிக்கும் க்ஷேத்திர மாதலால், அதற் கேற்ப முக்தி யளிக்கு நோக்குடன் இறைவன் அங்கு எழுந்தருளி யிருக்கின்றான் என்னுங் கருத்தை விளக்கு நிலை கொண்ட இப் புகழ்ப் பூங் கொத்தினுள், இப் பா மலர், இறைவ னங்கு வரும் அன்பர்கள் சுயம் பிரகாச மாகிய மெய்ப் பொருளை அடைவதற் குரிய கருவிகளை முதலில் அடையும்படி செய்து, பின்னர், மாயை முதலிய அனைத்தும் பேய்த் தேர் எனப் பொய் யாகும் என்று, அவற்றை மெய்ப் பொருள் என மயங்கா திருக்கு மாறு அறிவித்து, அதன் பின்னர், அச் சுயம் பிரகாச மாகிய பிரம மெய்ப் பொருளே பிரத்தியக் காகிய நீ எனக் காட்டுதற் காகவே, அங் கெழுந்தருளி யிருக்கின்றான், பிற பொய்ப் பொருளை அளிப்பதற் கில்லை எனக் காட்டு முகத்தான் வீடு பேறு பெறக் கருதும் மகன், பயனிற் கருத் தின்றி, நற் கருமங் களைச் செய்பவ னும், சகுணோபாசனை உடையவ னும், பக்தி யோக முடைய வனாக இருந்தால், அத் தெய்வமே மநத் தூய்மை வாயி லாக, வீடு பேற்றிற் குரிய நித்தியா நித்திய வஸ்து விவேக முதலிய பகி ரங்க சாதநங்களை முத லளித்துச் சிரவண மநந முதலிய அந்த ரங்க சாதநங்களைப் பின் னீந்துப், பின்னர் அவற்றினு மந்த ரங்க சாதந மாயும், அந்த ரங்க சாதநம் என்றே என்றும் பெயர் பெறுவது மாகிய, தத்துவ ஞாநத்தை அவை வாயி லாக

அளித்துத் தன்னையே தா ஞகைப் பின்ன மற வறிந்தின் புருவாக இலகுமா றருளும் என்னும் வெண்ணேயே கமழும் பவள வாய்க் கண்ண பிரான் திரு வுளத்தை விளக்க முறப் பிலிற்றுகின்றது எனற் கையம் இல்லை என்க. 4

பேசுமா நுடப்பி றப்பினை அடைந்தும்
பிறப்புறு நாளதாக் குனரின்,
ஏசுறு முடலை யானெனக் கண்டிங்
கின்பமுற் றிருக்குமென் றனக்கும்,
ஊசுறு முடல்நீ அன்றென உணர்த்த
ஊக்கிய மோக்கம தீயக்,
காசியில் உறையும் விசுவநா தரின்சீர்க்
கழல்இணை அநுதிநம் பணிவாம். 5

(இ—ள்) பேசும் மாநுடப் பிறப்பினை அடைந்தும்- எழு வகைப் பிறப்பி னுள்ளும் மிக மிகச் சிறந்த தெனச் சான்றோர்களாலும், நன் னூல்களாலும் 'அரி தரிது மாநுட ராய்ப் பிறத்தல்' என்பது முதலிய வாகப் புகழப்படுகின்ற, 'தக்க இன்ன தகாதன இன்ன' எனப் பிறித் தறியும் விவேக அறிவைச் சிறப் பாகப் பெறுகின்ற மநிதப் பிறவியைப் பெற்றிருந்துங் கூட, பிறப்புறு நாளது ஆக்குநரின்-மநிதப் பிறவிக் குரிய தன்மை யொன்று மின்மையால் தம்வாழ் நாள் முழுவதையும் மநிதப் பிறவி யெடுத்து வாழ்கின்ற வாழ் நாட்க ளாக ஆகாமல் செய்கின்ற மாக்கள் போல, ஏசுறும் உடலை யான் எனக் கண்டு — 'பொத்தை யூன் சுவர் புழுப் பொதிந் துளுத் தசும் பொழுகிய பொய்க் கூரை' (மாணிக்க வாசகர்) என்பது போலச் சான்றோர்களாலே பழிக்கப்படுகின்ற தூல உடம்பு முதலிய உடம்புகளை ஆந்மா வாகிய யான் என்று மயங்கி, இங்கு இன்பம்



உற்று இருக்கும் என்றனக்கும்-இவ் வுலகத்திலே பொய் யின்பங்களையே புருடார்த்த மாகக் கருதி அவற்றை யடைந்து மெய் யின்பத்தை யடையக் கருதும் கருத் தின்றி விலங்கினம் போல் இருக்கும் எனக்கும், ஊசு உறும் உடலம் நீ அன்று என உணர்த்த - பழுதுபட் டழியும் உடம்புகள் நீ யாக மாட்டா நீ நித்திய ஞவை என் றறிவிக்கவும், ஊக்கிய மோக்கமது ஈய- (அதன் வாயி லாக) சாலோக முதலிய எல்லாவற்றினு முயர்ந்த அநர்த்த நிவிர்த்தி ஆநந்தப் பிராப்தி வடிவ மோக்ஷத்தை யளிக்கவும், காசியில் உறையும் விசுவ நாதரின் சீர் கழல் இணை அநுதிநம் பணி வாம்— காசி க்ஷேத்திரத்தில் எழுந்தருளி யிருக்கின்ற விசுவேசுவரப் பெருமா னுடைய இரண் டான விழுப்பம் அமைந்த திரு வடிகளையும் நாளும் கடும் பொடுங் கூடி வணங்கு வோ மாக. எ—று.

'மநம் ஞானே' (வியாகரண சூத்ரம்.) என்ப வாகலின், விவேக முள்ளவன்றான் மநிதன் எனப்படுவான் என்பார், 'மாநுடப் பிறப் பிறப்பினை யடைந்தும்' என்றனர்.

விலங்கினங்கட்கும், நல் லுணவு தீய உணவு எனப் பகுத் துணரும் உணர்வு முதலியன விருந்தாலும், பின்னர், நன்மை பயக்கும் தீமை பயக்கும் என்னும் உணர்வு முதலிய பகுத் துணர்வு அவற்றிற் கெய்தா என்க.

'தன்மை சுட்டலு முரித்தென மொழிப, அன்மைக் கிளவி வேறிடத் தான' எனத் தொல்காப்பியனுர் கூறி யிருத்தலால், மறுக்கப்படும் பொருண்மேல் அன்மைக் கிளவி அண்மையைச் சுட்டி நிற்க, 'ஊசுறு முடல் நீயன் றென' என்னுந் தொடர் நிற்கின்ற தென்க 'பிறப் புறு நாள தாக்குநரின்' என்பது, 'பேசாத நாளெல்லாம் பிறவா நாளே' (திரு நாவுக் கரசர்) என்னுந் திருத் தொடரை நினைப்பிக்கின்றது. 5

நாசமாம் இந்த ஐந்துகோ சத்தை
நானெனக் கண்டுவன் றிடமாம்,
ஆசநம் ஆதி அனைத்துங்கை விடுத்தே
அவலமா அலைந்திடும் என்னைக்,
காசினி தனில்வே தாந்தநூற் கருத்தைக்
கழறியே ஞாநியாக் குதற்குக்,
காசியில் உறையும் விசவநா தரின்சீர்க்
கழல்இணை அநுதிநம் பணிவாம். 6

(இ—ள்) நாசம் ஆம் இந்த ஐந்து கோசத்தை-பிராரப்த கன்மம் அழிதலாலும், தத்துவ ஞாநந் தோன்றுதலாலும், அழியுந் தன்மை யுடைய 'அதாவது' ஆந்மாவைப் போல நித்திய மாகாத இவை எனச் சுட்டி யறியக் கூடிய தூல சூக்கும காரண சரீர வடிவ ஐங் கோசங்களையும், நான் என வன் திடம் ஆய் கண்டு- நான் என்று மிக அழுத்த மாக மயங்கி யறிந்து, ஆசநம் ஆதி அனைத்தும் கை விடுத்து - (ஐங் கோசங்களும் யான் அல்லன் யான் பஞ்ச கோசங்கட்கு வே ருய் அவைகளை அறியும் பிரமாபிந்ந பிரத்தியக் காகிய சாக்ஷியே யாவன், அறிதற்கு மநத் தூய்மையும், அதன் ஒருமையும் வேண்டு மாதலால், அத் தூய்மை முதலியன உண்டாதற்கு பயன் கருதாது செய்யு நல் வினைகளும், ஆசந முதலிய யோக சாதநங்களு மாகிய அவற்றுள், ஏதேனு மொன்றைப் பிடித்தால் எல்லாங் கை கூடும் அவ் வா றுள்ள) ஆசந முதலிய எல்லாவற்றையுங் கைப் பற்று நிலைமை யிருந்தும், அவற்றுள், ஒன்றையும் பற்ருது விட்டு, அவலம் ஆய் அலைந்திடும் என்னை - வீணுக உடலை யோம்புதற் காக அங்கும் இங்கும் ஆகத் திரி கின்ற என்னையும், காசினிதனில் வேதாந்த நூல் கருத்தை -இப் பூ வுலகிலேயே உபநிடதங்களி னுண்மைக் கருத்தான அத்வைத சித்தாந்தத்தை, கழறி - (யான் கேட்டு மநங் கொள்ளாத மந்த னுதலால், அடே நீ இக் கருத்தை யுணரா



திருப்பையேல் நீ மாநுடப் பிறப் பெய்தியும் பய னில்லை. துன்ப முன்னை விட்டு நீங்காது. ஆதலால், இக் கருத்தைக் கேட்டு அறிதி எனப் பல வா ருக) இடித் துரைத்து, ஞாநி ஆக்குதற்கு-தத்துவ ஞாநி யாக ஆக்குவதற் காக, காசியில் உறையும் விசுவ நாதரின் சீர் கழல் இணை அநுதிநம் பணிவாம்-காசி க்ஷேத்திரத்தில் எழுந் தருளி யிருக்கின்ற விசுவேசுவரப் பெருமா னுடைய இரண்டு ஆன விழுப்பம் அமைந்த திரு வடிகளையும் நாளும் கடும் பொடுங் கூடி வணங்குவோ மாக எ—று.

'ஐந்து கோசத்தையும்' என்றதில், முற்றும்மை விகாரத்தால் தொக்கது, அவலம்-வீண், 'அவலமாய்ப் போதனன்றோ' (தாயு மானுர்) என வருதல் காண்க. ஐங் சோசம் - அந்ந மயம் - பிராண மயம்-மநோ மயம்-விஞ்ஞாந மயம்-ஆநந்த மயம், என்பன வாம். இங்கு 'மயம்' என்பது விகாரத்தையும், 'வடிவத்தையும் உணர்த்துவ தாகும். 'அந்ந மயம்' என்னும் இடத்து, அந்நத்தாற் ருேன்றிய உடம்பை (தூல சரீரத்தை) உணர்த்திற்று, 'பிராண மயம்' என்பது முதலியவற்றுள், மயம் என்பது, வடிவம் என்பதை உணர்த்திற்று என்க

'கோசம்' என்பது, 'கோஸ:கோஸம்' என்பவற்றின் திரி பாகும் மூடுவது என்பது அதன் பொருள். அதாவது, இங்கு ஆத்மாவை இன்ன தென தெரிய வொட்டாமல் மறைப்பது என்ப தாகும். ஐங் கோசங்களும், யான் கரியன். பருத்தேன் என் கருமை, என் பருமை எனவும், யான் பசித்தேன், யான் நடந்தேன். என் பசி. என் நடையெனவும், யான் நினைத்தேன், என் நினைவு. யான் நிச்சயித்தேன், என் நிச்சயம். யான் கண்டேன் கேட்டேன், என் காண்கை கேள்வி எனவும், யான் விரும்பினேன், என் விருப்பம் எனவும், அகங்கார மமகாரங்களைச் செய்து மறைக்கின்றன என அறிக. 6

பாசம துறுமென் பகையினைப் போக்கிப்
பாருளோர் போற்றவே செய்து,
தூசுறும் மூல தூலவஞ் ஞாநத்
தொடர்பினை நூன்முறை தொலைக்கத்,
தேசுறும் ஆந்ம ரூபத்தை எனக்குத்
தெள்ளமு தெனவிளக் குதற்குக்,
காசியில் உறையும் விசுவநா தரின்சீர்க்
கழல்இணை அநுதிநம் பணிவாம். 7

(இ—ள்) பாசமது உறும் என் பகையினை போக்கி- முதல் முத லாக தூல தேக முதலியவைகளை யான் என என்று பற்றுகின்ற இரு வகைப் பற்றினுலே எழுகின்ற காம வெகுளி முதலிய என் னுடைய அரி ஷட் வர்க்கங் களை, திரு வருளாலே மல விக்ஷேபங்களைப் போக்குதலின் வாயி லாக ஒழித்து. தூசு உறும் மூல தூல அஞ்ஞாநத் தொடர்பினை நூல் முறை தொலைக்க - பின்னர் அவ் விரு வகைப் பற்றையும் உண்டாக்கும்படி யான ஆவரண விக்ஷேப வடிவ இரு சக்திக ளாகின்ற குற்றங்களுடன் கூடிய குற்றங்க ளாகிய மூல அஞ்ஞாந தூல அஞ்ஞாநங் களை சாத்திரக் கர்த்தாக்கள் கூறிய முறைப்படி ஆய்ந் துணரு மா றுணர்த்திப், பின் னெழிப்பதற் காக, தேசுறும் ஆந்ம ரூபத்தை எனக்கு தெள் அமுது என விளக்குதற்கு- அறிவு வடி வான பிரத்திய கபிந்ந பிரம சொரூபத்தை சிதாபாச னுகிய எனக்குப் பாத சமாநாதிகரணத்தால் அபேத மாகத் தெளிந்த அமிர்தம் போல சம்சய விபரீதங்க ளின்றித் தெளி வாக அநர்த்த நிவிர்த்தி யாநந்தப் பிராப்தி வடிவ வீடு பேறு பெற்றதின் பே ருகப் பெற் றிருமாந் திருக்க அறிவிப்பதற் காக, காசியில் உறையும் விசுவ நாதரின் சீர் கழல் இணை அநுதிநம் பணிவாம்-காசி க்ஷேத் திரத்தில் எழுந்தருளி யிருக்கின்ற விசுவேசுரப் பெருமா



னுடைய இரண்டு ஆன விழுப்பம் அமைந்த திரு வடிகளை யும் நாளும் அன்பொடுங் கூடி வணங்குவோ மாக. எ–று.

'இந்தச் சீவனுல் வரு மறு பகை யெலா மிவன் செயல்' (கைவல்ய நவ நீதம்) என்ப வாகலின், 'என் பகை' என்று, காம முதலியவற்றைக் குறிப்பித்தனர் என்க

மூலாஞ்ஞாநம் என்பது, சொரூபத்தை மறைக்கும் அஞ்ஞாந மாகும். தூலாஞ்ஞாநம் என்பது, கடாதி விஷ யாவச்சிந்ந சேதநத்தை மறைக்கும் அஞ்ஞாந மாகும். இதனை, அவஸ்தா அஞ்ஞாநம் எனவும் வழங்குவர்.

பழுதையிற் பாம்பு, இப்பியில் வெள்ளி, கண்ணுடி யில் முகம், என்னும் இவை முதலிய பிரம ஸ்தலங்களில், பாம்பு முதலியவைகள் பிராதிபாஸிக மாகத் தோன்றுத லால், அவற்றின், உபாதாந காரணம் தூலாஞ்ஞாநமே யாகும். தூலாஞ்ஞாநமே காரண மாதலால், பாம்பு முத லிய பொய்த் தோற்றப் பொருள்களின் (அநிர்வசநீயப் பொருள்களின்)நீக்கம் பிரஹ்ம ஞாநத்தால் நீங்கும் மூலாஞ் ஞாந நீக்கத்தா லன்றிப் பழுதை முதலிய ஞாநத்தால் நீங் கும் தூலாஞ்ஞாந நீக்கத்தா லுண்டாகின்றன. அப் பாம்பு முதலியவைகளுக்கு மூலாஞ்ஞாநத்தை உபாதாநம் எனக் கொள்ளின், அவை வியாவகாரிகப் பொரு ளாகக் கொள் ளல் நேரும் அங்ஙன மாயின், அப் பாம்பு முதலியவற் றின் நீக்கம், பழுதை முதலியவற்றின் அஞ்ஞாந நீக்கத்தால் உண்டாகா தெனக் கொள்ளல் நேரும். அங்ஙன மன்றி. அவற்றின் நீக்கம் பழுதை முதலியவற்றின் அஞ்ஞாந நீக் கத்தாலேயே யுண்டாதலால், அவற்றிற் குபாதாநம் தூல அஞ்ஞாநமே ஆகும். மூல அஞ்ஞாநம் ஆகாது எனவும், அத்தியாச நீக்கத்திற் கஞ்ஞாந நீக்கம் உண்டாதல் வேண் டும் என்பது ஒருதலை யன்று, அஞ்ஞாநம் நீங்காமலும், அத்தியஸ்தம் நீங்கலாம் பழுதையிற் பாம்புதோன்று மயக்க

இடத்தில், தண்டம் மாலை முதலியவற்றின் மயக்கம் உண்டாயின், பாம்பு மயக்கம் நீங்குகின்றது அங்குப் பழுதையின் அஞ்ஞானம் நீங்க வில்லை. நீங்காதிருந்தும் பாம் பாகிய மயக்கம் நீங்குகின்றது. இவ் வாறு, மயக்க நீக்கத்திற்கு அஞ்ஞான நீக்கம் வேண்டும் என்ப தில்லை என அறியப் படுதலால், பிராதிபாஸிக வியாவகாரிகப் பொருள்க ளாகிய காரியங்கட் கெல்லாம் மூலாஞ்ஞானமே உபாதானம் எனல் பொருந்தும் எனவும், பல வா ருக நூல்களிற் கூறுதலால், 'மூல தூல அஞ்ஞானத் தொடர்பினை நூன் முறை தொலைத்து' என்றனர்.

வீட் டடைவின் வரைத் தொடர்ந்து நிற்றலால், 'மூல தூல அஞ்ஞானத் தொடர்பினை' என்றனர். 7

சாதக தசைக்கண் விடயமே தடையாம்
சாத்தியம் ஆனபின் இல்லை,
ஆதலால் அனைத்தும் கான்றசோ றதனில்
அறிந்துமே புரையெனத் தள்ளிப்,
பாசமில் பரமாத் துவிதரு பத்தைப்
பண்புடன் எனக்குநன் கருள்வான்,
காசியில் உறையும் விசுவநா தரின்சீர்க்
கழல்இணை அநுதினம் பணிவாம். 8

(இ—ள்) சாதக தசைக்கண் விடயமே தடை யாம்- வீ டடைவிற்கு நெருங்கிய சாதந மாகிய ஞானத்தால் சொரூப சாக்ஷாத்காரம் செய்ய முயலும் அப்பியாச நிலையிலே இகாமுத்திர தார புத்திர தநாதி விடயங்களில் எழும் இச்சையே இடையூ ருகும், சாத்தியம் ஆன பின் இல்லை- அவ்விச்சை சொரூப சாக்ஷாத்காரத்தின் பின்னர் உணடாவ தில்லை (உண்டானலும் கணத்திற் போ யொழியும் மநதிலே பற்றி நில்லா,) ஆதலால்- அவ்வா றிருத்தலால், (அப்பியாச நிலை



யில் இருக்கும்,) எனக்கு - (சிதா பாச ஞகிய) எனக்கு, கான்ற சோ றதனில்-கக்கிய சோற்றில் வெறுப் புண் டாகப் பெற்று அதனை எள்ளி ஒதுக்கி நிற்றல் போல, அனைத்துமே புரை என தள்ளி-இகாமுத்திரார்த்த பல போகங்களுக் குரிய பொருள்கள் அனைத்தையும் துக்க காரணமா யிருத்தலால் குற்றம் உடையன என வெறுத்து நீக்கி, பாசம் இல் பரம அத்துவித ரூபத்தை-துன்பம் இறையும் இல்லாமையால் அழுக் கற்ற மேலான அத்துவித வடிவ சேதநத்தை, பண்புடன் நன்கு அருள - தண் ணளிப் பண்பினலே பாத சமாநாதிகரணத்தால் பிரத்தியக் காகிய நீ முக்கிய சமாநாதிகரணத்தால் பிரம மாக ஆகுதி எனக் கற்பித பேத மாயும், வாஸ்தவ அபேத மாயும், இருக்கும் நிலையுடன் தெளி வாக அருள்வதற் காக, காசியில் உறையும் விசுவ நாதரின் சீர் கழல் இணை அநுதிநம் பணிவாம்—காசி க்ஷேத்திரத்தில் எருந்தருளி யிருக்கின்ற விசுவேசுவரப் பெருமா னுடைய இரண்டு ஆன விழுப்பம் அமைந்த திருவடிகளையும் நாளும் அன்போடுங் கூடி வணங்குவோமாக. எ—று.

வாஸ்தவ பேதமும், கற்பித அபேதமும் உடையதனை அத்துவிதம் எனச் சில கொள்கையினர் உரைப்பது போலன்றி, கற்பித பேத மாயும், வாஸ்தவ அபேத மா யிருத்தலே உண்மை அத்துவித மாகும். அதனைத் தெளிவித்தலே நல் லுப தேச மாகும். என்பார், 'பரமாத்துவித ரூபத்தை' என்றனர்.

இறைவனும், அரு ளிறைவரும், தண் ணளியையே சிறந்த பண் பாகக் கொண்டு படைப்பு முதலிய ஐந் தொழி

லேயும், அநுக்கிரகத்தையும், முறையே யுடைய ராதலால், 'பண்புடன்' என்பதற்குத் தண் ணளிப் 'பண்பினாலே' என உரை உரைக்கப்பட்டது. ஈண்டு, 'உடன்' என்பது, ஒடு உருப்புக்குப் பதி லாக வந்த சொல் லுரு பாகும். ஒடு உருபு கருவிப் பொருளிலும் வரு மாதலால், அதன் பரியாய மான 'உடன்' என்பதற்குங் கருவிப் பொருள் கொள்ளப் பட்ட தென்க.
8

நாசமாம் இந்த உடலினை நான்என்
நாமதி தனைக்களைந் திடவே,
பாசமில் கோவில் ஊர்ப்பதி தன்னில்
பகர்வீர குருஎன வந்து,
மோசகன் ஆகி விளங்கியே என்னை
மோக்கம்ஈ காசிக்கே அழைத்த,
காசியில் உறையும் விசுவநா தரின்சீர்க்
கழல்இணை அநுதிநம் பணிவாம். 9

(இ—ள்) நாசம் ஆம் இந்த உடலினை நான் என்— பிராரத்த கன்மாவசாநத்திலும், தத்துவ ஞாநந் தோன்றிய வுடனும், அழியக் கூடிய கண்கூ டான தூல சூக்கும காரண வடிவ உடம்புகளை நான் என்று மயங்க வைக்கும். நாம் மதிதனை களைந்திடவே - அச்சந் தரக் கூடிய பிராந்தி ஞாநத்தைப் போக்குவதற் காகவே, பாசம் இல் கோவில் ஊர் பதிதன்னில் - அடைவா ரனைவரும் பந்தம் அற்ற பரம ஞாநிக ளாக விளங்கும்படி யான கோவில் ஊர் என் னும் திரு வூரின்கண்ணே, மோசகன் ஆகி பகர் வீர குரு என வந்து விளங்கி- அஞ்ஞாநத்தை ஒழிக்குந் தகுதி யுடை யவ னுய், தத்துவ ஞாநத்தை உண்டாக்கும் மகா வாக்கி யத்தை உபதேசிக்கும் வீர சேகர ஞாந தேசிக மூர்த்தி யாக எருந்தருளி எங்கும் பிரசித்த கிருபா கடாக்ஷ முடையவ



னுக விளங்குகின்ற, மோக்கம் ஈ காசிக்கே அழைத்த-நாயி னும் கடையே னுகிய அடியேனை அடைவார்க்கு வீடு பேற் றைச் சாதந வாயி லாக அளிக்க வல்ல காசி க்ஷேத்திரத்திற் றங்கி வியாகரண தர்க்க மீமாம்சை நூல்களிலும், வேதாந்த நூ லாகிய பிரம சூத்திர முதலிய உத்தர மீமாம்சை நூல் களிலும், வல்லுந னுக்குவதற் காக அழைத் தருளிய, காசி யில் உறையும் விசுவ நாதரின் சீர் கழல் இணை அநுதிநம் பணி வாம்-காசி க்ஷேத்திரத்தில் எழுந்தருளி யிருக்கின்ற விசுவேசுரப் பெருமா னுடைய இரண்டு ஆன விழுப்பம் அமைந்த திரு வடிகளையும் நாளும் அன்பொடுங் கூடி வணங்குவோ மாக. எ—று

நாம்-அச்சம். 'களைந்திடவே' என்பதில், ஏகாரம் பிரி நிலை. வே றென்றுக்தம் இல்லை என்றபடி. பாசம் இன் மையை அடைவிக்கக் கூடிய பதியை, 'பாசமில் பதி' என் றனர். கருவி கருத்தா வாக வரு மாதலின், இல் கோவி லூர் 'பதி'என்பது குறிப்பு வினைத் தொகை. 9

காசிலா இறைவன் கழலிணைப் போற்றிக்,
கண்கவர் புத்தியைச் செய்தே,
காசியில் வசித்துக் கங்கையில் குளித்துக்
கடுந்தவம் புரிந்ததால் வித்தை,
அசிலா அரிய பொருளையும் அளித்தே
அநேகநாள் இருப்பதற் கருளிக்,
காசியில் உறையும் விசுவநா தரின்சீர்க்
கழல்இணை அநுதிநம் பணிவாம். 10

(இ—ள்) காசு இலா இறைவன் கழல் இணை போற்றி-முன்னர் குற்றம் என்பவற்றுள் ஒன்றும் இல் லாத அருள் இறைவ ராகிய வீர சேகர ஞாந தேசிக மூர்த் தியின் திரு வடித் துணைகளை வழிபட்டு வழிபாட்டின் சிறப்பினுல், கண் கவர் புத்தியை செய்து - நோக்குவார்

லேயும், அநுக்கிரகத்தையும், முறையே யுடைய ராதலால், 'பண்புடன்' என்பதற்குத் தண் ணளிப் 'பண்பினுலே' என உரை உரைக்கப்பட்டது. ஈண்டு, 'உடன்' என்பது, ஒடு உருப்புக்குப் பதி லாக வந்த சொல் லுரு பாகும். ஒடு உருபு கருவிப் பொருளிலும் வரு மாதலால், அதன் பரியாய மான 'உடன்' என்பதற்குங் கருவிப் பொருள் கொள்ளப் பட்ட தென்க. 8

**நாசமாம் இந்த உடலினை நான் என்**
**நாமதி தனைக்களைந் திடவே,**
**பாசமில் கோவில் ஊர்ப்பதி தன்னில்**
**பகர்வீர குருஎன வந்து,**
**மோசகன் ஆகி விளங்கியே என்னை**
**மோக்கம்ஈ காசிக்கே அழைத்த,**
**காசியில் உறையும் விசுவநா தரின்சீர்க்**
**கழல்இணை அநுதிநம் பணிவாம். 9**

(இ—ள்) நாசம் ஆம் இந்த உடலினை நான் என் — பிராரத்த கன்மாவசாநத்திலும், தத்துவ ஞாநந் தோன்றிய வுடனும், அழியக் கூடிய கண்கூ டான தூல சூக்கும காரண வடிவ உடம்புகளை நான் என்று மயங்க வைக்கும். நாம் மதிதனை களைந்திடவே - அச்சந் தரக் கூடிய பிராந்தி ஞாநத்தைப் போக்குவதற் காகவே, பாசம் இல் கோவில் ஊர் பதிதன்னில் - அடைவா ரனைவரும் பந்தம் அற்ற பரம ஞாநிக ளாக விளங்கும்படி யான கோவில் ஊர் என் னும் திரு வூரின்கண்ணே, மோசகன் ஆகி பகர் வீர குரு என வந்து விளங்கி- அஞ்ஞாநத்தை ஒழிக்குந் தகுதி யுடை யவ னுய், தத்துவ ஞாநத்தை உண்டாக்கும் மகா வாக்கி யத்தை உபதேசிக்கும் வீர சேகர ஞாந தேசிக மூர்த்தி யாக எருந்தருளி எங்கும் பிரசித்த கிருபா கடாக்ஷ முடையவ



னுக விளங்குகின்ற, மோக்கம் ஈ காசிக்கே அழைத்த-நாயி னும் கடையே னுகிய அடியேனை அடைவார்க்கு வீடு பேற் றைச் சாதந வாயி லாக அளிக்க வல்ல காசி க்ஷேத்திரத்திற் றங்கி வியாகரண தர்க்க மீமாம்சை நூல்களிலும், வேதாந்த நூ லாகிய பிரம சூத்திர முதலிய உத்தர மீமாம்சை நூல் களிலும், வல்லுந னுக்குவதற் காக அழைத் தருளிய, காசி யில் உறையும் விசுவ நாதரின் சீர் கழல் இணை அநுதிநம் பணி வாம்-காசி க்ஷேத்திரத்தில் எழுந்தருளி யிருக்கின்ற விசுவேசுரப் பெருமா னுடைய இரண்டு ஆன விழுப்பம் அமைந்த திரு வடிகளையும் நாளும் அன்பொடுங் கூடி வணங்குவோ மாக. எ—று

நாம்-அச்சம். 'களைந்திடவே' என்பதில், ஏகாரம் பிரி நிலை. வே றொன் றுக்குநம் இல்லை என்றபடி. பாசம் இன் மையை அடைவிக்கக் கூடிய பதியை, 'பாசமில் பதி' என் றனர். கருவி கருத்தா வாக வரு மாதலின், இல் கோவி லூர் 'பதி'என்பது குறிப்பு வினைத் தொகை. 9

**காசிலா இறைவன் கழலிணைப் போற்றிக்,**
**கண்கவர் புத்தியைச் செய்தே,**
**காசியில் வசித்துக் கங்கையில் குளித்துக்**
**கடுந்தவம் புரிந்ததால் வித்தை,**
**அசிலா அரிய பொருளையும் அளித்தே**
**அநேகநாள் இருப்பதற் கருளிக்,**
**காசியில் உறையும் விசுவநா தரின்சீர்க்**
**கழல்இணை அநுதிநம் பணிவாம். 10**

(இ—ள்) காசு இலா இறைவன் கழல் இணை போற்றி-முன்னர் குற்றம் என்பவற்றுள் ஒன்றும் இல் லாத அருள் இறைவ ராகிய வீர சேகர ஞாந தேசிக மூர்த் தியின் திரு வடித் துணைகளை வழிபட்டு வழிபாட்டின் சிறப்பினுல், கண் கவர் புத்தியை செய்து - நோக்குவார்

மநக் கண்ணே அள்ளிக் கொள்ளும்படியான நுட்பப் புத்தியைப் படைத்து, காசியில் வசித்து கங்கையில் குளித்து-காசி க்ஷேத்திரத்திற் றங்கிய விடியற் காலத்திலேயே கடவுண் ணதி யேழனுள் தலைமை வாய்ந்த கங்கா நதியிற் குளித்து, கடுங் தவம் புரிந்ததால்-பொறுதற் கரிய தவச் செயலை மேற் கொண்டமையினாலே, வித்தை ஆசிலா அரிய பொருளையும் அளித்து-பர ஞாந அபர ஞாநங்களையும், அவற்றால் மாயை மாயா காரியங்களுக் குள்ள அசுத்தங்கள் சிறிதும் இல்லாத, தத்துவ ஞாநிக ளல்லாத மற்றையோர்க்குப் பெறுதற் கரிய பிரத்திய கபிந்ந பிரமப் பொருளாகிய சிறப்புப் பொருளையும், பிராப்தத்தின் பிராப்தி யாக அடைய அருள் புரிந்து, அநேக நாள் இருப்பதற்கு அருளி-பெற்ற பிரமப் பிராப்தி யுரம் பெறற் பொருட்டுச் சத் சங்கத்துடன் அங்கேயே தங்கவும் செய்து, காசியில் உறையும் விசுவ நாதரின் கழல் இணை அநுதிநம் பணிவாம்-காசி க்ஷேத்திரத்தில் எழுந்தருளி யிருக்கின்ற விசுவேசுவரப் பெருமா னுடைய இரண்டு ஆன விழுப்பம் அமைந்த திருவடிகளையும் நாளும் கடும் பொடுங் கூடி வணங்குவோமாக. எ—று.

மற்றையோர்க்குக் குணங் குற்றங்கள் மாறி மாறி வருதல் போலன்றி, மைத்திரி முதலிய குணங்களை ஞாநிகள் என்று நீங்கா தமையப் பெறுதலால். 'கா சிலா இறைவன்' என்றனர். இனி உலகப் பொருள்களைத் தனக் கெனப் பற்று திருத்தலே யன்றிப், பணத்தைக் கையினாலுந் தீண்டாத மூர்த்தி வீர சேகர ஞாந தேசிக மூர்த்தி யாதலின், 'கா சிலா இறைவன்' என்றன ரெனலு மாம்.

மிக்க வெய்யில், மிக்க மழை, மிக்க பணிகளைப் பொறுத்துக் காசியில் வசித்தல் அரி தாகலின், 'காசியில் வசித்து, என்றனர்.



தலை சிறந்த புண்ணிய யாறாகிய கங்கை யாற்றில் குளித்தல் எளி தாக வாய்ப்ப தன்றாகலால், 'கங்கையிற் குளித்து' என்றனர்.

கங்கையின் அதி சீதளத்தைப் பொறுத்தலும், வெய்யில் மழை பனி முதலியவற்றைப் பொறுத்தலும், அரி தாகலால், 'கடும் தவம் புரிந்து' என்றனர். இவ் வாறு உற்ற நோய் நோன்று விசுவ நாதரை வழி படலால், அவர். வித்தை ஆசிலா அரிய பொருளையு மளித்தன ரென்ப தாம். முதலிற் குருவை வழிபட்டு, அவ ரருளால் நுண் மதி கைவரப் பெற்றுத் தங்குதற் கரிய காசியிற் றங்கிக் குளித்தற் கரிய கங்கை யாற்றிற் குளிக்கச் செய்து, அச் செயல்களின் மூல மாக, பர ஞாந அபர ஞாநங்களை அளித்து, அவை வாயி லாகப் பிரம சாக்ஷாத்காரம் பெறச் செய்தனர் விசுவ நாதர் என்ப தாம். 10

*திரு வை யாறு, சித ஸ்ரீ நாராயண சுவாமிகள் செய்த நுந்தா ஒளி உரை (முற்றுப் பெற்றது.)*

---

## ராஜ ராஜேசுவரி அம்பிகை ஸ்தோத்திர ரச மஞ்சரி.

### நுந்தா ஒளி உரை.

---

மருளுடை மாந்தர் உறும்பந்தம் நீக்கும்
மாண்பினைத் தன்னதாக் கொண்ட,
தெருளினைத் தெரிந்தே செங்கண்மால் முதலோர்
செய்திடும் தவத்தினை விரும்பிப்,
பொருளினைக் கொடுத்துப் புகழினைப் பெறுது
புநிதநான் நீயென்வாக் கியத்தை,
அருளிடும் ராஜரா ஜேசுவரி அம்பிகை
அடிகளை அநுதிநம் பணிவாம். 1

(இ—ள்) மருள் உடை மாந்தர் - பொரு ளல்லவற்றைப் பொரு ளாகக் கருதுந் திரிபுணர்ச்சி யுடைய மக்கள், உறும் பந்தம் நீக்கும் மாண்பினை தன்னது ஆ (க) கொண்ட தெருளினை - அத் திரி புணர்ச்சியால் தேகாதிகளை யான் என்றும், என என்றும், இறுகப் பற்றிய கட்டவிழ்ந்தொழியும்படி செய்கின்ற மாட்சிமையைத் தனக்கே யுரியதாகக்கொண் டுள்ள தத்துவ ஞானத்தை, தெரிந்தே-அதுவே பெறத் தக்க தெனத் தெரிந் திருந்தும், செம் கண் மால் முதலியோர் செய்திடும் தவத்தினை விரும்பி—அத் தத்துவ ஞானத்தைப் பெற விரும்பாமல், தாமரை மலர் போன்ற செவ்விய கண்களை உடைய இந்திரன் முதலிய தேவர்களும், அவரிற் ருழ்ந்த மக்களும், பிற பொருள்களை விரும்பிச் செய்கின்ற தவத்தை விரும்பி (மகிழ்ந்து,) பொருளினை சொடுத்து-அவர்கள் விரும்பும் பொருள்களை ஈந்து, புகழினை பெறுது-'வேண்டுவார் வேண்டுவதே ஈவான்' என்னும் புகழைப் பெற விரும்பாமல், புசித நான் நீ என் வாக்கியத்தை-உபாதிக ளாகிய அசுத்தங்களை விட்டு, பிரம மாகிய யானே கூடஸ்த ருகிய நீ யென்னும் சுத்தப் பொருளை விடாமல் (விட்டு விடாத) இலக்கணையா லுணர்த்துதலில் நோக்குடைய தத்துவ மசி மகா வாக்கியத்தை, அருளிடும்-உபதேசித்து பிரத்திய கபிந்ந பிரம ஞானத்தை யுண்டாக்குவதிலேயே நோக் குடையவ ளாக இருக்கின்ற, ராஜ ராஜேசுவரி அம்பிகை - ராஜ ராஜேசுவரி யாகிய உமை யம்மையாருடைய, அடிகளை-திரு வடிகளை, அநுதிநம் பணி வாம்-நாடோறும் வணங்குவோ மாக எ—று.

இவ் யாப்பு இயற்றிய ஆசிரியர், தம்மை அண்மிய மாணவர் சுவாமின், இவ் வுலகினைப் பற்றி நிற்பார்க்குத் துன்பமே யன்றி இன்பம் சிறிதும் இருப்ப தாகக் காணப்



பட வில்லையே துன்பம் எதனுல் உண்டாகிறது, அஃது எதனுல் நீங்கும் என வினவ, அவர் கருணை மேலிட்டால், அன்பரீர் தேகாதிகளை யான் எனவும், என எனவும், பற்றும் பற்றினுல் துன்பம் உண்டாகின்றது. அப் பற்றுகள், அப் பொய்ப் பொருள்களை மெய்ப் பொருள்கள் என உணர்வதால் உண்டாகின்றன. அவ் வுணர்வும், மெய்ப் பொருளை இன்ன தென அறியாது நிற்கப் பண்ணும் அஞ் ஞானத்தினுல் உண்டாகின்றது. மெய்ப் பொருள் இன்ன தென அறிந்த அளவில், அவ் வஞ்ஞானம் ஒழியும், அஃ தொழிய பொய்ப் பொருளை மெய்ப் பொரு ளென உணரும் பொய் யுணர்ச்சி ஒழியும், அஃ தொழியவே, யான் என தென்னுஞ் செருக்கு அழியும், அச் செருக் கழியவே, துன்ப மெழாது. (துன்பமில் இன்ப வீடு உள தாகும்) எனக் கூறியருளச், சுவாமின் அவ் வா ருயின், சுவாமிகள், திரு வாய் மலர்ந் தருளிய அஞ்ஞானம் விபரீத உணர்ச்சி, யான் எனது என்னுஞ் செருக்கு இவைகள் எவ் வுபாயத்தால் போகும் என அம் மாணவர்கள் மீண்டும் வினவ, அதற்குச் சுவாமிகள், நீவிர் நன்று வினவினீர். தெய்வ வழிபாடு மிகச் சிறந்தது. தெய்வம் சீவர்கட்கு மெய்ப் பொருள் இன்ன தென உணர்த்துதலிலேயே திரு நோக்குடைய தாகும். பிற பொருள்களை ஈதலில் சிறந்த நோக்குடைய தாகாது. ஆதலால், தெய்வ வழிபாடு செய்தலே மிக எளிய உபாய மாகும். அத் தெய்வம் அன்னையு மப்பனு மாக விளங்குவ தாகு மெனினும், அன்னை யாகக் கொண்டு வழிபடலே சிறந்த தாகும். அதனை வழிபட்டால், திரு வுள மிரங்கிக் குரு வாகத் தோன்றி, மெய்ப் பொரு ளிது வென வுணர்த்துந் திரு வாக்கிய மாகிய பெரு வாக்கியத்தை யுபதேசித்து, அதன் மூல மாக அம் மெய்ப் பொருளை விளக்கும். விளக்கவே, மெய்ப் பொரு ளுணர்ச்சி யுண் டாக அஞ்ஞான

முதலிய யாவும் அழியும். இன்ப வீ டுள தாகும். ஆதலால், அவ் வன்னையை வழிபடல் வேண்டு மென வுணர்த்தினர் என்பதை இப் பா விளக்கி நிற்கின்ற தென்க.

'மலரேந்து சேவடிய மாலென்ப மாலால்
அலரேந்தி யஞ்சலிசெய் தஞ்சப்ப டுவான்' (சீவக
சிந்தா மணி)

என்புழி, 'மால்' என்பது, இந்திரனை யுணர்த்துவது போல, இங்கும் இந்திரனை யுணர நின்றது. 'தாமரைக் கண்ணன்' (வள்ளுவர்) என்புழிப் போல. இங்கும், 'தாமரைக் கண்' என்பது, இந்திரன் கண்களை யுணர்த்திற்று என்க. 1

குருளையென் றுலக மாந்தரைக் கருதிக்
குடிலமில் மநத்தினைக் கொடுத்து,
இருளறுத் துயர்ந்த வறிவினை ஈந்து
இணையில்பேர் ஆநந்தம் விளங்கப்,
பொருளினை புகட்டிப் பூரணப் பிரமம்
பூணுமா றருளிடும் தாயாம்,
அருள்தரும் ராஜரா ஜேசுவரி அம்பிகை
அடிகளை அநுதிநம் பணிவாம். 2

(இ—ள்) உலக மாந்தரை-உலகத்தை மெய் யெனக் கருதிப் பிறந் துழல்கின்ற மக்களை, குருளை என்று எண்ணி- (குரு வாகத் தோன்றி எதி ரிருந்து தத்துவ மசி மகா வாக்கியத்தை யுபதேசித்தாலும், அவர் மந்தத் தன்மையால், அவ் வாக்கியத்தால் அவர்க் குண்டாகும் ஞாநம் மச்கிய ஞாந மாகத் தோன்று மாதலால், அந்த ஞாநத்தால் பந்தம் நீங்காது, ஆதலால், பல சந்மப் பழக்கத்தால், அடிக் கடி வருகின்ற அஞ்ஞாந சந்தேக விபரீதத் தடைகளைப் போக்கித் தெளிந்த ஞாநத்தை யருளுவதற் காக) மந்திக் குட்டிகளைப் போலக் கருதாது பூனைக் குட்டிகளைப் போல



எண்ணி, குடிலம் இல் மநத்தினைக் கொடுத்து - வலிந்து நின்று ரஜோ தமோ குணங்களால் கோடிக் கிடக்கின்ற தன்மையி னின்று நீங்கி நிஜ குண மாகிய சத்துவ குணத் துடன் நேர்மையுட னிருக்கு மநத்தை யளித்து, இருள் அறுத்து- (சிரவண மநந நிதித்தியாசங்களால் அஞ்ஞாநம் சந்தேகம் விபரீத மாகிய) இருளைப் போக்கி, உயர்ந்த அறிவினை ஈந்து - திடாபரோக்ஷ மாகிய ஈடு மெடுப்பு மின்றிய மெய்ஞ் ஞாநத்தைப் பெறு நிலையை யளித்து, பொருளினை புகட்டி-மெய்ப் பொருள் இது என விளங்கச் செய்து, இணையில் பேர் ஆநந்தம் விளங்க-நிகர் அற்ற சீவந் முக்தி யாநந்தந் தடையின்றித் தோன்றி மகிழ்விக்க, பூரண பிரமம் பூணும் ஆறு-பிரத்திய கபிந்ந பிரம மாக நிலைபெறும்படி, அருளிடும் தாயாம்-திருவருள் செய்கின்ற அன்னை யாகிய, அருள் தரும் -வீடு பே றுதவத் துற வற நிலையை முதலில் ஈதலிலேயே நோக்குடையவ ளாக விளங்குகின்ற, ராஜ ராஜேசுவரி அம்பிகை அடிகளை அநுதிநம் பணிவாம்-ராஜ ராஜேசுவரி யாகிய உமை யம்மையா ருடைய திரு வடிகளை நா டோறும் வணங்குவோ மாக எ—று.

மந்தாதிகாரிகளுக்கு மகா வாக்கியத்தை யுபதேசித்தால், அவர்கட்குத் தத்துவ ஞாநந் திட மாக வுண்டாகாது. அதனுல். அவர் பந்தம் எவ் வாறு நீங்கும். அவர்கட் குண்டாகும் ஞாநம், அஞ்ஞாநம் சந்தேகம் விபரீதங்க ளாகிய தடைகளால் மிக்கிய தாக நிலவுமே என வினவ, அஃ துண்மையே யாயினும், தேவி தன் திரு வருட் பாங்கினுலே அவர்களை வலிந்து பற்றித் தூய மநதை யளித்து, சிரவண மநந நிதித்தியாசங்களால், அஞ்ஞாந முதலிய தடைகளை யகற்றித் தெளிந்த ஞாந மாக, அவர் ஞாநம் விளங்கு மாறு மெய்ப் பொருளை யறிவித்து. ஜீவந் முக்தி யாநந்தம் தோன்ற-அப் பிரத்திய கபிந்ந பிரம மாக நிலைபெறு மாறு

செய்வாள். அதனுல், அவர் பந்தம் அழியும். ஆகையால், அவ் வன்னே வழிபாடே வீடு பேறு பெறக் கருதுபவர் செய்யத் தக்க தாகும் என வலியுறுத்திய தாக இப் பாவுணர்த்துகின்ற தென்க.

'புகட்டி' என்பதனுல், வலிந்து நின்று அருள்தல் பெறப்படும். 'கொடுத்து' என்பதும், 'ஈந்து' என்னும் பொருளதே யாகும். 'பூரணப் பிரம்மம் பூணு மாறு' என்பது, பஞ்சகோ சமுங்கடந்து பாழையுந் தள்ளி யுள்ளிற் கொஞ்சமா மிருப்பும் விட்டுக் கூடத்தன் பிரம மென்னும், நெஞ்சமு நழுவி யொன்ருய் நின்றபூ ரணத்தைக் கண்டான்.' (கைவல்ய நவநீதம்) என்பதை நினைப்பிக்கின்றது.

கிருதோபாசகர்கட்கு சீவந் முக்தி யாநந்த முண்டாகும்படி பிரம நிட்டை கைகூடுதல் எளிது என்பதை, 'பூரணப் பிரமம் பூணு மா றருளிடும்' என்பதனுல் விளக்கு கின்றனர். 2

திருவளர் கங்கை முதலவாம் புநிதத்
தீர்த்தங்கள் தோய்ந்துமே காயந்,
தரும்பலன் அனேத தும் தணந்திடச் சாது
சங்கத்தை மேவியே இருக்கப்,
பெரும்பலன் அளித்த பெருமையை யானும்
பெற்றனன் தனதுரு வாக,
அருளிடும் ராஜரா ஜேசுவரி அம்பிகை
அடிகளே அநுதிநம் பணிவாம் 3

(இ—ள்) காயம் தரும் பலன் அனேத்தும் தணந்திட—மநம் வாக்குக் காயங்களாற் செய்த தீச் செய்கைகளின் பலன்களாக வந்த பாபப் பலன்கள் முழுவதும் நீங்க. திருவளர் கங்கை முதல வாம் புநித தீர்த்தங்கள் தோய்ந்



தும்-பாபத்தைப் போக்கிச் சித்த சுத்தி முதலிய திருவை வளர்க்கின்ற கங்கா நதி முதலிய புண்ணிய தீர்த்த நீர்களிலே முழுகியும் (மூர்த்தி தல சேவை செய்தும் வருவதால் நித்தியாநித்தியவஸ்து விவேக முதலிய சாதநங்கள் மேவுதற் குரிய,) சாது சங்கத்தை மேவியே இருக்கப் பெரும் பலன் அளித்த பெருமையை - சத் சங்க மாகிய நல்லா ரிணக்கத்தைப் பொருந்தி யிருத்தற் குரிய பெரிய புண்ணியப் பலனே மூர்த்தி தல தீர்த்த சேவைகளா லளிக்கப் பெற்ற பெருமையை, யானும்- (மந்த னுகிய) யானும், பெற்றனன்-ராஜ ராஜேசுவரி யம்மையின் திரு வருளால் அடைந்தேன், (ஆதலால்,) தன துரு வாக அருளிடும்-சார்ந்தவரைத் தன் வடி வாக (அடைந்ததி னடை வாக) அருள் செய்யும் நோக்குடன் எழுந்தருளி யிருக்கும், ராஜ ராஜேசுவரி அம்பிகை அடிகளே அநுதிநம் பணி வாம்-ராஜ ராஜேசுவரி யாகிய உமை அம்மையா ருடைய திரு வடிகளே நா டோறும் வணங்குவோ மாக. எ—று

சித்த சுத்தியை எவ் வா றளித் தருளுவாள்? மகா வாக்கிய உபதேசத்திற்கும், சிரவண முதலியவற்றிற்கு முரிய சாதநங்களே எவ் வா றளித் தருளுவாள்? என்று விநவிய விநவிற்குக், கங்கை முதலிய தீர்த்த ஸ்நாநம் மூர்த்தி தல சேவை இவைகளால் சித்த மல மறுத்து மேலாஞ் சாது சங்கத்தை மேவச் செய்து, மேலாஞ் சாதநங்கள் மேவச் செய்தருளுவாள் என விடை கூறியதை, இப் பாவாற் குறித்தருளினர் என்க.

'காயம்' எனப் பொதுப்படக் கூறினமையால், நுண்ணுடம் பாகிய மந வாக்குங் கொள்ளப்பட்டன. 'தணந்திட' என்பதனுல், காயம் தரும் பலன் என்பதற்கு, பாபப் பலன் என உரை உரைக்கப்பட்டது. சத் சங்கம் முக்திக்கு வழி

பயத்தலின், 'பெருமையை — பெற்றனன்' என்றனர், 'தோய்ந்தும்' என்ற உம்மையால், மூர்த்தி தல சேவையும் தழுவப் பட்டன என்க 'யானும்' என்பதில் உம்மை இழிவைச் சிறப்பித்தது. 3

உருண்மநங் தன்னை உயர்தியா நத்தால்
ஒருப்பட நிறுத்துவாய் என்று,
அருளினுல் மறைவாய்த் தோன்றியே அங்கு
அறிவித்த நிலைநனி உன்னிப்,
பெருந்திரு அருளால் ஆண்டவள் என்று
பேணியே கனிவுற நின்று,
அருளிடும் ராஜரா ஜேசுவரி அம்பிகை
அடிகளை அநுதிநம் பணிவாம். 4

(இ—ள்) உருண் மநம் தன்னை - சத்துவ ரஜோ குணங்கள் மாறி மாறித் தோன்றச் சுழல்கின்ற வுள்ளத்தை, உயர் தியாநத்தினுல்-உயர்ந்த என்னுடைய வடிவத் தியாநத்தினுலே, ஒருப்பட - ஏகாக்கிரம் ஆகும்படி, நிறுத்துவாய் என்று - நிலை பெறச் செய்தி என்று. அருளினுல் - திரு வுள்ளத் தியல் பாக எழுகின்ற தண்ணளிப் பெருக்கினுலே, மறை வாக தோன்றி-தோன்ருத் துணை யாகத் தோன்றி, அங்கு-உள்ளத்திலே (தோன்றும்படி,) அறிவித்த நிலை நனி உன்னி-உணர்த்தியருளிய தன்மையை நன்ருகக் கருதி, பெரும் திரு அருளால் ஆண்டவள் என்று பேணி - இவ் வன்னை இன்று என்னை மட்டும் அல்லள் பல பத்தர்களையும் இப்படியே பே ரருளாலே அடிமை கொண்டருளியவள் ஆவாள் என்று அவள் பெருமையை உள்ளத்திலே நிலைக்கச் செய்தலால், கனிவுற நின்று - எழுகின்ற அன்பின் பெருக்கால் கசிந்து நின்று, அருளிடும்-அருளைப் பாலிக்கும் திரு நோக்குடன் எழுந்தருளி யிருக்கின்ற,



ராஜ ராஜேசுவரி அம்பிகை அடிகளை அநுதிநம் பணிவாம்- ராஜ ராஜேசுவரி யாகிய உமை யம்மையா ருடைய திரு அடிகளை நா டோறும் வணங்குவோ மாக. எ—று.

மெய்ப் பொருளைத் திட மாக அறிவித்தலால், ஜீவந் முக்தி யாநந்தந் தோன்றி மகிழ்விக்கு மாறு பிரம நிஷ்டை கைகூட அன்னை யாகிய ராஜ ராஜேசுவரி அருள் புரிவாள் என்றீர். மகா வாக்கிய உபதேசத்தா லும், இரண்டாம் சிரவண மநந நிதித்தியாசநத்தா லும், மெய்ப் பொருள் உணர்ச்சி திட மாக உண்டாகு மன்றிச், சீவந் முக்தி யாநந் தந் தோன்றப் பிரஹ்ம நிஷ்டை எளி தாகக் கை கூடாதே என வினவ, நிதித்தியாசநத்தின் பரிபாக அவஸ்தையையே சமாதி யாகு மாதலா லும், கிருதோபாசகர்களுக்குச் சமாதி கைகூடல் எளிதா மாதலா லும், முதலில் தன்னை வழிபாடு செய்கின்றவர்களுக்குப் புற வழி பாட்டைவிட அக வழி பாடு சிறந்த தெனத் தோன்ருத் துணை யாக நின் றறிவித்துத் தன் சகுண வடிவத்தில் பக்தர்கள் உள்ளங்களை நிலை பெறச் செய்தருளுவாள் என்று விடை கூறியதை, இப் பாவால் குறிப்பித் தருளினர் என்க. 4

குருடர்தாம் வேறு குருடர்க்குக் கூறும்
நெறியினைப் போலவே ஞாந
நெறிதெரி யாதார் கூறும்கூற் றினையும்
நினைகவென் றருளிநின் றமைந்து,
கருதுநன் மார்க்கம் கைக்கொள்ளச் செய்த
கருணையை உளத்தினில் உன்னி,
அருளிடும் ராஜரா ஜேசுவரி அம்பிகை
அடிகளை அநுதிநம் பணிவாம். 5

(இ—ள்) குருடர் தாம் - வழியை நேரில் பார்த் தறிய முடியாத குருடர்கள், நெறியினை - வழியின் தன்மையை,

வேறு குருடர்க்கு கூறும்(செயல்)போலவே-தன்னை யொத்த மற்றைய குருடர்களுக்குச் சொல்கின்ற செய்கை போல, ஞாந நெறி தெரியாதார்-தத்துவ ஞாநத்தினை அடையும் வழி தெரியாத அஞ்ஞாநிகள், கூறும் கூற்றினையும்-அதனை அடைவதற் குரிய வழிகள் போலக் கூறுநர் கூற்றினையும், நினைக என்று-கருதி அவர் கூறும் வழியிற் செல்லாது உண்மை யாக எம் அவதார மாகிய குரு உபதேசிக்கும் வழி யாக அந்த ஞாநத்தை அடையக் கருதுவா யாக என்று, அருகு நின்று அமைந்து - என் பக்கத்தே வந்து நின்று அரு ளுரு வாகப் பொருந்தி, கருதும் நல் மார்க்கம் கை கொள்ளச் செய்த - சான்றோர்கள் தத்துவ ஞாநத்தை யடைதற் குரிய மார்க்கம் இதுவே யாம் எனக் கருதுகின்ற நன் மார்க்கத் தைப் பற்றி நிற்பதற் குரியவ னாகச் செய்த, கருணையை உளத்தினில் உன்னி - திரு வருளை மநத்திலே எண்ணி அதற்குக் கைம் மா றாக, அருளிடும்-உண்மைப் பொருளை உணர்த்தும் திரு வருளை யியல் பாக வுடைய, ராஜ ராஜேசு வரி அம்பிகை அடிகளை அநுதினம் பணி வாம்-ராஜ ராஜேசு வரி யாகிய உமை யம்மையா ருடைய திரு வடிகளை நா டோறும் வணங்குவோ மாக. எ—று.

ராஜ ராஜேசுவரி அம்பிகை குரு வாகத் தோன்றி யருளு நெறி தான் சிறந்த தாகுமோ, சைந புத்தர் சாங்கியர் முதலியோர் கூறும் மார்க்கம் சிறந்த தாகாவோ என வினவ, அவை வேத விருத்த மானவைக ளாதலால், (அவர்கள் தத்துவம் தெரியாத அவர்கள்) கூறும் மார்க்கங் கள் குமார்க்கங்க ளாகும். சுமார்க்கங்க ளாகா. ஆதலால், அவை கொள்ளத் தக்கன இல்லை என விடை இறுத் ததை இப் பா நினைப்பிக்கின்ற தென்க.





தெருள்நனி விளங்கத் தேசிக வடிவாய்ச்
சிறந்தகோ விலூரினில் அமர்ந்து,
அருளினால் ஆக்கை களைநனி விளக்கி
அங்கமா தியபணி ஆற்றப்,
பொருளினால் உணர்த்திப் புநிதனாக் கியதன்
பொன்னடி களைத்திநம் புகழ,
அருளிடும் ராஜரா ஜேசுவரி அம்பிகை
அடிகளை அநுதினம் பணிவாம். 6

(இ—ள்) தெருள் நனி விளங்க - உண்டாகும் தத்துவ ஞாநம் திட மாக விளங்கும்படி, சிறந்த கோவிலூர் தனில் - பிரஹ்ம நிஷ்டர்களுக்கு இருப் பிட மாய்ச் சிறந்த கோவி லூரின்கண்ணே, தேசிக வடி வாய் அமர்ந்து - வீர சேகர ஞாந தேசிக மூர்த்தி யாகத் தங்கி, அருளினால்—திரு வருட் பாங்கினால், ஆக்கைகளை பொருளினால் நனி விளக்கி - பஞ்ச கோச வடி வாக விளங்கும் தூல சூக்கும காரண தேகங்களை இவை ஆத்மா வல்ல ஆத்மா வேறு எனக் காட்டு முகத்தால், அவைகள் அநிருத சட துக்க வடிவின என மிக விளக்கி, அங்க மாதி பணி ஆற்ற உணர்த்தி-தூல தேக முதலியன ஆத்மா வல்ல என்னு முணர்ச்சி நன்கு கை வருதலுக் காக அங்க முதலிய நான்கு பணிகளையும் தனக்கு செய்யு மா றறிவித்து, புநிதன் ஆக்கிய தன்-மல விக்ஷேப ஆவரண தோடங்கள் அற்ற மெய்ஞ் ஞாநியாக என்னை ஆக்கிய அக் குருபர வடிவத்தி னுடைய, பொன் அடிகளை திநம் புகழ-பொன் போன் றருமை யான திரு வடிகளை நா டோறும் மறவாமல் புகழ்வதற் காக, அருளிடும் - திரு வருள் செய்தருளுகின்ற, ராஜ ராஜேசு வரி அம்பிகையின் அடிகளை அநுதினம் பணி வாம்-ராஜ ராஜேசுவரி யாகிய உமை யம்மையா ருடைய திரு வடி களை நா டோறும் வணங்குவோ மாக. எ—று.

ராஜ ராஜேசுவரி அம்பிகை குரு வடி வாகத் தோன்றி யருள் புரியு மென்று சுவாமிகள் சுவா நுபவத்தால் உரைத் தருளினீர்கள். அவ் வம்பிகை தேவரீருக்கு எக் குருபர ராகத் தோன்றி யநுக்கிரகித்தனள்? அவர் எழுந்தருளி யிருக்கும் புண்ணிய தலம் எது?. அக் குரு மூர்த்திகள் எவ் வாறு நும்மை மெய்ஞ் ஞானி யாக ஆக்கி யருளினார்கள்? எனத் தங்கட் கைய நீங்கு மாறு வினவிய மாணவர் கட்குச் சுவாமிகள், அவ் வம்பிகை யாகிய காரணப் பிரஹ்மம் என் உபாசனையின் பல னுகக் கோவி லூரில் வீர சேகர ஞாந தேசிகர் எனத் திருப் பெயர் தாங்கி எழுந்தருளி, என்னை ஆத்த முதலிய பணிகளைக் கடைப்பிடிக்கு மாறு செய்தருளி மல முத் தோடங்களு மற்ற மெய்ஞ் ஞானி யாக ஆக்கி யருளினார்கள் என வுரைத்த விடையை இப் பாவாற் குறிப்பித் தருள்கின்றார்கள் என்க.

ஆத்மாவே பொரு ளாகு மாதலால், அதனை விளக்கு முகத்தால் என்பார். 'பொருளினுல்' என்றனர். ஆத்மாவே பொருள் எனப்படும் என்பது, 'பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரும்' (திரு வள்ளுவர்) என்பது முதலிய திரு வாக்கியங்களால் வெளிப்படும்.

ஆத்தம் அங்கம் தாநம் சத்பாவம் எனப் பணி நான்குங் குருவிற்கு மாணவ ரியற்றுவன வாகும். இவற்றின் விளக்கம் வேதாந்த சூடாமணி முதலிய நூல்களை நோக்கிற் புலப்படும்.

6

இருளினைப் போக்கி அருளினை அருள
இன்பமாய் மாமில கிடவே,
பொருளினைப் பெண்ணைப் புதல்வனை மனையைப்
போக்கியே விரத்தனுக் குவதாக்,
கருதுமெய்த் தனது கருத்தினுக் கிசையக்,
காணகுவாய் எனக்குரு வடிவாய்,
அருளிடும் ராஜரா ஜேசுவரி அம்பிகை
அடிகளை அநுதிநம் பணிவாம்.





(இ—ள்) இருளினை போக்கும்-ஆவரண சகித அஞ்ஞானத்தைப் போக்கும் இயல் புடைய, அருளினை அருள-தத்துவ ஞாந மாகிய அருளை ஈதலால், இன்பம் ஆய் மாம் இல கிட - பிரத்திய கபிந்ந பிரமத்தைச் சாக்ஷாத்கரித்தலால், துன்ப மில்லாமல் இன்ப வடிவ மாக மந மானது விளங்குதற் பொருட்டு, பொருளினை - தநத்தில் உள்ள ஆசையையும், பெண்ணை-பெண்கள்பால் வைக்கும் ஆசையையும், புதல்வரை - புத்திரர்கள்பால் வைக்கும் ஆசையையும், மனையை-தங்கி முற் கூறிய மூ வேடணைகளையும் செய்யும் தனக்கு இருப்பிட மான இல்லத்தில் எழுகின்ற ஆசையையும், போக்கியே விரக்தன் ஆக்குவ தா-நீக்கி ஆசையற்றவனாக ஆக்குவ தாக. கருது மெய்த் தனது கருத்தினுக்கு இசைய-கருதுகின்ற தன் னுடைய உண்மை யான எண்ணத்திற்குத் தக்கபடி, காணகுவாய் என - யான் காட்டும் வழியை காணுதி என்று வந் தடையும் ஒவ் வொரு மாணவருக்கும், குரு வடிவாய் அருளிடும் - எனக்குக் குரு வாகத் தோன்றிக் காட்டியது போலக் காட்டி யருளுகின்ற, ராஜ ராஜேசுவரி அம்பிகை அடிகளை அநுதிநம் பணிவாம்-ராஜ ராஜேசுவரி யாகிய உமை யம்மையா ருடைய திரு வடிகளை நா டோறும் வணங்குவோ மாக. எ—று

அம்பிகை, தேவரீருக்கு வீர சேகர ஞாந தேசிக ராக எழுந்தருளி அருள் புரிந்தாள். மற்றைய அன்பர்களுக்கும் தோன்றி யருள்வாள் என்பது நியமமோ என்ன வினவிய மாணவருக்குத், தோன்றி யருளுதல் தப்பாது என்பதைக், குரு வாகத் தோன்றி யருளுவாள் என மீண்டுங் கூறுவதால், விளக்கி யருளினார்கள் என்பதை, இப் பாக் குறிப்பிக்கின்றது. குரு வாகத் தோன்றி யருளுதல் தப்பாது என விளக்கு முகத்தால் யான் என்னுஞ் செருக்கை நீக்குதல் போல, என என்னுஞ் செருக்கையு மாற்றுவர். என என்னுஞ் செருக்குத் தார புத்திர தநம் மனைகளைப் பற்றியே எழும் என்பவற்றையும் விளக்குகின்ற தென்க.

அவிச்சையை, இருள் என்றார். 'இருள்சே ரிருவினை யுஞ் சேரா' (வள்ளுவர்) என்னுந் திருக் குறள் உரையில், 'அவிச்சையை இருள் என்றார்'; இத் தன்மைத் தென நிச்ச யிக்கப்படாமையின்' எனப் பரிமே லழகர் எழுதிய வுரை யை நோக்கித் தெளிக.

இருளைச் சிலர் ஒரு திரவியம் என்பர் சிலர் ஒரு திரவி யத்தின் அபாவம் என்பர். இவ் வா றஃ தொரு படித் தாக நிச்சயிக்கப்படா திருத்தல் போல, அவிச்சையும், சதசத்து முதலியன வாக நிச்சயிக்கப்படா தநிர்வசநீய மாக விருத்த லால், இருள் என வுரு வகிக்கப் பட்ட தென்பது பரிமே வழகர் கருத் தாகலாம்.

இனி இருள் உலகப் பொருள்களை மறைத்தல் போல, அவிச்சை மெய்ப் பொருளை மறைத்தலால், அஃ திரு ளென வுரு வகிக்கப்பட்ட தென்னலும் சாலும். 7

பொருள்நனி விரும்பும் புந்தியை மறையின்
பொருளினைப் புகட்டியே போக்கி,
மருளினை மீண்டும மருவிடா நிலையை
மாவாக்கி யத்தினுல விளக்கி,
அருளினைத் தந்து பஞ்சகோ சமும்யான்
அன்றென அறிகுவாய் என்று,
அருளிடும் ராஜரா ஜேசுவரி அம்பிகை
அடிகளை அநுதிநம பணிவாம். 8

(இ—ள்) பொருள் நனி விரும்பும் புந்தியை-போகத் தின் பொருட் டுலகப் பொருள்களை மிக விரும்புகின்ற சித்த விருத்தியை, அருளினை தந்து-முதலில் சித்த சுத்தியை அடைவதற் காக திரு வருள் பாலித்து, மறையின் பொரு ளினைப் புகட்டி போக்கி-வேதப் பொருள்களை எடுத்து-மாங் கொள்ள உபதேசித்தலால் நீக்கி (மாற்றி), மருளினை



மீண்டும் மருவிடா நிலையை மா வாக்கியத்தினுல் விளக்கி-வேதத்தில் எல்லாப் பொருள்களையும் கூறி யிருத்தலால் உலகப் பொருள்களும் இன்பந் தரத்தக்கனவே யாகும் என-மறுபடியும் மயங்கி அவற்றைப் பற்றித் துன்புறுமல் உண் மைப் பொரு ளிஃதா மென வறிந் துள மாறி யின்புற் றிருக்கும் நிலைமையை வேதங்களில் கூறப்படும் உண்மைப் பொருள் இஃதே யாம் என நன்கு விளக்குதலால், மகா வாக்கியம் எனப் பெயர் பெறுகின்ற, 'தத்துவ மஸி' மகா வாக்கிய முதலிய நான்கு மகா வாக்கியத்தால் விளக்க முற அறியச் செய்து, பஞ்ச கோசமும் யான் அன் றென அறிகு வாய் என்று அருளிடும் - போகாயதந மாகிய தூல தேக முதலிய முத் தேக வடிவ மான ஐங் கோசங்களும் நீ யல்ல வாகையாலும், உன்னுல் உனக்கு வே ருகக் காணப்படு வன வாகையாலும். அவை யான் அல்ல. எனக்கு வே ருகி யுள்ளவை. என்று நீ திட மாக அறிகுதி என்று குரு வாகத் தோன்றி யருளுகின்ற, ராஜ ராஜேசுவரி அம்பிகை அடி களை அநுதிநம் பணி வாம்-ராஜ ராஜேசுவரி யாகிய உமை யம்மையா ருடைய திரு வடிகளை நா டோறும் வணங்கு வோ மாக. எ—று.

உறையு மிடத்தைக் கல்லு மிட்டிகையும் போட்டு உர முறக் குற்றிக் குற்றி யுறைப்பித்தல் போல, மெய்ப் பொருளை யுணர்ந் துள மாறி யின்புறு மா றுண்டாகு மெய்ஞ் ஞாநந் திட மாதற்குக் குரு வாகத் தோன்றிய வம் பிகை பலபடி எடுத் துரைப்பாள் என மாணவர்கட்குச் சுவாமிகள் உரைத்ததை, இப் பா முதலியன விளக்குகின் றன என்க.

தா ஞகை வழிபடு மாணவர்கட்கு வேதப் பொருள் களை எடுத்து விளக்குவாள் என்பார், புகட்டி' என்றனர். அன்பர்கள் அனைவரும் இன் புறுத்துங் குழந்தைகள் என எண்ணி யருள்வாள் என்பதுந் தோன்ற, 'புகட்டி' என்ற னர் எனலு மாகும். 'குருவருள் கூட்டிற் கூடும் கூட்டா

தேல் கூடா தென்றுன்'(சீடாசாரம்) என்ப வாகலின், குரு வருளால் அன்றி, மெய்ஞ் ஞாநம் அடைதல் இன்மையின், 'புகட்டி' என்றனர் எனினு மாம். இகாமுத்தரங்களில் உள்ள பொரு ளெல்லாம், 'பொருள்' எனப்படுதலின், 'பொருள் நனி விரும்பும்' என்றனர். இனித் தநத்தைப் பற்றியே முதலில் ஆசை யெழு மாதலால், அது கருதி, 'பொருள் நனி விரும்பும்' என்ரு ரெனினு மாம்.

விழைவெ னப்படு கின்றது மென்மல, அழல்வி ரிந்தக நகத்த ரும்பி, (பாகவதம்) என்பதனுல், பொன் முதலிய தநத்தில், முதலில் ஆசை எழும்பும் என்பதையும், அது, மனைவி மகார் முதலிய பொருள்களில் தழைத்துப் படர்ந்து செழிக்கும் என்பதையும் அறிக

அல்ல எனற்பாலதை, அன்று என ஒருமை வாசகத் தாற் கூறினர். 'பஞ்ச கோசமும்' எனத் தொகுத் தொரு மைப்படுத்திக் கூறியதா லென்க.

'தன்மை சுட்டலு முரித்தென மொழிப, அன்மைக் கிளவி வேறிடத் தான' (தொல்-சொல்-கிழவி யாக்கம்) எனக் கூறுதலால், அன்மைக் கிளவி துணிந்து தழுவாத பொருட்கண்ணும் வரும் என்பது பெறப்படுதலின், 'பஞ்ச கோசமு மன்று' என மறுக்கப்படும் பொருண் மேல் அன்மைக் கிளவி வந்துள தென்க. இது சேனுவரையர் உரைகொண்டு எழுதப்பட்ட தென்க. 8

கருணை நன் கியைந்தே எழுவகைப் பிறப்பும்
கழன் றிடும் வழிகளை அருளிக்,
கருணையில் சீவர் களைப்பிணிப் பித்துக்
காத்தருள் புரிந்திடு தலமாம்,
கருணைவா ரிதியாய்க் களருறை வீர
சேகர இறைகழல் பணிய,



அருளிடும் ராஜரா ஜேசுவரி அம்பிகை
அடிகளை அநுதிநம் பணிவாம். 9

(இ-ள்) கருணை நன்கு இயைந்து - அருள் பெரிது பொருந்தி (பேரருள் படைத்து,) கருணையில் சீவர்களை பிணிப்பித்து-முத்திக்கு வித்தாகத் தோன்றி மெய்ஞ் ஞானத் தை யளிக்கத் தொடக்க சாதந மாக விளங்கும் அருள் சிறி தும் இல்லாத சீவர்களையும் தன் வயப்படுத்தி, எழு வகைப் பிறப்பும் கழன்றிடும் வழிகளை அருளி - 'ஊர்வ பதினென்ரும்' எனக் குறிப்பிடும் எழு வகை யான பிறவி களும் தா மாக ஒழிந்து போகும்படி யடையக் கூடிய பரம் பரா சாதநமும், நேர் சாதநமும், ஆக விளங்கும் வழிகளைத் தெரிந் தடையும்படி, அவற்றை இவை யாம் என உபதே சித்து, காத் தருள் புரிந்திடும்-அப் பிறவிப் பெருங் கடல் களிற் புக் கழுந்தி புக் கழுந்தித் துன்புறும்ற றடுத் தருளு கின்ற. தலம் ஆம்-முத்தித் தலம் ஆகிய, களர் கருணை வாரிதி ஆய் உரை வீர சேகர இறை கழல் பணிய - திருக் களர் என்னும் திருத் தலத்தின்கண்ணே எழுந் தருளி யிருக்கின்ற தன் அவதார மாகிய கருணைக் கட லாகிய வீர சேகர ஞாந தேசிக மூர்த்தியின் திரு வடிகளை யன்புடன் வணங்கி வழிபட் டுய்வு பெறும்படி, அருளிடும்-திரு வருள் புரிகின்ற. ராஜ ராஜேசுவரி அம்பிகை அடிகளை அநுதிநம் பணி வாம்-ராஜ ராஜேசுவரி யாகிய உமை யம்மையா ருடைய திரு வடிகளை நா டோறும் வணங்குவோ மாக. எ-று.

நல்லோர் உறைகின்ற தலங்கள், அவர் நல்லெண்ணங் களைத் தம்பாற் கொள்ளுதலால், அவையும், அந் நல்லோர் செய்யும் செயல்களைச் செய்ய வல்லன வாகின்றன என்ப. ஆதலால், 'கருணை நன் கியைந்து... காத் தருள் புரிந்திடு தலம்' என்றனர். 'நாடா கென்றே காடா கென்றே, அவலா கென்றே மிசையா கென்றே, எவ்வழி நல்லவ

ராடவர், அவ்வழி நல்லை வாழிய நிலனே' (புற நா னூறு) என்பது முதலிய சான்ேறார் செய்யுள்களாலும், ஆன்ேறார் கூற்றுக்களாலும், நல்லோர் பண்பு, அவர் உறையும் நிலத்திற் காகும் என்பதை அறியலாம்

ஸ்ரீ வீர சேகர ஞான தேசிக மூர்த்திகள் கழநியம்பதியில் எழுந்தருளிய தன்றித், திருக் களரிலும் எழுந்தருளிச் சமாதி கொண்டருளினர். அவர் திரு வடிகளை நன்றி மறவாமல், யான் இன்றும் வழிபடுகின்றவ ைகயம்பிகையருளால் நிலவித் திட ஞாநியாக இருக்கின்றேன். இவ்வாறே என்றும் குரு வழிபாடு செய்தன னன் றென மாணவருக் கறிவித்ததை யிப் பாக் குறிப்பிக்கின்றது.

'அவ னருளாலே அவன் ருள் வணங்கி' (திரு வாசகம்) என்பதை, 'இறைகழல் பணிய அருளிடும்' என்பது, நினைப்பிக்கின்றது. 9

அருளைந்து நான்கு விதமுக்கோ ணத்தால்
ஆகநாற் பதுமுக்கோ ணமதாம்,
பொருள்விளக் கிடுநாற் கோணமூ வட்டம்
புனைத்தளம் அட்டசோ டசமாம்,
உருள் வடி வான கோணமொன் றுடனே
உறுமைம்பத் தோரெழுத் தாக,
அருளிடும் ராஜரா ஜேசுவரி அம்பிகை
அடிகளை அநுதினம் பணிவாம். 10



(இ—ள்) அருள் ஐந்து நான்கு வித முக் கோணத்தால்- அருள் குடி கொண்ட சிவை வடி வான முக்கோணம் ஐந்தும், சிவ வடி வான முக் கோணம் நான்கு மாகிய கோணம் ஒன்பதோடு, ஆக- (அவற்றின் பேதங்க ளாகப் பொருந்திய முப் பத்து நான்கு முக் கோணக்களும்) பொருந்த, பொருள் விளக்கிடும்- (தனித் தனியான பரதேவதையின் சம்பந்த மான) பொருள்களையும், அதன் மெய்ப் பொருளையும், விளக்கும்படி யான (நிலையில் நிலவுகின்ற), நாற் பது முக் கோணமது ஆம்- நாற் பத்து முக் கோண மாகிய (ஸ்ரீ சக்கரத்தை), நால் கோணம்-(அந்த ஸ்ரீ சக்கரத்திற்கு வெளி அர ணாக நான்கு திசையிலும் நான்கு வாசல் உள்ள மூன்று ரேகை வடி வான)நான்கு பக்க முக்கோணங்களும் (பூ புரங்களும்) மூ வட்டம்-அவற்றின் உள் ளாக மூன்று ரேகை வடி வாய் மேகலை என்னும்படி விளங்கும் மூன்று வளையக் கோணங்களும், அட்ட சோடசம் ஆ(க)- (அந்த வளையக் கோணங்களுக்கும், அந்த நாற் பத்து முக் கோணத்திற்கும், இடையில் நாற் பத்து முக் கோணத்தை அடுத்து) எட்டும் அவற்றிற்கு மேலே பதி னாறும் ஆக, புனை தளம்- சுற்றி இரு வளையங்க ளாக அலங்கரித்து விளங்குந் தளச் சுற்றுக்களும், உருள் வடிவு ஆன-உருட்சி யான (ஊர்த்துவ முக முக் கோணம் ஐந்தும், அதோ முக முக் கோணம் நான்கும் ஆக நாற் பத்து மூன் றன் நடுவே விளங்கும் ஒன்பது கோணங்களில் நடுக் கோண மான சக்தி கோண மொன் றன் நடுவே விளங்கும்), கோணம் ஒன்றுடனே-பிந்து கோணம் ஒன்று மாகிய இவைகளுடன், உறும் ஐம் பத்து ஓர் எழுத்து ஆக-எட்டுப் பாக மாகப் பொருந்தும் ஐம் பத் தோர் எழுத்துக்களும், மறைந்தும், வெளிப்பட்டும் விளங்க, அருளிடும் - அன்பர்கள் வழிபட் டுய்யு மாறு அமைத்து அதன் வடி வாகவும் விளங்கியருளுகின்ற, ரா ஜ ரா ஜே சு வ ரி அம்பிகை அடிகளை அநுதினம் பணிவாம். ராஜ ராஜேசுவரி யாகிய உமையம்மையா ருடைய திரு வடிகளை நா டோறும் வணங்குவோ மாக. எ—று.

ஆக நாற் பத்து முக் கோண மாக விளங்கும் சக்கரத்தை அருளிடும் எனப் பொருள் காண்க.

''நாற் பது முக் கோணம தாம்'' என்பது, நாற் பத்து முக் கோணம் என்றதன் விவகாரம் என்க. கோணம் என்பது, இங்கு முக் கோணத்தின் மே னின்ற தாகக் கொள்க.

சில சான்ருேர், பிந்து வைச் சேர்த்து நாற் பத்து நான்கு கோண மெனவும் வழங்குவர்.

நடுவில் ஊர்த்துவ முக மாக வுள்ள ஐந்து முக் கோணங்களும், அதோ முக மாக வுள்ள நான்கு முக் கோணங்களும் ஆகிய ஒன்பது கோணங்களும், அவற்றின் நாற் புரமும், அகன்றும் நெருங்கியும் ஊர்த்துவ முக மாகவும், அதோ முக மாகவும், விளங்கும் முப் பத்து முக் கோணங்களும் சேர்ந்து, நாற் பத்து முக் கோண சக்கரம் ஆகும்.

இச் சக்கரத்தை அடுத்து எட்டுத் தளங்கள் சுற்றி வட்ட மாக விளங்கும், அவற்றின் மேலே, பதினாறு தளங்கள் சுற்றி வட்ட மாக விளங்கும். அவற்றின் மேலே, மூன்று ரேகைகள் வளைய மாக நெருங்கி விளங்கும். அவற்றின் மேலே மூன்று ரேகைகள் நாற் புரமும் அரண் போல நாலு வாசலுடன் விளங்கும்.

நாற்புற அரண் போல விளங்கும் மூன்று ரேகைகள் வாசல் இன்றியும் விளங்கும் எனவும் கொள்வர்.

ஸ்ரீ சக்கரத்தின் நடுவே விளங்கும் ஒன்பது கோணத்தில், நடுவே விளங்குவ தான சக்தி கோணத்தி னடுவே பிந்து கோணம் விளங்கும். (சக்கரத்தின் நடுவில் பிந்து விளங்கும் எனக் காண்க)



அச் சக்கரங்கள் எட்டுப் பாகம் ஆவது. உயிர் பதினாறும், முதற் பாகம் எனவும், க-வர்க்கம் ச. வர்க்கம் ட. வர்க்கம்-த. வர்க்கம்-ப. வர்க்கம் என்னும் ஐந்து வர்க்கமும், இரண்டு-மூன்று, நான்கு-ஐந் தாம் பாகங்கள். ஆகப் பாகம் ஆறும் எனவும், யரலவ என்பன ஏழாம் பாகம் எனவும், ஷ ஸ ஹ ள என்பன எட்டாம் பாகம் எனவும் கொள்ளப் படுத லாம் என்க.

எல்லா முக் கோணங்களும், ஒன்பது முக் கோணங்களின் வகை என்பது தோன்ற, ''வித முக் கோணம்'' என்றனர் என்க.

இன்னும், ஸ்ரீ சக்கரத்தைப் பற்றி நன்கு அறிய விரும்புவோர்கள் ஜகத் குரு சங்கராச்சாரிய ஸ்வாமிகள் இயற்றிய பிரபஞ் சார நூல்களையும், அதன் உரை யையும், ''சௌந்திரிய லஹரி'' முதலிய நூல்களையும், அவற்றின் நல் லுரைகளையும் நோக்கித் தெளிக.

ஸ்ரீ சக்கர மானது, பிண்டாண்ட சாரசரப் பொருள் களையும், அவற்றின் உபா தானத்தையும், உபாசனைக் கேற்பத் தேவியின் பேதங்களையும், எல்லாவற்றிற்கும் அதிட்டான மாகிய பரதேவதை யாகிய சச்சிதானந்த மெய்ப் பொருளையும், விளக்கி நிற்பது என்பார், ''பொருள் விளக்கிடும்'' என்றனர் என்க.

இக் கவி ஸ்ரீ சகக்ரம் பற்றிச் சான்ருேர் கூறப், பொது வாக அறிந்த மாணவன் ஒருவன், சிறப் பாக அதைப் பற்றித் தெரிந்து, வரைந்து வழிபட எண்ணி வினவ, அவனுக்குப் பகர்ந்த விடையைப் பலருக்கும் வெளிப் படுத்த, அச் சக்கரம் அவ் வா றுள தென்பதும், பிறவுந் தோன்றக் கூறுகின்றது. 10

ராஜ ராஜேசுவரி அம்பிகை தோத்திர ரச மஞ்சரியும்,
திரு வையாறு சங்கத்து. சித நாராய ணசுவாமிகள்
எழுதிய நுந்தா ஒளி உரையும் (நித்தியப் பிரகாச உரையும்)
முற்றுப் பெற்றது.

உ
சிவ மயம்.

## பாண்டி நாட்டுக் காரைக் குடி,

# கொப்புடையம்மன் தோத்திர ரசமஞ்சரி,

## நுந்தா ஒளி உரை.

பார்தனில் வாழும் மாந்தர்கள் சுகிக்கப்
பலதொழில் செய்துமே இருக்க,
ஆர்வம தாக அண்ணலின் அடியை
அன்புடன் இறைஞ்சியும் ஆளக்,
காரிருள் போன்ற உளத்தர்யாம் எண்ணிக்
கனிவுடன் நின்னைவந் தடைந்தோம்,
காரையில் வாழும் கொப்புடை அம்மை
கழல்இணை அநுதினம் பணிவாம். 1

(இ—ள்) பார்தனில்-மண்ணுலகிலே, வாழும் மாந்தர்கள்-உறைகின்ற மக்கள் (யாவரும்), சுகிக்க-(துன்பம் இன்றி) இன்பத்தை அடைவதற்காக, பல தொழில் செய்தும் இருக்க-உழுதொழவு வரைவு வாணிபம் சிற்பம் வித்தை முதலிய பல தொழில்களைச் செய்து கொண்டிருக்கவும், ஆர்வ மது ஆக-(யாங்கள் அவர்களைப் போல இல்லாமல்) மிக விருப்புடன், அண்ணலின்-பிரம்மா விஷ்ணுக்கள் முதலிய எல்லாத் தேவர்களைப் பார்க்கினும் சிறந்த சிவ பெருமானுடைய, அடியை-திரு அடிகளை, ஆள-(அவர் எங்களை) அடிமை கொண்டருளுவதற்காக, அன்புடன்-அன்போடு, இறைஞ்சியும்-வணங்கி வழிபட்டும் (அவர் ஆளாமையினுல்). கார் இருள் போன்ற உளர்த்தர் யாம்-கார் காலத்திருள் போல இருள் படைத்த உள்ளத்தை உடைய யாங்கள், எண்ணி- (ஆளாமைக்கு முன்னிலை யாதென்று) கருதி (முன்னிலை இது வாகும் என்) றறிந்து, கனிவுடன் நின்னை வந்து அடைந்தோம்-அன்பினல் நெஞ்சம் கசிந் துருகப் பெற்றுத் தாயாகிய நின்னருள் பெற்று, அச் சிவ பரம் பொருளை அடைந், தவராளும்படி நின்னை விரைந்து வந் தடைக்கல மாகப் புகுந்தோம் (புகுந்து), காரையில் வாழும் கொப் புடை அம்மை-காரைக் குடியில் (அன்பர்களின் வழிபாட்டிலே மகிழ்ந்து பிற பதிகளை நோக்காது) உறைகின்ற கொப்புடை நாயகியே, கழல் இணை அநுதினம் பணிவாம்-நின் திரு அடிகளிரண்டையும் என்றும் இடைவிடாமல் வணங்குவோ மாயினேம் (நீ யருள்வா யாக) எ—று.



இதில், தன்னெடு கலந் துறையும் தன் னிகர் அடியவரையும், தன் மாணுக்கரையும், உளப் படுத்தி, "நின்னை வந் தடைந்தோம்" எனவும், "பணிவாம்" எனவும் கூறினர்.

"தான் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்" (தாயுமானுர்) என்று கருதல் பேரருள் படைத்த பெரியார்க் கியல் பாதலின் என்க.

கோயிலூரி லிருந்த பரமேட்டி குருவும், பரம குருவும், தம் குருவும், வழிபட, அவ் அம்மை சின்றமையால், அவர் அடியவர்க ளாகிய யாங்களும் அவ் வம்மையை வழிபடலும், வழிபட்டு அவ் வம்மையா ரருளப் பெறலும் உரிமை யாகும் என்று கருதிக் கூறினர் எனினும் ஆம். இருள் என்றது-ஆவரண இருளை

"அவ னருளாலே அவன் ருள் வணங்கி" என்பதனுல், அருள் வடிவாகிய கொப்புடையம்மன் திருவடிகளை வணங்குதலே இறைவன் குருபரனுக எழுந் தருளித் தத்துவ ஞாநத்தை யளித் துயிர்கள், மெய்ப் பொருளிது வெனத் தேர்ந்து, ஆறியிருக்க அருள் புரியும் வழியாகும் என்பது இதனுற் குறிப்பிக்கப்பட்டது. 1

ஊரையே விட்டு உன் அடி துணை என்
றுன்னியே உன்னை வந் தடைந்தேன்,
பாரையாம் எனது மநந்தனைப் பழமாப்
பழுத்திடத் தனியருள் புரிந்து,
நாரைகொக் கெனவே உண்மையை நாடி
நல்லுணர் வோடுநான் இருக்கக்,
காரையில் வாழும் கொப்புடை அம்மை
கழல்இணை அநுதிநம் பணிவாம். 2

(இ—ள்.) ஊரையே விட்டு-(எந்தை தந்தை தந்தைக்கும் அவர்கட் காப்பா லுள்ளவர்கட்கும் உறைவிடமாய் எனக்கும் உற்றார் உறவினர்களுடன் உறைவதற் குரிமை இடமாய் நில மனை மாடு முதலிய என் பொருளுடன் இணைந்த தாக வுள்ளதும் ஆன் றவிந் தடங்கிய கொள்கைச் சான்றோர் பலர்க் குறைவிடமானதும். யான் கண்டதையே கருதி முடிக்கும் இளைஞரும் பிற நலன்களும் நிறையப் பெற்றதும், ஊ ரெனப்படுவது தேவை மா நகரே எனப் புகழ்ச்சிக் கிலக்கானது மாகிய தேவ கோட்டைப் பதியை (அதுவும் பற்றிற் கேது வாக இருத்தலால், கான வர் வலையிற் பட்டுக் கை தப்பி ஓடும் மான் போல)ப் பற்றறு விட்டு ஓடி வந்து (கோயி லூரில் எழுந்தருளியிருக்கும் வீர சேகர ஞாந தேசிக மூர்த்திகளை யடி வணங்கித் தத்துவ ஞாநத்தைப் பெறுவதற்கு) உன் அடி துணை என்று உன்னியே உன்னை வந்து அடைந்தேன் உன் அடித் துணைகளே துணை புரியும் என்று உறுதியாக எண்ணி அருள் வடி வாகிய நின்னை அடைக்கலம் ஆக வந்து அடைந்தேன், பாரை யாம் எனது மநந்தனை பழ மாம்-(தா யாகிய நீ) பாரை போல இறுகிய எனது உள்ளத்தைப் பழம் போல. பழுத்திடத் தனி அருள் புரிந்து, கரையும் படி ஒப் பற்ற அருள் செய்தலால், நாரை கொக்கு என வே அக் கோயிலூர்க் குருபரை யணுகி யடி வணங்கி அக் குரு பரர் வேதாந்த நூல் களை உபதேசிக்கச் சிரவணித்து, அக் குரு மூர்த்தியின் அடியவர் குழாங்களு



டன் கூடி மநநஞ் செய்து, தக்க மீந் வரு மளவும் உடலை யொடுக்கி மீனையே நாடி இருக்கும் நாரையையும் கொக்கையும் போல. உண்மையே நாடி-மெய்ப் பொருளை நுணுகித் தெளிந்து (நிதித்தியசித்து), நல் உணர்வொடு யான் இருக்க- (பிரமாண பிரமேய கத ஐயம் முழுவதும் நீக்கிப் பெற்ற) திடாபரோக்ஷ ஞாநத்தை பெற்றேன். பெற்ற அந்த ஞாநத்துடன் (சீவந் முக்தி ஆநந்தத்தின் பொருட்டு) நிர்விகல்ப சமாதி யடைந்து, ஆறி யிருப்பதற்கு (அருள் புரிவதால்), காரையில் வாழும் கொப்புடை யம்மை-காரைக் குடியில் எழுந் தருளி யிருக்கின்ற கொப் புடை அம்மையே, கழல் இணை அநுதிநம் பணிவாம்-மீண்டும் நின் திரு வடித் துணை மலர்களை நன்றி மறவாமல் நா டோறும் வணங்குவோ மாக. எ—று.

''பழ மாப் பழுத்திட'' என்பது, மநம் பக்குவப்பட என்பது பட நின்றது அதிட உணர்வு நல் உணர் வாகாமையால், திட உணர்வு, நல் உணர்வு எனப்பட்டது. திட வுணர்வே துன்பமி லின்பினை யளித்தலின், நல் உணர்வு எனப்பட்டது எனல் சா லும். இன் பளிக்கும் பொருளையே சான்றோர் நல்லது என்ப ராதலின் என்க. 2

பேர்தனை விரும்பிப் பெருமுத்தி ராமப்
பெயரினை லிங்கத்திற் காண,
ஊர்தொறும் சென்ற துறவரு ஞசல
உயர்நந்தி தனையுமே வணங்கிக்,
காரிருள் நீக்கும் கருணைமா நிதியைக்
கநபலி பீடத்தில் வணங்கக்,
காரையில் வாழும் கொப்புடை அம்மை
கழல்இணை அநுதிநம் பணிவாம். 3

(இ—ள்) பேர் தனை விரும்பி-மெய்ப் பொருள் தா னாக இருத்தலை அறிந்து ஆறியிருப் பதற்கு விருப்பம் கொண்டு வந்த எம்மை (அவ் வாறு ஆறி யிருக்கச் செய்த

எங் குரு பரரை எமக் களித்த எங் குரு பரரின் குருபரரும், அவர் தம் குரு பரரு மாக விளங்கிய, பெரும் முத்தி ராமப் பெயரினை-செய்தற் கரியனவற்றைச் செய்தலும், பெறுதலும் உடைமையால் பெருமை வாய்ந்த முத்தி ராம லிங்க ஞான தேசிக மூர்த்தி என்னும் திருப் பெயரை உடைய குரு மூர்த்திகளை, லிங்கத்தில் காண-அக் குரு மூர்த்திகளின் சமாதியில் நிலைப்பித்த சிவ லிங்கத்தில் சிவ மாகக் கண்டு களிக்கவும், ஊர் தொறும் சென்ற-பொருந்தி வாழ் இடம் ஒன்று உண்டாகில் பொருந்திடும் பற்று என்று எண்ணி ஓர் இடத்தும் இருந்திலன் ஆகி யாதும் ஊரே எனச் சென்று ஊர் எங்கும் உண்பவன் ஆகி வாழ்ந்து, அம் முத்தி ராம லிங்க ஞான தேசிக மூர்த்திகளின் சமாதிச் சிவ லிங்கத்தின் எதிர்ப்பாகத்தில் சமாதி யுற்று, அதன் மேல் நந்தி யெம் பெருமானை அமைக்க, நந்தி யெம் பெருமானாக விளங்கும், துறவு அருணாசல உயர் நந்திதனையுமே வணங்க-கடும் துற வெய்திய அருணாசல ஞான தேசிக மூர்த்திக ளாகிய அந்த உயர்ந்த நந்தி யெம் பெருமானை கண் குளிரக் கண்டு களித்து வணங்கவும், கார் இருள் நீக்கும் கருணை மா நிதியை கன பலி பீடத்தில் வணங்க-கார் காலத்து இருளை ஒத்த உள்ளத்தில் அநாதி யாக அமைந்த அஞ்ஞான இருளை அண்மிய மாணவருக்கு அகற்றும் பெருந் தகைமையினால் கருணா நிதி எனச் சிறப்புப் பெயர் பூண்ட சிதம்பர ஞான தேசிக மூர்த்திக ளாகிய எம் பரம குருபரரை விழுமிய பலி பீடத்திலே கண் குளிரக் கண்டு வணங்குதல் முதலிய பழிபாடு செய்யவும் (அருள் புரிந்த), காரையில் வாழும் கொப் புடை அம்மை கழல் இணை அநுதினம் பணி வாம்-காரைக் குடி என்னும் பே ரூரிலே எழுந்தருளி யிருக்கின்ற கொப் புடை அம்மையே நின் இரு திரு வடி மலர்களையும் என்று வணங்கி வழிபடுவோ மாக. எ—று.

"பெயர்" என்பது, பேர் எனத் திரிந்தது பெயர்-பொருள். இது, "பெயர் நிலைக் கிளவி காலந் தோன்றா"



(தொல்-சொல்) என்பது முதலிய இடங்களை நோக்கின் நன்கு விளங்கும்.

நந்திக் கடுத் தண்மையில் இன்றிச், சிறிது சேய்மையில், தனிப் பலி பீட மாகச் சிறப்புற அமைந் திருத்தலின், 'கன பலி பீடம்' எனக் கூறப்பட்டது. 3

வீரைமா தவன்நல் வாசிட்ட நூலை
விரிவதாப் பொருணனி விரித்துப்,
பேருரை செய்யும் முத்திரா மேசப்
பெரியவன் இணை அடி வணங்கச்,
சார்உடல் மூன்றும் தள்ளிஉன் சொருபஞ்
சாருவாய் என்றுப தேசிக்கக்,
காரையில் வாழும் கொப்புடை அம்மை
கழல்இணை அநுதினம் பணிவாம். 4

(இ—ள்.) வீரை ம தவன் நல் வாசிட்ட நூலை-வட மொழியில் ஆறா யிரங் கிரந்த மாக இருந்ததைத் தமிழில் இரண் டாயிரத்தைம்பத் தைந்து செய்யு ளாக மொழி பெயர்த் துதவிய வீரை ஆள வந்தாரது திரு வாக் காகிய வாசிட்ட நூலை, விரிவ தாப் பொருள் நனி விரித்து-விரிவு டைய தாகப் பொருள் நன் றாக விளங்கும்படி பெருக்கி. பேர் உரை செய்யும்-விருத்தி யுரை உரைத்து விளக்குதலில் வல்ல, முத்தி ராமேசப் பெரியவன் இணை அடி வணங்க-பரமேட்டி குரு பர ராகிய முக்தி ராம லிங்க ஞான தேதிக மூர்த்திக ளாகிய செயற் கரிய செய்தலால், பெரியவர் எனச் சிறப்பிக்கப்படுகின்ற அம் முனிவர் பெருமா னுடைய ஆவிர்ப்பாவ மாகிய எம் குரு பர ராகிய வீர சேகர ஞான தேசிக மூர்த்திகளின் (இரு திருவடி மலர்களையும் வணங்கி வழி படவும் அதனாலே), சார் உடல் மூன்றும்-அநாதி யாக வந்து பொருந்தியனவும் பொருந்துவது மாகிய அஞ்ஞான மும், அஞ்ஞான காரியமும் ஆகிய காரண உட லும், காரிய உடல்க ளாகிய தூல

சூக்குமம உடல்களு மாகிய மூ வகை உடல்களையும், தள்ளி-(அநிருத சட துக்க வடிவங்க ளாகு மென்று) நீக்கி, உன் சொருபம் சாருவாய்-சச்சிதாநந்த மாகிய மெய் வடிவமே உனது வடிவ மாகக் கண்டு அடைந்ததி னடைவாக அடை வா யாக. என்று உபதேசிக்க-என்று வாஸ்தவ அபேத தத்துவத்தை எங்கட் குப தேசித்தருள் புரியு மாறு (அருள் புரிந்த), காரையில் வாழும் கொப் புடை அம்மை கழல் இணை அநுதிநம் பணி வாம்-காரைக் குடி என்னும் பேர் ஊரிலே எழுந் தருளி யிருக்கின்ற கொப் புடை அம்மையே நின் இரு திரு அடி மலர்களையும் என்றும் வணங்கி வழிபடுவோ மாக. எ—று.

முக்தி ராம லிங்க ஞாந தேசிக மூர்த்திகள் வாசிட்ட நூலை மெய்ப் பொருள் ஞாநம் திட மாக மாணவர்கட் குண்டாகும்படி யெடுத் துரைத்தலிலே மிக ஆற்ற லுடன் விளங்கியதாலும், அப் பெருமான் சீடர்களும், அவ் வாறே விளங்கியதாலும், விளங்குகின்றமையாலும் தான், தாணிச்சா வூ ருணிப் பழனி யப் பையா அவர்கள் ஸ்ரீ முத்தி ராம லிங்க ஞாந தேசிக மூர்த்திகளைப் புகழ்ந் தவிடத்து, “வாசிட்டம் படிப்ப துண்டோ” என எடுத் துக் காட்டி விளக்கி யுள்ளார்கள், அப் பாடலை நோக்குக.

கிரந்தம் என்பது மெய் எழுத் தல்லாத உயிர் உயிர் மெய் எழுத்துக்கள் முப் பத் திரண் டாகும் இப்படி முப் பத் தீ ராயிரம் கிரந்தம் உள்ள நூலும், ஆரு யிரம் கிரந்தம் உள்ள நூலு மாக, இரு வாசிட்ட நூல்கள் வட மொழி யில் உள்ளன என்பது வெளிப்படை. அவற்றுள். ஆரு யிரம் கிரந்தம் உள்ள வட மொழி நூலையே ஆள வந்தான் முநிவர், தமிழில் இரண்டா யிரத் தைம்பத் தைந்து செய் யு ளாக மொழி பெயர்த் தருளினார்கள். பிற் காலத்தில் கோயிலூர் மரபு வட மொழி தென் மொழிக்கடல்களை நிலை கண் டுணர்ந்த நியாய சந்திர, வேதாந்த பாஸ்கர, ஸ்ரீ வீர. சுப்பய்ய ஞாந தேசிக சுவாமிக ளவர்கள், வீர சேகரம்



என்னும் பே ருரை ஒன்று அந் நூற்கு இயற்றி. தம் மர பில், தமக்கு முன் இரு மொழியிலும் வல்ல நித்தியாநந்த சுவாமிகள் மொழி பெயர்த் துதவிய சமு சார தரணி என்னும் உரையுடன் அச்சிட் டுலகம் படித் துய்வு பெறச் செய் திருத்தல் வெளிப் படை. 4

ஆரையில் மநத்தை அழித்துமே நல்ல
ஆந்மவி ருப்புடை மநத்தைத்,
தீரையாக் கொடுத்துச் சிவனடி களையே
சிந்தித்து நைந்து நைந் துருகிப்,
பேரையாம் மந்தி ரந்தனைப் பகர்ந்து
பெருமகா வாக்கிய முணர்த்தக்,
காரையில் வாழும் கொப்புடை அம்மை
கழல்இணை அநுதிநம் பணிவாம். 5

(இ—ள்.) ஆரையில் மநத்தை அழித்து-உருளையில் அஃ துருளுதலால், ஆரக் கால்கள் மாறி மாறிச் சுழல்வது போலப் பல எண்ணங்கள் மாறி மாறி எழுந்து வர அழியும் பொருள்களை மெய்ப் பொரு ளாகக் கருதி அவற்றில் சுழலுகின்ற ரஜோ தமோ குண வடிவ மநதை அக் குணங்களி னின்று நீங்கு மாறு செய்து, நல்ல ஆந்ம விருப் புடை மநத்தை-ஆந்மாவில் ஒடுங்கி ஆநந்தம் பெற விரும்புகின்ற சத்துவ மான நிஜ குணத்தை யுடைய மநத்தை, தீரை யா கொடுத்து-அகன் ருழ முடைய தாக்கி. சிவன் அடிகளையே நைந்து நைந்து உருகி சிந்தித்து-சிவ பெருமா னுடைய திருவடி களையே அன்பினால் கசிந் துருகு மாறு எண்ணி, பேர் ஐ ஆம் மந்திரம் தனை பகர்ந்து-அச் சிவ பெருமா னுடைய பெரிய வியப் புடைய தாகிய பஞ்சாக்ஷர மந்திரத்தைச் செபிக்கும்படி செய்து, பெரும் மகா வாக்கியம் உணர்த்த-நான்கு வாக்கியங்

களுள்ளும் பெருமை பொருந்திய உபதேச மகா வாக்கியப் பொருளை எங் குருபரர் எமக் குபதேசித் தருளும்ம்படி அருள் புரிந்த, காரையில் வாழும் கொப் புடை அம்மை கழல் இணை அநுதிநம் பணி வாம்-காரைக் குடி என்னும் பேர் ஊரில் எழுந் தருளியிருக்கின்ற கொப் புடை அம்மையே நின் இரு திரு அடி மலர்களையும் என்றும் வணங்கிவழிபடு வோ மாக. எ—று.

சிவன் அடிகளையே நைந்து நைந் துருகி சிந்தித்து-பகர்ந்து-அழித்து-கொடுத்து-உணர்த்த எனக் கூட்டிப் பொருள் காண்க, 'பகர்வித்து' என்பது, பகர்ந்து, என நின்றது, 'உணர்த்துவிப்ப' என்பது, 'உணர்த்த' என நின்றது.

ஐ வியப்பு. மந்திரங்கள் எல்லாவற்றினும் சிறப்புடையது எனக் கருதப்படலானும், மற்றைய மந்திரங்கள் தராத பேறுகளைத் தருதலானும், மகா வாக்கியப் பொருளே தன் பொருளாக விளங்குதலானும், 'பேர் ஐ, ஆம் மந்திரம்' எனப் பஞ்சாக்கரம் கூறப்பட்ட தென்க. 5

சோறையே விரும்பி ஊர்தொறும் சுற்றும்
சுணங்கன்போற் பண்பிலா மநத்தைத்,
தாரைவார்ப் பதற்கா அழைத்தெனை ஆண்ட
தன்மையை நினைந்துநைந் துருகித்,
தீரையாம் வீர சேகரன் அடியைத்
திநம்பணிந் திடரொழிப் பதற்காக்,
காரையில் வாழும் கொப்புடை அம்மை
கழல்இணை அநுதிநம் பணிவாம். 6

(இ—ள்.) சோறையே விரும்பி ஊர் தொறும் சுற்றும் சுணங்கன் போல் பண்பு இலா மநத்தை-உண்ணும் உணவை மட்டும் நாடி ஊர் முழுதும் சுற்றித் திரிகின்ற ஞமலி போல (மக்கட் குரிய பேற்றை அடையும்படி



யான) நற் பண்பில்லாத எனது மநத்தை, தாரை வார்ப்பதற் கா-தன்பால் தாரை வார்த்துக் கொடுத்து விடுவதற்காக, அழைத்து எனை ஆண்ட-வலியத் தன்பால் வரும்படி கருணை மேலீட்டால் ஒன்றுக்கும் போதாத என்னை அழைத்து ரஜோ தமோ குண முடைய தாக இராமல் என் மநத்தைத் தூய் தாகச் செய்து அடிமை கொண்டருளிய, தன்மையை நினைந்து நைந் துருகி-கருணைத் தன்மையை எண்ணிக் கசிந் துருகி நின்று, தீர ஐ ஆம் வீர சேகரன் அடியை திநம் பணிந்து-தீரனும் சுவாமியும் ஆகிய என் குரு பரர் வீர சேகரப் பெருமா னுடைய திருவடிகளை நா டோறும் வணங்கி. இடர் ஒழிப்பதற் காக-பிறவித் துன்பங்களை யொழித்து இன் புருவ மாக இருந்தபடியே யிருப்பதற் காக (அருள் புரிந்து). காரையில் வாழும் கொப் புடை அம்மை கழல் இணை அநுதிநம் பணிவாம்-காரைக் குடி என்னும் பேர் ஊரிலே எழுந் தருளியிருக்கின்ற கொப் புடை யம்மையே நின் இரு திரு அடி மலர்களையும் என்றும் வணங்கி வழிபடுவோமாக. எ—று. 6

பேரையே விரும்பிப் பேய்எனத் திரிந்து
பேச்சிலா மௌநமுற் றிருக்கும்,
சீரையே விரும்பிச் செல்லுநல் அடியார்
சிறந்திடும் கோவிலூர் அடைந்து,
பேரையே விரும்பி வீரசே கரன்தன்
பிறங்கடி களைத்திநம் அடையக்,
காரையில் வாழும் கொப்புடை அம்மை
கழல்இணை அநுதிநம் பணிவாம். 7

(இ—ள்.) பேரையே விருப்பி-உலகப் பொருள்கள் ஒன்றையும் விரும்பாமல் மெய்ப் பொருளையே அடைய விரும்பி, பேய் என திரிந்து-(கண்டவர்கள்) பேய் என்று சொல்லு மாறு பொருந்தி வாழ் இடம் ஒன்று இன்றிப்

பரியடாம் செய்து, பேச்சிலா மௌனம் உற்று இருக்கும்-இகழப்படாத மோந நிலையில் விளங்கும் அம் மெய்ப் பொருளை அடைந்து இருமாந்திருக்கும்படி யான, சீரையே விரும்பி செல்லும் நல் அடியார்-குழுப்பத்தையே விரும்பி ஒழுகும் துற வற அடியவர்கள், சிறந்திடும் கோயி லூர் அடைந்து-சிறப் பாக விளங்கும் கோயி லூர் மடத்தை அடைந்து, பே ரை யே விரும்பி-யானும் அம் மெய்ப் பொருளை அடைய விரும்பி, வீர சேகரன் தன் பி றங் கு அடிகளை திநம் அடைய-அம் மடத்தில் குரு மூர்த்த மாக எழுந்தருளி யிருந்த வீர சேகர ஞாந தேசிக மூர்த்திகளின் விளங்கும் திரு அடிகளை நா டோறும் அடைந்து வழி படும்படி (அருள் புரிந்த), காரையில் வாழும் கொப்புடை அம்மை கழல் இணை அநுதிநம் பணி வாம்—காரைக் குடி என்னும் பேர்ஊரிலே எழுந்தருளியிருக்கின்ற கொப்புடை அம்மையே நின் இரு திரு அடி மலர்களையும் என்றும் வணங்கி வழிபடுவோ மாக. எ—று.

துறவிகளைச் சான்றோர் ''நற் றவம் செய்வார்'' என் பராதலின், ''நல் லடியவர்'' என்றனர். வீடு பேறு கருதி நிற்றலின் என்க.

சார்கின்ற அடியவர்களின் பிறவிப் பிணி அறுத் தலால், ''பிறங் கடி,'' என்றனர். வாளா நிற்றும் அடி அன் றென்ப தாம்.

உட லடக்கம், மந வடக்கம் இன்றி, வா யடக்கம், மட் டும் உள்ள மௌனம் இகழப்படுவதால், மந வடக்க முள்ள மௌனம், ''பேச்சிலா மௌனம்'' எனப்பட்டது. இங்குப் பேச்சு என்பது, குறிப்பினுல் இகழ்தல் மேல் நின்றது. ''யா ர் உலகத்தோர் சொ ல் இல் லா ர்'' என்பது போல்வது.





நாரினிற் படுஞ்சீர் நடநா யகன்றன்
நறுமலர்ப் பதம்திநம் பரவி,
நீர்மையி னின்று நிருமல மடைந்து
நிர்க்குண மெய்ப்பொருள் கண்டு,
பேர்பெறு மடியர் குழுவினைச் சார்ந்து
பிறப்பறுத் துயர்ந்திடச் செய்த,
காரையில் வாழும் கொப்புடை அம்மை
கழல்இணை அநுதிநம் பணிவாம். 8

(இ—ள்.) நா ரி னில் படும் சீர்-அன்பு வலையில் இன்பம் தரச் சிக்குண்கின்ற, நடா நாயகன் தன்-சிதம்பரத் திருக் கூத்தப் பெருமா னுடைய, நறு மலர் பதம் திநம் பரவி-மணங் கமழ்கின்ற மலர் போன்ற திரு வடிகளை என் றென்றும் புகழ்ந்து, நீர்மையின் நின்று-நல் ஒழுக் கத்திலே நிலை பெற்று, நிருமலம் அடைந்து-அழுக் கற்ற உள்ளம் கொண்டு, நிர்க் குண மெய்ப் பொருள் கண்டு-குணம் குறி ஒன்றும் இல்லாத சச்சிதாநந்த சிவம் தாம் எனத் திட மாக அறிந்து, பேர் பெறும் அடியர் குழுவினை சார்ந்து-புகழ் பெறுகின்ற கோ யி லூ ர் சத் சங்கத்தை அடைந்து. பிறப்பு அறுத்து உயர்ந்திடச் செய்த-அச் சத் சங்கத்தின் வழி யாக பிறப்பினைப் போக்கி சீவன் முக்தியை யடைந்து இன் புற் றிருக்கு மாறு அருள் புரிந்த, காரையில் வாழும் கொப் புடை அம்மை க ழ ல் இணை அநுதிநம் பணிவாம்-காரைக் குடி என் னும் பேர் ஊரிலே எழுந்தருளி யிருக்கின் ற கொப் புடை அம்மையே நின் இரு திரு அடி மலர்களையும் என்றும் வணங்கி வழிபடுவோ மாக. எ—று.

நார்-அன்பு ''பக்தி வலையிற் படுவோன்'' என்பர் மேலோருங் காண்க. ''சத்சங்கத்வே'' என்னும் ஆச்சாரி யாள் திரு வாக்கினுலும், ''அறக் குறைவை நிறைவாக்கும்' என்னும் வசிட்டர் வாக்கினுலும், அடியவர் கூட்டச் சார்வு, உயர்வுக்கு வழியாதலை அறிக.

பேரையூர்ச் சாந்த லிங்கதே சிகனுற்
பிறங்குவை ராகதீ பத்திற்,
நாரியர் ஆசை தநத்தினில் ஆசை
நண்ணிடா தரும்பொருள் தன்னைச்,
சேர்தரீஇ யின்னல் தீர்கெனக் கூறுந்
திறந்தெரிந் திருப்பதற் கருளும்,
காரையில் வாழும் கொப்புடை அம்மை
கழல்இணை அநுதிநம் பணிவாம். 9

(இ—ள்.) பேரை ஊர் சாந்த லிங்க தேசிகனுல்—திருப் பேரூரின்கண்ணே எழுந்தருளி யிருக்கின்ற சாந்த லிங்க ஞாந தேசிக மூர்த்திகளினுலே அருளிச் செய்யப் பட்டு, பிறங்கு வைராக தீபத்தில்-இடையூ றின்றி இன்றும் விளங்கும் வைராக்கிய தீபம் என்கின்ற நூலிலே, நாரியர் ஆசை—பெண் ஆசை, தநத்தினில் ஆசை—பொன் ஆசை (புத்திர ஆசை ஆகிய மூ வேடணைகளை), நண்ணிடா து—பொருந்தாமல், அரும் பொருள் தன்னை—மாற்ற மநங்கட் கெட்டாத மெய்ப் பொருளை, சேர்தரீஇ-தா னுகக் கண் டடைந்து, இன் னல் தீர்க என உரைக்கும்—எல்லாத் துன்பங்களினின்று நீங்கி யின் புரு வாக இருத்தி என்று கூறுகின்ற, திறம் தெரிந்து இருப்பதற்கு அருளும்-தன்மை அறிந்து குருபரர் திரு வருளால் தானே தா னுக இருப்ப தற்கு அருள் புரிகின்ற, காரையில் வாழும் கொப் புடை அம்மை கழல் இணை அநுதிநம் பணி வாம் - காரைக் குடி என்னும் பே ரூரிலே எழுந்தருளி யிருக்கின்ற கொப் புடை அம்மையே நின் இரு திரு அடி மலர்களையும் என்றும் வணங்கி வழிபடுவோ மாக. எ—று.

எல்லா நூல்களும் இந் நிலையையே கூறுமாயினும், ஒரு பெரியாரையும், ஒரு நூலையும் கூறு முகத்தான், எல்லாப் பெரியார்களையும், எல்லா நன் னூல்களையும், நினைத்தலும், நினைப்பித்தலும், செய்தனர் என்க.



'ஈன் று புறந் தருதல் என் றலைக் கடனே'', ''சான்ரே ருக்குதல் தந் தைக்குக் கடனே' (புறம்) என்னுந் தாய் போ லாது, கொப் புடை அம்ம னுகிய தெய் வத் தாயே நீ என்னை எம்மை மெய்ப் பொரு ளுணர்ந்த சான் ரே ருக்கினுய் என்ப தாம். 9

சீரையே அளிக்கும் சிவனடி களையே
சிந்தித்துக் குமரன்றன் அடியை,
வார்தரு முகக்கை கணபதி கழலை
மாதவன் அடியினை உன்னிச்,
சேர்திருக் களரில் வீரசே கரன்தன்
திருவடி களைத்திநம் நினைக்கக்,
காரையில் வாழும் கொப்புடை அம்மை
கழல்இணை அநுதிநம் பணிவாம். 10

(இ—ள்.) சீ ரை யே அளிக்கும் — வேண்டுவார் வேண்டும் விழுப்பத்தைக் கொடுக்கும் கருணையை யுடைய, சிவன் அடிகளையே-சிவபெருமான் உடைய திரு வடிகளை, சிந்தித்து—தியாநித்தும், குமரன் தன் அடியை—முருகப் பெருமா னுடைய திரு வடியையும், வார் தரு முகக் கை—நீண்ட முகத்தோடு தொடர்ந் துள்ள துதிக் கையை உடைய, கணபதி கழலை—விநாயகப் பெருமா னுடைய திரு வடியையும், மாதவன் அடியினை—திரு மக ளுயக னுகிய திரு மாலின் திரு வடியையும், உன்னி—தியாநித்தும், சேர்-(சிவ பெருமான் முதலிய தெய்வங்களின் அருளினுலே, தெய்வங்க ளாக விளங்கும் காரணப் பிரஹ்மமே எமக்குக் குருபர ராக) எழுந் தருளி வந்த, திருக் களரில்—திருக் களரிலே கோயில் கொண் டருளுகின்ற, வீர சேகரன் தன்—வீர சேகரப் பெருமா னுடைய, திரு அடிகளை—திருப் பாதங்களை, திநம் நினைக்க—அப் பெருமான் எம்மை அநர்த்த நிவிர்த்தி ஆநந்தப் பிராப்தி வடிவ மான இயல்

பாகிய நிலையில் இருத்திய பேர் உபகாரத்திற்குக் கைமா றுக) நாடோறும் மறவாமல் சிந்தித்து வழிபடும் படி (அருள் புரிந்த), காரையில் வாழும் கொப்புடை அம்மை கழல் இணை அநுதினம் பணிவாம்–காரைக் குடி என்னும் பேர் ஊரிலே எழுந்தருளி யிருக்கின்ற கொப் புடை அம்மையே நின் இரு திரு அடி மலர்களை யும் என்றும் வணங்கி வழி படுவோ மாக. எ—று.

காரியப் பிரஹ்மங்களை வழிபாடு செய்ததும், அவ் வாறு வழிபடலால் அக் காரியப் பிரஹ்மங்க ளாக நிலவும் காரணப் பிரஹ்மமே அருள் செய்து, குரு பர ராக எழுந் தருளி அத்வைத, நிலையை அடைவித்ததும், அந் நன்றி மறவாமல், அக் குருபர ருடைய திரு வடிகளைச் சிந்தித்து வழிபடச் செய்தலும், எல்லாம் கொப் புடையாள் அருட் செயலே யாகும் என்ப தாம். 10

காரைக் குடி கொப் புடை அம்மை தோத்திர ரச மஞ் சரியும், திரு வை யாறு அறு பத்து மூவர் மடம் சங்கத்து, சித. நாராயண சுவாமிகள் இயற்றிய நுந்தா ஒளி (நித்திய பிரகாச) உரையும் முற்றுப் பெற்றது.

---





உ

சிவ மயம்.

## பிள்ளையார் பட்டி,
## கர்ப்பக விநாயகர் தோத்திர ரச மஞ்சரி.

**நுந்தா ஒளி உரை. (நித்தியப் பிரகாச உரை)**

---

கொள்ளைமா தவன்தன் மருகனாய் விளங்கிக்
குமரன்தன் முன்னவன் ஆகி,
வள்ளியை மணக்கும் குமரனுக் காக
வாரண வடிவனாய் விளங்கிப்,
பிள்ளைகள் தொழுது வித்தையைப் பெறவே
பிறழற வீதியில் விளங்கும்,
பிள்ளையார் பட்டிக் கர்ப்பகவி நாயகன்
பிறங்கடி களைத்தினம் பணிவாம். 1

(இ—ள்) கொள்ளை மாதவன் தன் - அன்பர்கள் வேண்டியவற்றைக் கொள்ளை கொள (மிகுதியாகக் கொள்ளும்படி) அருள்புரியும் திரு மகள் நாயக ராகிய திரு மாலின், மருகன் ஆய் விளங்கி - மருமக ராக விளங்கியும், குமரன் தன் முன்னவன் ஆகி - முருகப் பெருமானுக்கு மூத்தவர் ஆக விளங்கியும், வள்ளியை மணக்கும் குமர னுக்கு ஆக - வள்ளி யம்மையாரைத் திரு மணம் செய்து கொள்ள விரும்பிய இளைய பெருமாள் ஆகிய முருகப் பெருமான் பொருட்டு (அவ் வள்ளி அம்மையார் கண் டஞ்சி முருகப் பெருமானைத் தானே வந்து தழுவு மாறு) வாரண வடிவன் ஆ(க) விளங்கி - யானை முக வடிவம் உடையவன் ஆகத் தோன்றியும், பிள்ளைகள் தொழுது-சிறு குழந்தைகள் எளி தாகக் கண்டு வழிபட்டு, வித்தையை பெற-கல்வியை

யும் பிறவித்தைகளையும் அடையும்படி பிற்ழ்அற-பிறழ்ச்சி இன்றி (எங்கும் ஒருதலை யாக), வீதியில் விளங்கும்-வீதிக டோறும் விளங்குதலையும் செய்கின்ற. பிள்ளையார் பட்டி கர்ப்பக(வி)நாயகன் பிறங்கு அடிகளை திநம் பணி வாம்-(குன்றக்குடிக் கண்மையில் விநாயக மலை என விளங்கும்) பிள்ளையார் பட்டியில் எழுந்தருளியிருக்கின்ற கர்ப்பக விநாயகப் பெருமானது விளங்கும் திரு அடிகளை இடை விடாமல் எந் நாளும் வணங்குவோ மாக எ—று.

பிள்ளையா ராகிய காரணப் பிரஹ்மமே, அன்பர்களின் பொருட்டு பல திறப்படத் திகழும் என்பது, இப் பாவாற் குறிப்பிடப்படுகின்றது.

பிள்ளையார் பட்டி பிள்ளையார் பெருமான் தேவர்கட்கும், மக்கட்கும், உதவி செய்து விளங்குவ ராதலின், தேவர் கட்கு மட்டும் உதவும் கற்பகம் போல்வ தன்று, இத் தெய்வக் கற்பக மாகிய பிள்ளையார் என்பார், விளங்கி, ஆகி, விளங்கி, விளங்கும், என்றனர்.

பிறங்குதல் - பிறவிப் பிணி அறுத்தலோடு, இம்மை மறுமை யின்பங்களையும் அளித்தலின் உல கெலா மறியப் படுதல். 1

கள்ளமில் நரனுய்க் கயமுக னுகிக்
காநக வாழ்க்கையை நீத்துத்,
தெள்ளுறும் நகர வீதிகள் தெருக்கள்
சிறந்தவேம் பரசரு தருவில்,
வள்ளல்கள் போற்றும் வள்ளலாய் விளங்கி
வாநவர் போற்றுதற் குரிய,
பிள்ளையார் பட்டிக் கற்பக விநாயகன்
பிறங்கடி களைத்திநம் பணிவாம். 2



(இ—ள்) கள்ளம் இல் நரன் ஆய்-(எல்லாப் பொருள் கட்குந் தான் அதிட்டாநமா யிருக்கிறேன் தோன்றும் எல்லா ஆரோபங்களும் அதிட்டாந மாகிய எனக்கு வேறுக இல்லை. எல்லாம் யானே என்பதை மறையாமல் விளக்கு வதற்காக) மநித உறுப் புடையவ னுகியும், கய முகன் ஆகி-யானை முகம் ஆகிய விலங் குறுப் புடையவ னுகியும் (விளங்கி) காநக வாழ்க்கையை நீத்து-(உல குயிர்க ளனைத் தையும் இடையூ றகற்றிக் காப்பதே தொழி லாகக் கொண் டமையால்) நைட்டிக பிரமச்சாரி ஊரை அடையாது காநகத்திலே தங்கித் தவம் புரிதலை உலகினர்க் குணர்த்து நிலையை நீக்கி, யாம் இருத்தற் கேற்ப (இவ் வா றிருந்தாற் ருன் உலகத்தைக் காப்பாற்றலாம் என்பதை அறிவிப்பதை யுங் குறிக்கோ ளாகக் கொண்டு), தெள்ளுற - தெளி வாக, (வெளிப்படை யாக), நகர வீதிகள்-பேரூரில் பெருந் தெருக் களிலும், தெருக்கள்-சிறு தெருக்களிலும், சிறந்த வேம்பு அரசு அருந் தருவில்-மக்களுக் குடம்பிற் குறுதி யளித்தலில் சிறப் பான வேம்பு அரசு குளிர் காலத்தில் வெப்பத்தையும் வெய்யிற் காலத்தில் குளிர்ச்சியையும் அளிக்கும் உயர் வான ஆல் முதலிய மரங்களி னடிகளிலே தங்கி யருளுகின்ற, வள்ளல்கள்போற்றும்-வள்ளன்மையை யுடைய முதலாளி கள் இன்னும் பெரு முதல்களைப் பெற்று வருவார்க் கில்லை யென்னுமல் வழங்குதற் கருள்புரிதல் வேண்டும் என்று எண்ணி வழிபடுகின்ற, வள்ளல் ஆய்-அவர்கள் விரும்பியன வற்றை விரும்பிய வாறே கொடுக்கும் கொடையாளர் ஆய், விளங்கி-எழுந்தருளி, வாநவர் போற்றுதற்கு உரிய-அருள் பெறுவதற்கு தேவர்களும் கொண்டாடுதற் குரியவ ராக விளங்குகின்ற, பிள்ளையார்பட்டி கர்ப்பக விநாயகன் பிறங்கு அடிகளை திநம் பணி வாம் - பிள்ளையார் பட்டியில் எழுந் தருளியிருக்கின்ற கர்ப்பக விநாயகப் பெருமானது விளங்குந் திரு வடிகளை இடைவிடாமல் எந் நாளும் வணங்குவோ மாக. எ—று.

'விளங்கி' என்பது, 'உரிய' என்னும் குறிப்புப் பெயர் எச்சங் கொண்டது. 2

பள்ளமே டின்றிச் சம்மதாய் உள்ள
பாரிலும் மலையினுச் சியிலும்,
தள்ளுதல் இன்றிச் சமமதாய்க் கருதித்
தங்கிடும் நின்கரு ணையைத்தான்,
விள்ளுதல் இன்றி வாயினால் புகழ
விளங்குசுந் தரவிநா யகனாய்ப்.
பிள்ளையார் பட்டிக் கர்ப்பக விநாயகன்
பிறங்கடி களைத்திநம் பணிவாம். 3

(இ—ள்) பள்ளம் மேடு இன்றி சமமதுஆய் உள்ள பாரிலும்-(வழிபடுகின்றவர்கள் எளிதாக வழிபடும்படி) தாழ்வுயர் வில்லாமல் சமமாக உள்ள பூமியிலும், மலையின் உச்சியிலும்-(வழிபடுவர் உடல் வலிமை பெற ஏறி வழிபட்டுய்யுமாறு) மலைச் சிகரத்திலும், தள்ளுதல் இன்றி-இது நல்லது இது தீது எனக் கொள்ளுதல் தள்ளுதல் இல்லாமல், சமமது ஆய் கருதி-ஒரே படித்தாக எண்ணி, தங்கிடும்-தங்கி மக்கட்கு அருள் புரிகின்ற, நின்கருணையை தான்-தேவரீருடைய திரு அருளை, விள்ளுதல் இன்றி - நீங்காமல் (ஓயாமல்), வாயினால் புகழ-என்னுடைய தண்ணிய இனிய சொல்லறியாத வாயினாலே புகழ்ந்து மாசற்று தேசுறும் ஆறு, விளங்கு சுந்தர விநாயகன் ஆம்-விளங்காநின்ற அழகிய விநாயக மூர்த்தியாகிய, பிள்ளையார் பட்டி கர்ப்பக விநாயகன் பிறங்கு அடிகளை திநம் பணி வாம்-பிள்ளையார் பட்டியில் எழுந்தருளியிருக்கின்ற கர்ப்பக விநாயகப் பெருமானது விளங்குந் திருவடிகளை இடைவிடாமல் எந்நாளும் வணங்குவோமாக எ—று



"சமமதாய் எண்ணி" என்றமையால், ஆழத்திலும், மேட்டிலும், தங்குவார் என்பது குறிப்பிக்கப்பட்டதாகும். ஆழத்துப் பிள்ளையாரும், மேடைப் பிள்ளையாருமாக இருத்தலின் என்க. இவ்வாறு எங்குந் தங்குதலால், எல்லார்க்கும் சமமாக அருள்புரிவார் என்பது குறிப்பிக்கப்பட்டதென்க. 3

கொள்ளுதல் விடுதல் இன்றியே இருக்கும்
குறைவிலா அறிவுரு வாகி,
சள்ளைகள் ஒழித்துத் தற்பர உருவாய்ச்
சங்கரன் குமரன்ஆய் விளங்கிப்,
பிள்ளைகள் நூறு பிழைகள்செய் தாலும்
பெற்றவர் முனிவுறா ததுபோல்,
பிள்ளையார் பட்டிக் கர்ப்பக விநாயகன்
பிறங்கடி களைத்திநம் பணிவாம். 4

(இ—ள்.) கொள்ளுதல் விடுதல் இன்றியே இருக்கும்-(ஞான அஞ்ஞான காலத்தில்) அடையப்படுதலும், விடப்படுதலுமாகத் தோன்றினும், கண்டாபரண நியாயம் போல என்றும் அடையப்பட்டே இருக்கும்படியான, குறைவு இலா அறிவு உருவு ஆக பரிபூரணம் ஆகியும், சேதநம் ஆகியும், இருந்தாலும், சள்ளைகள் ஒழித்து-வழிபடுவார்க்குத் துன்பங்களை யொழித்தருள்வதற்காக, தத்பரவுரு வாய்-மாயா சபளித காரணப் பிரம வடிவமாகி, சங்கரன் குமரன் ஆய்-பின்னர் அச்சுகதாந பரன் ஆகிய காரணப் பிரஹ்மத்தின் நிலையில் நின்றும், காரியப் பிரமமாக விளங்கி, பிள்ளைகள் நூறு பிழைகள் செய்தாலும்-தனக்குப் பிள்ளைகள் என்கிற எண்ணத்துடன் வாழும், அன்பர்கள் பல குற்றங்களைச் செய்தாராயினும், பெற்றவர் போல பிள்ளைகள், செய்யும் பிழைகளைப் பொறுத்துக் கொள்ளும் படியான தாய் தந்தையர்கள் போல, முனிவுறாத-கோபித்துத் தள்ளி விடாமல் மறக் கருணையால்

தண்டித்து ஆட்கொண் டின்புறுத்தும் நோக்குடைாவ ராகிய, பிள்ளையார் பட்டி கர்ப்பக விநாயகன் பிறங்கு அடிகளைத் திநம் பணி வாம்-பிள்ளையார் பட்டியில் எழுந் தருளியிருக்கின்ற கர்ப்பக விநாயகப் பெருமானது விளங்கும் திரு வடிகளை இடைவிடாமல் எந் நாளும் வணங்கு வோ மாக. எ—று.

குமரன் என்பது, காரியப் பிரமத்தை என்க. 4

கொள்ளைகொள் முதலை கஜேந்திரன் காலைக்
கொள்ளவே கவ்விய பொழுது,
தள்ளுதல் இன்றி விரைவினில் வந்து
தாளினை விடுவித்து மோட்சம்,
கொள்ளுதல் அரிதே எனக்கரு தாது
கொடுத்தல்போல் எனக்குமே ஈவான்,
பிள்ளையார் பட்டி கர்பக விநாயகன்
பிறங்கடி களைத்திநம் பணிவாம். 5

(இ—ள்.) கொள்ளை கொள் முதலை-மிகுதி யாக எதையும் பற்றிப் பிடிக்கின்ற முதலை யானது, கஜேந் திரன் காலை-கஜேந்திரன் என்னும் யானையினது காலை அதனைத் தின்னும் பொருட்டு அதன் காலை (கவ்விய பொழுது) வாயாற் பற்றிப் பிடித்த பொழுது, தள்ளுதல் இன்றி-(ஆதி மூலமே என் றழைக்க நமக் கென்ன என்று) வெறுத்தல் இல்லாமல், விரைவினில் வந்து-விரை வாகக் கருடன் மேல் ஏறி வந்து, தாளினை விடுவித்து-கஜேந்திரன் காலை விடும்படி சக்கரப் படையை யேவி அறுத் துதவியு மத் துன்பத்தை ஒழித்ததோ டல்லாமல் எல்லாத் துன்பங் களினின்று நீங்கி இன்புறும்படி யான, மோட்சம்-விடு பேற்றையும், கொள்ளுதல் அரிது என்னாது கொடுத்தல்



போல்-இஃ தடைதல் அரி தாகும் எனக் கருதாது சாதநங் களை எல்லாம் கொடுத்தல் மூல மாகக் கொடுத்ததைப் போல, எனக்கும் ஈவான்-அடியேனுக்கும் அச் சாதந சாத்தியங்களை எல்லாம் ஒரே காலத்தில் கருணைப் பெருக் கினல் ஈயும் பொருட்டு, பிள்ளையார் பட்டி கர்ப்பக விநாயகன் பிறங்கு அடிகளை திநம் பணிவாம்-பிள்ளையார் பட்டியில் எழுந்தருளி யிருக்கின்ற கர்ப்பக விநாயகப் பெருமானது விளங்குந் திரு வடிகளை இடைவிடாமல் எந் நாளும் வணங்கு வோ மாக. எ—று

திரு மாலும் கணேசரே, வேறு அல்லர், என்பதைக் குறிக்கத், திரு மால் வரலாற்றைக் கணேசர் மேல் ஏற்றிக் கூறினர் என்க. 5

அள்ளிநெஞ் சுருக்கும் அன்பினல் மகவை
அகற்றிடா தணைத்துநின் றுவக்கும்,
தள்ளைகள் நிகர்த்திங் கெனையுமே ஆண்ட
தகைகமையால் முழுமுதற் கடவுள்,
கள்ளமதின் றியடியரைப் புரககும்
காவலன் மறைமுடி அமரும்,
பிள்ளையார் பட்டிக் காப்பகக் களிற்றின்
பிறங்கடி களைத்திநம் பணிவாம். 6

(இ—ள்.) நெஞ்சு அள்ளி உருக்கும்—உள்ளத்தை வாரி யெடுத்து உருகும்படி செய்கின்ற, அன்பினல்— அன்பே இயல் பாகப் பொருந்திய தன்மையினல், மகவை- தன் குழந்தையை, அகற்றிடாது-மல முதலியவைகளால், துன்புறுத்தினும், வடி வின்றிய தாக இருப்பினும், சீ என வெறுத்து ஒதுக்காமல் அணைத்து நின்று உவக்கும்— தழுவி முத்த மிட்டு (பெறற் கரும் பொரு ளாகக் கருதி) மகிழும்படி யான, தள்ளைகள் நிகர்த்து—தாய்கள் போல,

இங்கு என்னையும்-இவ் வுலகில் எல்லாவற்றுலும், தாழ்ந் துள்ள அடியேனையும், ஆண்ட-(வெறுத் தொதுக்காமல் நம் மடியவன் என்று திரு வுள்ளம் பற்றி) ஆண் டருளிய, தகைமையால்-அருட் டன்மை நிறைந்த. முழு முதல் கடவுள்-நிமித்தம் வேறு, உபாதாநம் வேறு என்று இராமல் நிமித்தமும் உபாதாநமும் ஆகிய உலக காரணப் பொருளாக நிலவும் காரணப் பிரம மாகிய அதிதப் பிரஹ்மமும், கள்ளமது இன்றி-வஞ்சகம் சிறிதும் இல்லாமல், அடியரை புரக்கும்-தந் திரு வடியே துணை என இருப் பவரைத் (துன்பத்தில் அழுந்தாமல்) காக்கின்ற, காவலன்-அரசனும் (ஆகிய), நான் மறை நான்கு வேதங் களின்-முடிவு-முடி வான உபநிடதங்களிலே, அமரும்-தங்கி விளங்குகின்ற, பிள்ளையார் பட்டி-பிள்ளையார் பட்டியிலே எல்லாருங் காண எழுந் தருளி யிருக்கின்ற கர்ப் பகக் களிற்றின்-யானை முக முடைய கர்ப்பக விநாயக மூர்த்தியின், பிறங்கு அடிகளை திநம் பணி வாம்-விளங்கா நின்ற திரு வடிகளை நாடோறும் வணங்குவோமாக. எ—று.

மாற்ற மநங் கழிய நின்ற பிரம மானது, உயிர்கள் உய்யும் பொருட்டு, அபிந்ந நிமித்த உபாதாந காரண மாக நின் றுலகை யுண்டாக்கி, அவ் வுயிர்களை நல்லன செய்யத் துண்டி, தீயன செய்யின், மறக் கருணையால், தண்டித்துத் திருத்திப் புரக்கின்றது, என்பார், "முழு முதற் கடவுள்" எனவும், 'காவலன்' எனவும், கூறி அந் நிலைகளை யுபநிடதங்கள் விளக்குகின்றன என்பார், "மறை முடி வமரும்" எனவும், அது, யாவரும் கண்டு வணங்க யானை முகத்துடன் பிள்ளையார் பட்டியில் எழுந் தருளி யிருக்கின்ற தென்பார், "பிள்ளையார் பட்டிக் களிறு" எனவும், அங்கும் கர்ப்பகம் போல வேண்டுவார் வேண்டுவ தெல்லாம் ஈயுந் தன்மைய தாக எழுந் தருளியிருக்கின்ற தென்பார், "கர்ப்பகக் களிறு" எனவும் கூறினர்.



ஒவ்வொரு வகையில் முத லாவ தன்றி. எல்லா வகையு மாக இருத்தலின், "முழு முதல்" என்றனர்.

தீயன செய்வாரைத் தண்டித்துக் காத்தலும், நல்லன செய்தாரை உபசரித்துக் காத்தலும், உள்ளபடி செய்த லால், "கள்ளம தின்றி" என்றனர். 6

கள்ளம தின்றி வாக்கினைப் பெறவே
கான்முளைக் காலத்தே பணிந்து,
விள்ளமில் நல்ல மநதுமுண் டாக
வேண்டிநின் றருகினில் அடைந்தேன்,
வள்ளலென் பெயரைப் பெற்றுமே வாரி
வழங்கற்கே வீதிவீற் றிருக்கும்,
பிள்ளையார் பட்டிக் கர்ப்பகக் களிற்றின்
பிறங்கடி களைத்திநம் பணிவாம். 7

(இ—ள்.) கள்ளமது இன்றி-தெளிவாக வுள்ள (விளக்கத்தோடு கூடிய), வாக்கினைப் பெறவே-வாக்கை பெறுவதற்கு (வாக்கைப் பெற்று நின்னைப் புகழ்ந்து பாடுவதற்கு), கான் முளைக் காலத்தே பணிந்து-இளங் காலந் தொடங்கியே வணங்கி, விள்ளமில் மநதும் உண்டாக வேண்டி—பணிதலில் மாறுபடா மநம் உண்டாவதற் காகவும் விண்ணப்பித்து, அருகினில் அடைந்து—பக்கத் திற் போய். வள்ளல் என் பெயரை பெற்றுமே-அடியவர் விரும்பிய எல்லாம் கொடுக்கும் வள்ளல் என்கின்ற பெயரை, அதாவது, கர்ப்பகம் என்கின்ற பெயரை அடைந்தும், வாரியே வழங்கற்கே-பெயர் பெற்றதற் கேற்ப அள்ளிக் கொடுப்பதற் காகவே, வீதி வீற்றிருக்கும்-மதுரைச் சாலை வீதிக்கு நேராக யாவருங் காண இணை யின்றி எழுந்தருளி யிருக்கின்ற, பிள்ளையார் பட்டி கர்ப் பக களிற்றின்-பிள்ளையார் பட்டி கர்ப்பக விநாயகப் பெரு

மானது, பிறங்கு அடிகளை திநம் பணிவாம்-விளங்குகின்ற திருஅடிகளை நாடோறும் வணங்குவோமாக எ—று. 7

வள்ளுவன் சொன்ன நூலினைக் கொண்டு
வண்கவி யாகிடு வோரும்,
கொள்ளுநற் றாளைக் கொண்டலா லன்றிக்
கூடுமோ வாக்குவன் மைகள்,
தள்ளுதல் இன்றி எளியனை ஆண்டு
தளர்விலாக் கவிஞனாக் குதற்குப்,
பிள்ளையார் பட்டிக் கர்ப்பகக் களிற்றின்
பிறங்கடி களைத்திநம் பணிவாம். 8

(இ—ள்.) வள்ளுவன் சொன்ன நூலினை-திருவள்ளுவர் கூறிய திருக்குறள் முதலிய நூல்களைப் பயில்வதால், வண் கவியாகிடுவோரும்-சிறந்த பாவலர், நாவலர்களாகுபவரும், கொள்ளும் நல் தாளை-(அருளைக்) கொண்ட நல்ல திருவடிகளை, கொண்டால் அன்றி-வணங்கும் பொருளாகக் கருதி வணங்கினால் அல்லாமல், வாக்கு வன்மைகள்-பாடுதலும் உரைத்தலு மாகிய வாய் வன்மைகள், கூடுமோ-உண்டாகுமா, தள்ளுதல் இன்றி-(ஆகையால்) இழிந்தவன் என்று நீக்குதல் இல்லாமல், எளியனை ஆண்டு-எளியவனாகிய அடியேனையும் ஆட்கொண்டு, தளர் விலா கவிஞன் ஆக்குதற்கு-பிற பாவலர்களையும், நாவலர்களையும், கண்டு தளர்ச்சி கொள்ளாமல், வீறிட்டுப் பாடு பாவலனும் நாவலனு மாக ஆக்குதற்காக, பிள்ளையார் பட்டி, கர்பகக் களிற்றின் - பிள்ளையார் பட்டி கர்ப்பக விநாயகப் பெருமானது, பிறங்கு அடிகளை திநம் பணிவாம்-அந்த விளங்குகின்ற (இரண்டு) திருவடிகளையும் நாடோறும் வணங்குவோம் ஆக. எ—று.

வேண்டுவார்க்கு வேண்டுவன எல்லாவற்றையும் அளித்தலால், "நற்றாள்" எனப்பட்டது.



கவி யாவதற் கெனவே, இன மாகிய நாவலனாதலையும் விரும்பினர் எனக் கொள்ள இட மிருத்தலின், அதனையுஞ் சேர்த் தெழுதல் நேர்ந்தது. 8

வள்ளலென் றிருந்து வறுமையுற் றவர்க்கு
வழங்கிடப் பொருடனைக் கொடாது,
தொள்ளைக்கா தினிலே பிரணவப் பொருளைத்
தோன்றிட என்றனக் களித்த,
கள்ளைத்தான் குடித்த தன்மைய தாகக்
காணுமா மயக்கியென் னுளத்தைப்,
பிள்ளையார் பட்டிக் கர்பகக் களிற்றின்
பிறங்கடி களைத்திநம் பணிவாம். 9

(இ—ள்) வள்ளல் என்று இருந்து-கொடையாளி என்று சொல்லும்படியாக இருந்து, வறுமை உற்றவர்க்கு-வறுமை அடைந்தவர்களுக்கு, வழங்கிட—அவர்கள் வறுமை நீங்கும்படி வாரி வேண்டியவற்றைக் கொடுப்பதற் குரிய, பொருள்தனை-(பொருள்களை கொடுத்து அப்புண்ணியத்தால் துறக்க முதலியவற்றில் தங்கிப் போகம் துய்த்து மீண்டும் பிறந் திறந்து உலக வாழ்விலே சுழன்று துன் புறும்படி) வேண்டிய பொருள்களை, கொடாது—கொடுத்தலைச் செய்யாமல் (அருளினால்), தொள்ளை காதினிலே – கேள்வியினாலே துளைக்கப்படாமல் வீணாக ஒட்டை யாகவுள்ள செவிகளின் வழி யாக, பிரணவப் பொருளை—பிரணவப் பொருளாகிய ஜீவப் பிஹ்ம ஐக்கியப் பொருளை, தோன்றிட—(உள்ளத்திலே) தோன்றும் படி, என் தனக்கு—மிகத் தாழ்ந்த (பக்குவி யல்லாத) அடியேனுக்கும், கள்ளை தான் குடித்த தன்மைது ஆக-கள்ளைக் குடித்தவன் மநம் மயங்கி நிற்கும் தன்மை போல, காணும் ஆ(று)—(யானும்) தோன்றும்படி, என் உள்ளத்தை—(முதலில்) அடியே னுடைய மநதை, மயக்கி- தீய

நிலைமையினின்று நீங்கி நல்லனவற்றைக் கொள்ளவும், செய்யவும், செவ்வீ உடைய தாகத் திருத்தி, அளித்த-அருள் செய்த, பிள்ளையார் பட்டி-பிள்ளையர் பட்டியில் எழுந் தருளியிருக்கின்ற, கர்ப்பக களிற்றின்-கர்ப்பக விநாயகப் பெருமானது, பிறங்கு - விளங்காநின்ற, அடிகளை-உபய திரு வடிகளையும். நிதம்-நா டோறும், பணி வாம்-வணங் குவோ மாக. எ—று.

''கள்ளைத் தான் குடித்த தன்மைய தாக'' என்பது, ''ஒப்பல் ஒப்பு'' என்ன லாம். எதிர் மறை உவமம் ஆகும்.

கள்ளைப் பருகினவன் புத்தி தூய நிலைமையி னின்று நீங்கி, நல்லனவற்றை பற்றுதலும் செய்தற்கு முயலுதலு மின்றித் திரிதல் போல், திரு அருளால் என் புத்தியைத் தீய நிலைமையி னின்றும் நீங்கி, நல்லனவற்றை பற்று தலும், செய்தற்கு முயலுதலும் உடை யதாக இருத்தலின் (திரித்தலால்), ''தன் மைய தாகக் காணுமா மயக்கி'' என்றனர். 9

பிள்ளைகள் மிகுந்த பிழைகளைச் செய்தும்
பெற்றவர் மக்களை முனிநது,
தள்ளுதல் உண்டோ உலகினில் அடியன்
றவறினைப் பொருத்தருள் புரியும்,
மள்ளமும் மலையும் மருவியே யிருக்கும்
மாண்புகண் டினிமைய தாகப்,
பிள்ளையார் பட்டிக் கர்ப்பகக் களிற்றின்
பிறங்கடி களைத்திநம் பணிவாம். 10

(இ—ள்.) பிள்ளைகள் மிகுந்த பிழைகள் செய்தும்-தாம் பெற்ற குழந்தைகள் அறியாமையினுலே, மிக்க குற்றங்களைச் செய்தாலும். பெற்றவர் மக்களை முனிந்து-ஈன்றவர்கள் அக் குழந்தைகளை வெறுத்து, தள்ளுதல்



உலகினில் உண்டோ - ஒதுக்கிப் பற்றில்லாமல் விடுதல் உலகத்திலே உண்டா (இல்லை), அடியன் தவறினை-(அறி யாமையினுல்) கிழவ னுகிய யான் செய்த பிழைகளை, பொறுத்து அருள் புரியும்-பொறுத்துக் கொள்ளுதலே யன்றி, (அவற்றை மறந்து) அருள் செய்கின்ற, மள்ளமும்-அருள் வலிமையோடு, மலையும்-மலையையும். மருவியே இருக்கும்-பொருந்தி யிருக்கின்ற, மாண்பு கண்டு-மாட்சி மையை நோக்கி, இனிமையது ஆக-எளி தாக, (அருகே சென்று) பிள்ளையார் பட்டி-பிள்ளையார் பட்டி, கர்ப்பகக் களிற்றின்-கர்ப்பக விநாயகப் பெருமானது, பிறங்கு-விளங்காநின்ற, அடிகளை-உபய திரு வடிகளையும், நிதம்-நா டோறும், பணி வாம்-(மநத்தில் நினைந்து வாக் கால் துதித்துக் காயத்தால்) வணங்கு வோ மாக. எ—று.

இப் பா கோயி லூர் ஆதி ஆண்டவர் ஸ்ரீ முக்தி ராம லிங்க ஞாந தேசிக மூர்த்திகள், தங் குரு பரர் உகந்த லிங்க ஞாந தேசிக மூர்த்திகள் மீது பாடிய, ''பிள்ளை கள் நூறு பிழைகள் செய்தாலும்'' எனத் தொடங்கும் பாவை யடி யொற்றிப் பாடிய பாட லாகும். இது, ''முன் னோர் மொழி பொருளே யன்றியவர் மொழியும்,

''பொன்னே போல் போற்றுவம் என்பதற்கும்,'' (நன் னூல் பாயிரம்) என்னும் வெண்பாவின் கருத்துப் படி நிகழ்கின்ற தென்க. 10

திருப் பூவணம் வேதாந்த மடம் சத சாத்திர கர்த்தா, ஸ்ரீ காசிகா நந்த ஞாநாச்சர்ய ஸ்வாமிகள் இயற்றிய, பிள்ளையார் பட்டி கர்ப்பக விநாயகர் தோத்திர ரச மஞ் சரியும், திருவையாறு, அறு பத்து மூவர் மடாதிபதி, சிதம்பரம் கோ. சித. மடம், சிதம்பர ஞாந தேசிகர் மாணுக்கர். மதுரை தமிழ்ச் சங்கத்து, பண்டித, நாராயண சுவாமிகள் இயற்றிய நுந்தா ஒளி (நித்திய பிரகாச) உரையும் முற்றுப்பெற்றது.

சுபம் அஸ்து.

உ

சிவ மயம்.

## ஜகத் குரு ஸ்ரீ சங்க பகவத் பாதாச்சாரிய ஸ்வாமிகள் தோத்திர ரச மஞ்சரி.

அகப்புறப் பற்றை அகற்றிய அன்பர்
அனைவர்க்கும் ஆன்மஞா நத்தைப்,
புகப்புகப் புகட்டிப் பொய்யுடல் தனிலகம்
புந்தியை நீக்கிநற் றவமார்,
மகத்துரு வமதாய் மன்னிட மதியை
வழிவழி அளித்திட வந்த,
சகத்குரு சங்கர பகவனற் பாதர்
தாள்இணை தலைமிசைக் கொளுவாம். 1

(இ—ள்.) அகப் புறப் பற்றை-(உடலை யான் எனப் பற்றும்) அகப் பற்றும், மாடு மனை முதலியவற்றை என எனப் பற்றும் புறப் பற்றும், ஆகிய செருக்கை, அகற்றிய-உடம்பும் மாடு முதலியவைகளும், அழிந் தொழிவன வாகக் காணப்படுதலாலும், யான் என்பது எனது எனக், காணப்படுதலாலும், என என்பன, என அல்லன வாக வும், போதலாலும், அவைகள் யானு மல்ல, எனவு மல்ல என்று நீக்கியா ஞர் என்று அறிய வேட்கை கொள்கின்ற, அன்பர் அனைவருக்கும்-வேட்கையாளர்க ளாகிய அன்பர் கள் எல்லாருக்கும், ஆன்ம ஞானத்தை-(யான் பிரத்தியக் கபின்ந பிரஹ்மம் என்று அறியும்படி யான) ஆன்ம ஞானத்தை. புக புக புகட்டி-திட அபரோக்ஷ மாக உண்டா கும்படி செய்து, பொய் உடல் தனில் அகம் புந்தியை நீக்கி—அவ் வான்ம ஞானம் திட அபரோக்ஷ மாக உண்டாத லால் அழியும் உடலில் யான் என் றுண்டாகும் மயக்க உணர்ச்சி வாசனா வயத்தால் சிறிதும் வராமல் ஒழித்து, நல் தவம் ஆம்-(ஆன்மாவை அறிய வேட்கை கொண்டு



நின்ற வன்பர் தம் மருளால் ஆன்ம ஞானிக ளாக ஆகி இரு வகைப் பற்றும் முற்றும் விட்டவர் என்பதைப் பின் வரும் ஆன்ம வேட்கையாளர் அவரை அடைந் துய்வதற் காக) துற வறத்திற் குரிய, மகத்து உருவமது ஆய்—து றவு வேட மாதிய உயர்ந்த வேட முடையவர்க ளாகவே. வழி வழி மன்னிட-பரம்பரை யாகப் பொருந்தி வாழும்படி, மதியை அளித்திட—அத் தகைய புத்தியையும் அளிப்பதற் காக, வந்த - (தத்துவ ஞான பரமாச்சாரியரா கவும், துற வறச் செம்ம லாகவும் எழுந்தருளி வந்த-சகத் குரு நல் சங்கர பகவத் பாதர் தாள் இணை-உலக குரு பர ராகிய ஸ்ரீ சங்கர பகவத் பாதா ளுடைய இரு திரு வடிகளை யும், தலை மிசை கொளு வாம்-யாங்களும் அவ் வாறு திடாப ரோக்ஷ ஞானிக ளாகவும், துற வறச் செம்மல்க ளாகவும், விளங்க வேண்டி எங்கள் தலையிலே சூட்டிக் கொள்ளு வோ மாக. எ—று.

"கொள்ளுவாம்" என்பது, பா வாதலால், "கொளு வாம்" என, ளகரங் தொக நின்றது.

"புகப் புகட்டி" என்பதற்கு, முதலில் சாதநங்கள் புகு மாறு செய்து, பின்னர்த் திடாபரோக்ஷ மாக வுண் டாகும்படி செய்து, என வுரைப்பினும் பொருந்தும். தவம் என்பது, இல் லறத்தையும், "நற் றவம் என்பது, துறவறத் தையும் உணர்த்தும். இது, "நற்றவஞ் செய் வார்க்கிடம் தவஞ் செய்வார்க்கு மஃதிடம்" (சீவக சிந்தாமணி) என்பது முதலியவற்றுற் புல னுகும். 1

சகலரும் உனது சொருபமே என்று
சாஸ்திரம் புகன்றுமே தம்முள்,
விகலமில் லாமல் வேதவா ணியைக்கொள்
விபுதரும் விருப்புடன் கூற,

அகக்கர ணத்தால் அகம்பிர மாஸ்மி
யெனஎணி நிற்குமா றளித்த,
சகத்குரு சங்கர பகவனற் பாதர்
தாளிணை தலைமிசைக் கொளுவாம். 2

(இ—ள்.) சகலரும்—எல்லாச் சீவர்களும் (எல்லாச் சடப் பொருள்களும்) உனது சொருபமே என்று—உன் னுடைய வடிவமே என்று (அதிகாரியைப் பார்த்து) சாஸ்த்திரம்—வேதங்களும் வேத வழித் தோன்றிய நூற் களும் புகன்றும்—சொல்லியும், தம் உள் விகலம் இல்லாமல்—தங்களுக் குள்ளே வேறு வே றாக அறியாமல், வேத வாணியை கொள்—நான்கு வேத சித்தாந்தத்தை ஒரே படியாக அறிந்த, விபுதரும்—வேதியர்களும், விருப்புடன் கூற—நேரே அறிய முடியாதவர்களுக்கும் நேரே அறிந்தவர் களுக்கும் ஐயந் திரி பகலவும் விருப்பத்துடன் கூறும் படியும், அகக் கரணத்தால்—(அவ் வேத முதலிய நூல் களையும் வேத முணர்ந்தார் கூறும் மொழிகளையும் கொண்டு) அந்தக் கரணத்தினுலே, அகம் பிரஹ்ம அஸ்மி என எண்ணி நிற்கும் ஆறு—தேகதிரய அவஸ்தாத் திரய சாக்ஷியும் பிரத்தியக்கு மான யான் சர்வ சாக்ஷி யான பிரஹ்ம மாயிருக்கிறேன் என்று சிந்தித்துத் திடாப ரோக்ஷ ஞானத்தைப் பெறும்படியும், அளித்த—சாயனர் உருவ மாக வந்து வேத பாஷ்யங்களையும் முதலில் உப நிஷதம் இதை பிரஹ்ம சூத்திரங்களுக்கும் பாஷ்யங் களையும் செய்து அத்வைத சித்தாந்த மாகிய வேதாந்த சித்தாந்தம் உலகில் என்றும் நிலை பெறுக எனத் திரு வுளத் தெண்ணி அருள் செய்த, சகத் குரு சங்கர பகவன் நல் பாதர் தாள் இணை—உலக குருபர ராகிய ஸ்ரீ சங்கர பகவத் பாதா ளுடைய இரு திரு வடிகளையும் தலைமிசை கொளுவாம்—யாங்களும் அவ் வாறு திட அபரோக்ஷ ஞானிக ளாகவும் துற வறச் செம்மல்க ளாகவும், விளங்க வேண்டி, எங்கள் தலையிலே சூட்டிக் கொள்ளுவோ மாக எ—று.



ஸ்ரீ வித்தியாண்ய சுவாமிகளையே பூர்வாசிரமத்தில், "சாயணர் என்பர்" என்பார்கள். 2

அகிலமும் ஈசன துருவம தென்றும்
அன்புளார் எவருமே அதனைச்,
சககர ணமதாய்ச் சாருவர் என்றும்
சதாவீ சாவாஸ்ய நிஷதம்,
புகலுவ தாலும் பூரணப் பிரமம்
பொள்ளென அடைவதற் கருளச்,
சகத்குரு சங்கர பகவன்நற் பாதர்
தாள் இணை தலைமிசைக் கொளுவாம். 3

(இ—ள்.) அகிலமும் - அறியப்படுவனவும் அறியப் படாதனவும் ஆகிய எல்லாச் சட சேதநப் பொருள்கள் அனைத்தும், ஈச (உ) னது உருவமது என்றும்-பிரஹ்மா பின்ந பிரத்தியக் காகிய உன்து வடிவமே, உனக்கு வே றாக யா தொன்றும் இல்லை என்றும், அன் புள்ளார் எவரும்—ஆந்ம வேட்கை உள்ளவர் அனைவரும், அதனை—அவ் வாந்ம வடிவ பிரஹ்மத்தை, சக கரணம தாச் சாருவர் என்றும், கற்பித மாகத் தோன்றும் உலகம் முழுதும் பிரஹ்ம சொருபமே என் றறிந்து அவ் வுலகம் வேறு என்கிற எண்ணத்தை விடுகையாகிற எண்ணத்தினுலே அடைந்த தன் அடை வாக அடைந் தின் புரு வாக இருப்பார்கள் என்றும், சதா-எப் பொழும், ஈசாவாஸ்ய நிஷதம்-ஈசா வாஸ்ய உபநிஷதம், புகலுவதாலும், (உண்மையை உரைப்பதாலும் இதனை அறிந்தவர் சம்சாரத்தினின்றும் கரை ஏறி யின்புறுவர் என்னும் திடத்தினுலும் மகிழ்ச்சி யுடன்)மொழிவதாலும், பூரண பிரமம் பொள் என அடை வதற்கு-தேச கால வஸ்து பரிச்சேதம் இன்றி, நிறைந்த பிரஹ்மத்தை நிலையாத தேகம் நிலை யான போதே அடை

வதற் காக (பிரத்தியக் காகிய யான் அப் பிரஹ்ம மாக இருக் கின்றேன் என் று அறிவதற் காக) அருள-திரு அருள் பாலித்த, சகத் குரு சங்கர பகவன் நல் பாதர் தாள் இணே தலேமிசைக் கொளுவாம்-உலக குருபர ராகிய நல்ல சங்க பகவத் பாதா ளுடைய இரு திரு வடிகளேயும் யாங்க ளும் அவ் வா று திட அபரோக்ஷ ஞாநிக ளாகவும், து ற வறச் செம்மல்க ளாகவும், விளங்க வேண்டி எங்கள் தலேயிலே சூட்டிக் கொள்ளுவோ மாக. எ—று.

"புக ழுவதா லும்'' என் றதில் உம்மை, பிற உபநிஷதங் கூ றுவ தன் றி.என இறந்தது தழீஇ நின் றது. புகலுதல்- மகிழ்ச்சி உடன் உ ரைத்தல். 3

செகமெலாம் போற்றத் திக்கெலாஞ் செயித்துச்
செய்தநூல் நூறுட னேதான்,
இகவிலாப் பாஷ்யம் எனும்உரை விரிவாய்
எட்டிரண் டாமுப நிடதத்,
தகவுட னியற்றிச் சகலரும் ஆநந்த
சாகர ராயிருப் பருளும்,
சகத்குரு சங்கர பகவனற் பாதர்
தாள் இணே தலேமிசைக் கொளுவாம். 4

(இ—ள்.) செகம் எலாம் போற்ற-உலகத் துயர்ந்த வர்கள் எல்லாரும் புகழும்படி, திக்கு எலாம் செயித்து- திக்குகள் அனேத்திலும் உள்ள பிற மத வாதிகள் எல்லா ரையும் வென்று முடிவில் சர்வஞ்ஞ பீடம் ஏறி வீற்றி ருந்ததோடு, நூறு நூல் செய்தல் உடனே - பல நூல்களே அத்வைத சித்தாந்தத்தை வெளிப்படவும் அந்தர்க்கத மாக(உள்ளீ டாக) நிலவவும் வைத்துச் செய்தருளியதுடன், இகவு இலா பாஷ்யம் எனும் உரை-பிற பாடியங்கள் போல வெறுத்துத் தள்ளத் தக்க தாக இல்லாமல் (நுண் புல



முடையார் எல்லாரும் கொள்ளத் தக்க தாக) விளங்கு கின் ற பாஷ்யம் என்கின் ற உ ரையை, எட்டு இரண்டும் ஆம் உபநிஷதம்-ஈசாவாஸ்யம் என்னும் உபநிஷத முத லிய பத்து உபநிஷதங்களுக்கும் (பகவற் கீதை பிரஹ்ம சூத்திரங்களுக்கும்) ஜநத் சு ஜா தி ய ம், அஸ்தாமலகம், நரசிஹ்ம பூர்வ தாபநீயம், உத்தர தா ப நீ ய ம் ஆகிய ஆறும், ஆக பதி னறுக்கும் (பா ஷ் ய ம்), தக வுடன் இயற்றி-தகுதி அமையச் செய்து, சகலரும் - (அண்மை சேய்மைகளில்) மந்தர் முதலிய எல்லா அதிகாரிகளும் (படித்து) ஆநந்த சாகரரா யிருப்பதற்கு, அருளும்-பிரஹ்மா நந்தக் கட லாகி யிருப்பதற்கு அருள் புரிகின்ற, சகத் குரு சங்கர நல் பகவத் பாதர் இணே தாள் தலே மிசை கொளு வாம்-உலக குருபரர் ஆகிய நல்ல சங்கர பகவத் பாதா ளுடைய இரு திரு வடிகளேயும் யாங்களும் அவ் வா று திட அபரோக்ஷ ஞாநிக ளாகவும், துறவறச் செம்மல்களாகவும், விளங்க வேண்டி எங்கள் தலேயிலே சூட்டிக் கொள்ளு வோ மாக. எ—று.

பாஷியம் பதி னறு ஆவன 1 ஈசாவாஸயம். 2 கேநம். 3 கடம் 4 பிரசிநம். 5 முண்டகம். 6 மாண்டூக்யம். 7 ஐ தே ரே ய ம் 8 தைத்திரீயம். 9 சாந்தோக்கியம். 10 பிருக தாரண்யம். 11 பிரஹ்ம சூத்தரம். 12 பகவற் கீதை 13 ஜநத்சுஜாதீயம் 14 நிருசிஹ்ம பூர்வ தாபநீயம். 15 உ த் த ர தா ப நீ ய ம். 16 அ ஸ் தா ம ல க ம். என்பன வாம்.

உபநிஷதம் பத்து ஆவன 1 ஈசாவாஸயம். 2 கேநம். 3 முண்டகம் 4 மாண்டூக்கியம். 5 கடம். 6 பிரசிநம். 7 ஐதரேயம். 8 தைத்திரீயம். 9 சாந்தோக்கியம். 10 பிரக தாரண்யகம். என்பன வாம். 4

பகவிலாத் தேவி பூசையைப் பண்ணப்
பண்ணிய பிரபஞ்ச சாரம்,
அகலிலா நூலை அநுதினம் படித்தால்
அம்பிகை அருளினை அடைந்து,
இகலிலாப் பூசை இயற்றியே இகத்தில்
இன்பமாம் சொரூபத்தை அடைய,
சகத்குரு சங்கர பகவனற் பாதர்
தாள்இணை தலைமிசைக் கொளுவாம். 5

(இ—ள்.) பகவு இலா தேவி பூசையை பண்ண—இறைவனோடு பிரிவிலா திருக்கும் அருள் மய மான தேவியை பூசை செய்வதற் குரிய முறைகளை விளக்கும் படி யாக, பண்ணிய பிரபஞ்ச சாரம்-செய் தருளிய பிர பஞ்ச சாரம் என்னும்-அகல் இலா நூலை-நிலைத்த நூலை, அநுதினம் படித்தால்-நா டோறும் படித்தால், (என்றும் படித் துணர்ந்தால்,) அம்பிகை அகல் இலா-அம்பாளது இடைவிடாது செய்கின்ற (நா டோறும் செய்கின்ற), பூசை இகத்தினில் இயற்றி-பூசையை இவ் வுலகில் செய்து, அருளினை அடைந்து-அம்பாள் திரு வருளை பெற்று, இன்பம் ஆம் சொரூபத்தை அடைய-இன்ப வடி வாகிய ஆன்ம சொரூபத்தை அடைந்ததன் அடை வாக அடைந் தாறுதல் பெற லாம், அவ் வா றடைந் தாறுதல் பெறுவ தற்கு, சகத் குரு நல் சங்கர பகவத் பாதர் தாள் இணை தலை மிசைக் கொளு வாம். உலக குருபர ராகிய நல்ல ஸ்ரீ சங்கர பகவத் பாதா ளுடைய இரு திரு வடிகளையும் யாங்களும் அவ் வாறு திடாப ரோக்ஷ ஞாநிக ளாகவும், துற வறச் செம்மல்க ளாகவும் விளங்க வேண்டி எங்கள் தலையிலே சூட்டிக் கொள்ளுவோ மாக. எ—று. 5



பகவனற் கீதை படிப்பவர் தமக்குப்
பலவித சமுசயம் உண்டாம்,
அகர்அகர் என்றே அறிந்துமே அவரவர்
ஆற்றலை அளவிட்டாற் போலப்,
படுதரம் ஆகப் பாஷியம் செய்த
பான்மையை மநத்தினில் உன்னிச்,
சகத்குரு சங்கர பகவனற் பாதர்
தாள்இணை தலைமிசைக் கொளும். 6

(இ—ள்.) நல் பகவன் கீதை படிப்பவர் தமக்கு-நல்ல பகவற் கீதையை படிப்பவர்களுக்கு, பல வித சமுசயம் உண்டாம்-அது பல வித மாகப் பொருள் கொள்ளு மாறு ஆழ்ந்து கிடத்தலால், இவ் வாறோ? அவ் வாறோ? எனப் பல வகை யான ஐயப்பாடுகள் பொருளை நிச்சயிக்கும் பொழுது உண்டாகும் ஆதலால், அகர் அகர் என்றே அறிந்துமே-ஒவ் வொருவர் உரைகளைப் பார்க்கும் பொழுது, இவர் உண் ணுழைந்து எழுதியவர் எனவும், இவர் அவரை விட உண் ணுழைந்து எழுதியவர் எனவும், சொல்லும்படி அறிந்து, அவர் அவர் ஆற்றலை அளவிட்டால் போல-அவர் அவரும் தங்கள் தங்கள் உரை யிடும் ஆற்றலை அளவிட்டுக் காட்டினால் போல, படு தரம் ஆக-பலபடி யாக, பாஷ்யம் செய்த பான்மையை-பாஷ்யம் செய்த தன்மையையும், (அக் கீதையின் உட் கருத்தை உள்ளபடி விளக்கி எழுதிய சங்கர பாஷ்யம் அமைந்த தன்மையையும்), மநத்தினில் உன்னி-மநதிலே சீர் தூக்கி பார்த்து (அந் நன்றி மறவாமல்), சகத் குரு நல் சங்கர பகவன் பாதர் தாள் இணை தலைமிசை கொளு வாம்-உலக குரு பர ராகிய ஸ்ரீ ஜகத் குரு நல் சங்கர பகவத் பாதா ளுடைய இரு திரு வடிகளையும் யாங்களும் அவ் வாறு திடாபரோக்ஷ ஞாநிக ளாகவும், துற வறச் செம்மல் க ளாகவும் விளங்க வேண்டி எங்கள் தலையிலே சூட்டிக் கொள்ளுவோ மாக. எ—று. 6

உகவரும் மதங்கள் யாவுமே உண்மை
அலஎன உவர்த்துநின் றொழித்தும்,
சுகநிலை யருளுமத் துவிதமா நிலையே
தூயதென் றுணர்த்தலால் எவரும்,
சககுரு வென்னத் தனித்தமர் உயர்ந்த
சற்குரு மத்குரு பரராம்,
சகத்குரு சங்கர பகவனற் பாதர்
தாள் இணை தலைமிசைக் கொளுவாம். 7

(இ—ள்.) உக வரும் மதங்கள் யாவுமே-மநம் அழிந்து வருந்தும்படித் தோன்றித் துன்ப வழியிற் செலுத்தியின் பந் தருவன போல விளங்குகின்ற எல்லா மதங்களும், உண்மை அல—மெய் நெறியைக் காட்டுவன வாகா, என உவர்த்து நின்று ஒழித்து-என்று வெறுத்து ஒதுக்கி விட்டு, சுக நிலை அருளும்-சுக சொரூப மான ஆத்ம சாக்ஷாத்கார நிலையை அடைவிக்கக் கூடிய, அத்து விதம் ஆம் நிலையே—நிலை ஆன அத்துவிதக் கொள்கையே. தூயது என்று-குற்ற மற்ற கொள்கை யாகும் என்று, உணர்த்தலால்-உலகிற்கு உள்ளபடி அறிவித்தலால், எவரும்-எல்லாரும். சக குரு என்ன-உலக குரு என்று மொழியும்படி, தனித்து அமர்-இணை யின்றி எழுந்தருளி யிருக்கின்ற, உயர்ந்த சத் குரு-உயர் வான சத்தை யளிக்கின்ற குருபரரும், மத் குரு பரர் ஆம்-எங்களுக்கு உரிய குருபரரும் ஆகிய, சகத் குரு நல் சங்கர பகவன் பாதர் தாள் இணை தலை மிசை கொளு வாம்—உலக குருபரர் ஆகிய நல் ஸ்ரீசங்கர பகவத் பாதர்களுடைய இரு திரு வடிகளையும் யாங்களும் அவ் வாறு திட அபரோக்ஷ ஞாநிக ளாகவும், துற வறச் செம்மல்க ளாகவும், விளங்க வேண்டி எங்கள் தலையிலே சூட்டிக் கொள்ளுவோ மாக. எ— று 7



செகம்புகழ் குருகோ விந்தநற் பகவற்
பாதர்தம் திருவடி பணிந்து,
மிகமுயன் றிதயம் வருத்தமெய் தாமல்
மேன்மைரு பத்தினை அடைய,
நகுதலில் மநதை எவருக்கும் அருளி
நன்மைகள் பலபல புரிந்த,
சகத்குரு சங்கர பகவன்நற் பாதர்
தாள்இணை தலைமிசைக் கொளுவாம். 8

(இ—ள்.) மேன்மை ரூபத்தினை அடைய-மேன்மைகள் எல்லாவற்றினும் மேன்மை யான ஆந்ம ரூபத்தை அடைந்ததன் அடை வாக அடைவதற்கு, மிக முயன்று இதயம் வருத்தம் எய்தாமல்-மிகுதி யாகப் பல முயற்சிகளைச் செய்து மநம் வருந்தாதபடி, செகம் புகழ் குரு கோவிந்த நல் பகவத் பாதர் திரு வடி-உல கெலாம் புகழும்படி யான கோவிந்த பகவத் பாதா ளுடைய பிறவியை ஒழிக்க வல்லன வாதலால் நல்லன வாகிய திரு வடிகளை, பணிந்து-வணங்குத லாகிய எளிய வழியில் நிற்பதற்கு, நகுதலில் ம ந தை எவருக்கும் அருளி-சிரித் திகழாமல் ஒருப்படுகின்ற மநதைத் தன்னை யண்டுகின்ற எல்லாருக்கும் கொடுத்து. நன்மைகள் பல பல புரிந்த-நன்மை யளிப்பன வாகிய சாதந சதுஷ்டய முதலியவற்றையும் உண்டாகும்படி செய்கின்ற, சகத் குரு நல் சங்கர பகவத் பாதர் தாள் இணை த லை மி சை க் கொளு வாம்-உலக குருபரர் ஆகிய நல் ஸ்ரீ சங்கர பகவத் பாதர்க ளுடைய இரு திரு வடிகளையும் யாங்களும் அவ் வாறு திட அபரோக்ஷ ஞாநி களாகவும், துற வறச் செம்மல்க ளாகவும், விளங்க வேண்டி எங்கள் தலையிலே சூட்டிக் கொள்வோ மாக. எ— று

தங் குருபரரின் மேன்மையைத் தான் கண்டிருத்தலால் தம்மைச் சார்ந்தவரையும், அக் குருபரரி னடியை வணங்கு மாறு அவர்கள் மநதைத் தூய்மை படுத்துபவர் என்

பார், "செகம் புகழ் குரு கோவிந்த நற் பாதர் திரு வடி பணிந்து நகுதலில் மநதை எவருக்கும் அருளி" என்றனர். பாப நெஞ் சுடையார் சான்றோ ரடி வணங்கலில் வெறுப் புடைய ராவ ராதலில், "நகுதலில் மநதை யெவருக்கும் நல்கி" என்றனர். தன்னை வீடு பெறுங் குறிப்புடன் எவர் வந் தடையினும், நன் மந மருளுவா ரென்பார். "எவருக் கும்" என்றனர். 'நல்' என்பதைத், திரு வடிக்குக் கூட்டி யுரை யுரைக்கப்பட்டது, "நற்றுருள்' என்று சான்றோ ராண்டிருத்தலால். என்க. 8

புகலரும் பரத்தைப் புநிதநின் அருளால்
புந்தியிற் கொள்ளுமா றுனது,
அகலறும் அடியை அடைந்தனன் அடியேன்
ஆதரித் தருளுவாய் என்னைச்,
சகமதில் உனறன் அடிமைஎன் றுரைக்கத்
தக்கவர் கூட்டுற வளிப்பாய்,
சகத்குரு சங்கர பகவன்நற் பாதர்
தாள்இணை தலைமிசைக் கொளுவாம். 9

(இ—ள்.) புகல் அரும் பரத்தை–மாற்ற மநங் கழிய நின்ற பரம் பொருளை. புநித நின் அருளால்–இயல் பாகவே ஆவரண விக்ஷேப மலங்க ளற்ற தூய்மை யான குரு பரர் ஆகிய தேவரீ ருடைய திரு அருளாலே, புந்தியில் கொளும் ஆறு–தா னுகை புத்தியிலே கொள்ளும்படி, உனது அகல் அரும் அடியை–தேவரீரது அடியார்கள் உள்ளக் கமலத்தை விட்டு நீங்காத திரு வடியை, அடியேன் அடைந்தனன்– உன் பழ வடியா னுகிய யான் அடைக்கல மாக வந்து சார்ந்தனன், என்னை–அவ் வாறு வந்து சார்ந்த அடியேனை, ஆதரித்து அருள்வாய்-பேணி அருள்வா யாகி, சகமதில்-இவ் உலகத்திலே. உன் தன் அடிமை என்று உரைக்க தக்கவர்- தேவரீ ருடைய அடியவர் என்று உரைக்கத் தகுந்த (ஞாந வொழுக்க முடையவர்களோடு, கூட் டுற வளிப்பாய் -



சேர்ந்து வாழும் சேர்க்கையைக் கொடுத்தருள்வா யாக (என்று). சகத் குரு நல் சங்கர பகவத் பாதர் தாள் இணை தலைமிசை கொளு வாம்-உலக குருபர ராகிய நல் ஸ்ரீ சங்கர பகவத் பாதா ளுடைய இரு திரு வடிகளையும் யாங் களும் அவ் வாறு திட அபரோக்ஷ ஞாநிகளாகவும், துற வறச் செம்மல்க ளாகவும், விளங்க வேண்டி எங்கள் தலை யிலே சூட்டிக் கொள்ளுவோ மாக எ—று.

'அடிமை' என்பது, உயர்திணைப் பன்மையை உணர்த்தி நின்றது. "இது போன்ற குடிமை முதலியனவும், இரு திணைக்கும் ஒத்த உரிமையன என்பது. 'குடிமை யாண் மை" (தொல் - சொல்-கிளவி யாக்கம்.) என்பது கொண்டு துணியப்படும். 'என்று' என்பது, சொல் எச்சம் ஆக வருவிக்கப்பட்டது. 9

பகவனற் பாதர் தமையடைந் தவரைப்
பாருளோர் யாவரும் மதிப்பர்,
சகமதிற் கூறும் உரையினைக் கேட்டுத்
தண்திரு வடிகளை அடைந்தேன்,
அகமெனு மதியை அகற்றியே என்னை
ஆண்டருள் செய்திடல் வேண்டும்,
சகத்குரு சங்கர பகவனற் பாதர்
தாள்இணை தலைமிசைக் கொளுவாம். 10

இ–ள். சகமதில்-இந்த வுலகத்தில், நல் பகவத் பாதர் தமை-நல்ல சங்கர பகவத் பாதாளை, அடைந்தவரை - அடைக்கல மாக அடைந்த அடியவரை, பார் உள்ளோர் யா வரும் மதிப்பர்-பூ வுலகிலே யுள்ள எல்லாரும் (மேன்மை யாள ராகத் தேவரீர் ஆக்குதலால்) மேன்மையாள ராகக் கருதுவார்கள். (தாழ்ந்த நிலையிலே யிருக்கவிட மாட்டார்), கூறும் - (என்று) கூறுகின்ற, உரையினை கேட்டு-மொழி யை பலர் சொல்லக் கேட்டு, தண் திரு வடிகளை அடைந்

தேன்-தேவரீரது சம்சார தாபத்தை ஒழித்து முக்தி யாகிய குளிர்ந்த சோலேயிலே புகவிடுகின்ற திரு வடி சகடத்தை சார்ந்தனன் (அடைந்தனன்), அகம் எனும் மதியை-(ஆதலால்) யான் ஆகாத தூலதேகாதிகளே யான் என்று பற்றும் புத்தியை. அகற்றி-ஒழித்து, என்னே ஆண்டு அருள் செயல் வேண்டும் - அடியேனே பிரத்தியக் கபிந்ந பிரஹ்மமே யான் என்று திட மாகக் கண்டு மரச் சோலேயை அடைந்து இறுமாந் திருக்கு மாறு அடிமை கொண்டு அருள் புரிய வேண்டுமென்று, சகத் குரு நல் சங்கர பகவத் பாதர் தாள் இணே தலே மிசைக் கொளு வாம்-உலக குருபர ராகிய நல் ஸ்ரீ சங்கர பகவத் பாதா ளுடைய இரு திரு அடிகளேயும், யாங்களும் திட அபரோக்ஷ ஞாநிக ளாகவும், துற வறச் செம்மல்க ளாகவும். விளங்க வேண்டி எங்கள் தலேயிலே சூட்டிக் கொள்ளுவோ மாக. எ—று

சகடம்-வண்டி, சங்கரன் வீட் டின்பத்தை அளிப்பவன், மற்றைய உலக இன்பம், இன்பம் ஆகா வாகலின், வீட் டின்ப மளிப்பவன் என்று பொருள் கூறலே பொருந்தும். 10

திருப் பூ வணம், வேதாந்த மடாதிபதி, ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சாரிய ஸ்வாமிகள் இயற்றிய, ஸ்ரீ சகத் குரு சங்கர பகவற் பதாசாரிய ஸ்வாமிகள் ஸ்தோத்திர ரச மஞ்சரியும், திரு வை யாறு, அறுபத்து மூவர் மடாதிபதி, சிதம்பரம், கோ. சித. மடம், ஸ்ரீ சிதம்பர ஞாந தேசிகர் மாணுக்கர், சங்கத்து பண்டித, ஸ்ரீ நாராயண சுவாமிகள் இயற்றிய நுந்தா ஒளி (நித்தியப் பிரகாச) உரையும் முற்றுப் பெற்றது.

எல்லாரும் இன் புற்று இனிது வாழ்க.

ஆக ஏழு வகை, தோத்திரத்துக்கு கவி-70.

---

(34 முதல் எழுத்துக் கொண்டது)

உ சிவ மயம்

ஓம் தத் சத், பரம் பிரஹ்மணே நம:

# விம்சதி ஸ்தோத்திர ரச மஞ்சரி.

(இரு பது புகழ்ப் பாச் சுவைப் பூங் கொத்து.)

இது

சத சாஸ்திர கர்த்தா, திருப் பூ வணம், வேதாந்த மடம்,
ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிக ளவர்களால்
இயற்றப்பெற்று,



திரு வை யாறு, அறு பத்து மூவர் மடாதிபதி,
சிதம்பரம், கோ. சித. மடம்,
ஸ்ரீ சிதம்பர ஞாந தேசிக ஸ்வாமிகள்
மாணுக்கர்
ஸ்ரீ நாராயண சுவாமிகளால் இயற்றப் பெற்ற,

நுந்தா ஒளி (நித்தியப் பிரகாச) உரையுடன்

திருப் பூ வணம், வேதாந்த மடாதிபதி,
ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகளால்
மதுரை, V. சுப்புராயலு நாயுடு பிரஸில்,
பதிப்பிக்கப்பட்டது.

 1964 [விலை பைசா 25

## சப்ததா சப்ததி: பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 3 | 17 | துன்பதுடன் | துன்பத்துடன் |
| ,, | 22 | நூனியை | நுனியை |
| 10 | 4 | படுப்திப் | படுத்திப் |
| ,, | 28 | காசியில | காசியில் |
| 11 | 21 | கிலா | கியலா |
| 14 | 14 | அபநா | அபாநா |
| ,, | 27 | (தனது) | (தனது |
| 17 | 13 | தவராது | தவறுது |
| 18 | 22 | ததிசி | கபில |
| ,, | 25 | தூய்மையா | தூய்மையாய் |
| ,, | ,, | ததிசி | கபில |
| 19 | 18 | திருந்து | ச்சகரர் |
| 20 | 23 | னீரலே | னீரிலே |
| 26 | 26 | தம் | தலம் |
| 28 | 13 | சொச்சொரூம் | சொச்சொரூபம் |
| 36 | 14 | முசு | மூசு |
| 40 | 24 | சோபாதிகம் | சோபாதிகப் |
| 46 | 7 | சாசியில் | காசியில் |
| 52 | 27 | பணிகளை | பனிகளை |
| 64 | 21 | மாணவறி | மாணவரி |
| 73 | 13 | பிரபஞ்சார | பிரபஞ்ச சார |
| 76 | 10 | காப்பா | கப்பா |
| ,, | 26 | பழமாம் | பழமா |
| 77 | 1 | மீர் | மீன் |
| 78 | 29 | என்று | என்றும் |
| 82 | 18 | மநத்தைத் | மநத்தை |

## விம்சதி ஸ்தோத்திரம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 7 | 24 | அறியவரம் | அறியவாம் |
| ,, | 28 | அவர்ளுகம் | அவர்களும் |
| 8 | 13 | முறையினி | முழையினி |
| 9 | 27 | அப்பதியான் | அம்பதியான் |
| | 14 | முதீர் | முதிர் |
| ,, | 29 | கருள்கென | கருன்கென |



## 20 பாட்டு முதற் குறிப்பு.



## மலைகளில், கடவுள் எழுந்தருளி யிருப்பதும், பல உரு வாக மலை அமைந்திருப்பதும். ஆன 103 மலைகள்.

### 1 மலை உருவம்

1 நாக மலை (சர்ப்ப கிரி பாம்பு மலை) 2 கழுகு மலை 3 யானை மலை
4 பசு மலை 5 குங்கும மலை 6 விபூதி மலை 7 மயில் மலை
8 பன்றி மலை 9 புராக் கூட்டு மலை 10 பரங்கி மலை

### 2 மலையில், கடவுள் இருப்பது.

11 பழநி மலை 12 சுவாமி மலை 13 வள்ளி மலை
14 தெய்வ யானை மலை 15 சுப்பிரமணிய மலை
16 வெண் ணெய் மலை 17 குன்றக் குடி மலை 18 மைலம் மலை
19 கழுகு மலை 20 கந்தமாதந பர்வதம் 21 விநாயக மலை (நாயக மலை)
22 திண்டுக் கல் மலை 23 நாமக் கல் மலை

### 4 கடவுள் இருப்பதும், மலையும்.

24 திரு எறும்பியூர் மலை 25 திரு ஈய்ங்கோய் மலை
26 திருச் செங் கோடு மலை 27 திரு மெய்யம் மலை [சத்ய கிரி]
28 திரு மால் இரும் சோலை மலை 29 திரி யம்பக மலை
30 சித்தர் மலை 31 நந்தி மலை 32 மந்தர மலை 33 விந்த மலை
34 நிஷத மலை 35 ஹேம கூட மலை 36 கோவர்த்தந கிரி
37 ஓங்கார மலை 38 துரோண அசலம் 39 கந்யா குமரி மலை
40 சஞ்ஜீவி மலை 41 வெங்கட மலை (திரு மலை)
42 பெருமாள் மலை 43 கெருடன் மலை 44 வாந மா மலை
45 நாக மலை 46 நொடித்தான் மலை 47 மாணிக்க மலை
48 கைலாச பர்வதம் 49 திருப்பதி 50 கதிர் காம மலை 51 ஊதி மலை
52 கநக கிரி 53 கொங்கண கிரி 54 அண்ணு மலை
55 கழுக் குன்றம்

56 பிரான் மலை [விருத்த கிரி)
57 பரன் குன்றம்
58 முது குன்றம் (விருத்தாசலம்
59 சிவ கிரி
60 இம கிரி (பனி மலை)
61 கொல்லி மலை
62 அருண கிரி (செம் மலை)
63 சோண அசலம் [மலை)
64 வெள்ளி அய கிரி
65 சுவேத கிரி (வெள்ளி
66 விராலி மலை
67 பொன் மலை (தங்க மலை)
68 சதுர கிரி
69 அழகு மலை
70 தணிகா அசலம் (திருத் தணி)
71 காள ஹஸ்தி மலை
72 நீர் மலை (தண் ணீர் மலை)
73 வேத கிரி (வேத அசலம்)
74 ரத்ந கிரி
75 கிருஷ்ண கிரி (கருப்பு மலை)
76 விந்திய மலை
77 நீல மலை (நீலாசலம்)
78 சென்னி மலை
79 நார்த்த மலை
80 கொடு முடி
81 மயில் நாக பர்வதம்
82 திரி சிரா மலை
83 குமரி மலை
84 சங்க கிரி (சங்கு மலை)
85 குற்றாலம் (திரி கூடாசலம்)
86 அருக்கொணா மலை
87 கொடுங் குன்றம்
88 திருக் கோண மலை
89 சகஸ்ர கிரி (ஆயிர மலை)
90 சிற் கொந்த மலை
91 புகழி மலை
92 குரு மலை
93 பொதிய மலை
94 ஆவுக் கோடு
95 ஊதி கிரி
96 எழு மலை (சப்த கிரி)
97 குருடி மலை
98 கொங்கண கிரி
99 சக கோத்தரி
100 ஸ்ரீ சைலம்
101 தென் சேரிக் குன்று
102 ரசத கிரி
103 ராஜ கெம்பீர வள நாட்டு மலை

ஆக 103.

இம் மலைகளுள். திரு அண்ணாமலையும் ஒன் றாகும். 1 அருண கிரி, 2 சோண சைலம, 3 சோணாசலம், 4 சோதி மலை, 5 அழல் ஓங்கிய ஓங்கல், 6 அழல் கிரி, 7 கனல் மால் வரை, 8 அருணாசலம, 9 அருண மலை, 10 சோண கிரி, 11 சோதிக் கிரி, 12 சோணாத்திரி, என்னும் 12 பெயர்களை உடைய தாம்.

நதிகளும், தெய்வங்க ளாகப் புகழவும், பூசிக்கவும், படும்

1 கங்கை
2 யமுனை
3 சரஸ்வதி
4 நருமதை
5 காவேரி
6 குமரி
7 கோதாவரி
8 சிந்து
9 தாமிர பருணி
10 துங்க பத்திரி
11 கிருஷ்ணி

இப் பதி னொன்றில், கங்கா நதியும் ஒன் றாகும்.

---

உ

சிவமயம்.

# விம் சதி ஸ்தோத்திர ரச மஞ்சரி.

## (இரு பது புகழ்ப் பாச் சுவை பூங் கொத்து.)

## திரு அண்ணா மலை,

## அண்ணா மலையார் தோத்திர ரச மஞ்சரி.

### நுந்தா ஒளி (நித்தியப் பிரகாச) உரை.

---

எண்ணருஞ் சோதி உருவமாய் இலங்கி
எழிலமர் கார்த்திகை மதியில்,
மண்ணவர் தேவர் வந்தடி பரவ
மதியினில் அவர்க்கொளி யாக்கிப்,
பெண்ணணங் குண்ணா முலையவ ளுடனே
பெரிதுளம் மகிழ்ந்துவீற் றிருக்கும்,
அண்ணல்எம் அண்ணா மலையவர் அடியை
அன்புடன் வணங்கிவாழ்த் திடுவாம். 1

(இ—ள்.) எண் அரும் சோதி யுருவம் ஆய் இலங்கி- இத் தன்மைய தென்று அள விட்டுக் கூறுதற் கியலாத ஒளி வடி வாக விளங்கி, எழில் அமர்–விழாவின் எழுச் சியும், பிற வளங்களின் எழுச்சியும், தங்கிய, கார்த்திகை மதியில்–காத்திகை மாதத்தில், மண்ணவர்–மழை நீரால் வாலாமை போக்கடிக்கப்படுதலால். மண் என்று பெயர் பெறுகின்ற நிலத்திலே தோன்றிய மக்களும், தேவர்– விரும்பியவற்றைச் செய்து மகிழ்ந் துறைதலால் தேவர்கள் என்று பெயர் பெறும் வா னுலகத்தாரும், வந்து அடி பரவ- அவ் வளங்களைப் பொரு ளாக் கருதாமல் நெருங்கி வந்து தம் திரு வடிகளைத் துதித்தலால், அவர்க்கு– அவர்க ளுக்கு, மதியினில் ஒளி ஆக்கி–புத்திகளிலே ஞாந ஒளியை உண்டாக்கி, பெண் அணங்கு உண்ணாமுலையுடன்–விரும்

பத்தக்க தெய்வம் பெண் வடிவம் ஆன உண்ணு முலையை உடைய அருட் சத்தியுடன், பெரிது உளம் மகிழ்ந்து—(ஜீவர்களின் பிறப் பறுத்தற்கே படைப்பு முதலிய ஐந் தொழிலைச் செய்கின்ரேம் அச்செயல் இங்குப் பலன் உடைய தாகின்ற தென்றலால்) மிக உள்ள மகிழ்ந்து. வீற்றிருக்கும்—(இணை யின்றி) எழுந்தருளி யிருக்கின்ற, அண்ணல்—பெருமையிற் சிறந்தவ ராகிய, எம் அண்ணு மலையவர்—எங்கள் திருவண்ணுமலை நாதராகிய சிவ பெருமா னுடைய, அடியை—திரு வடிகளை, அன்புடன் வணங்கி வாழ்த்திடு வாம்—அன்போடு வணக்கஞ் செய்து துதிப்போ மாக. எ—று.

ஞாயிறு திங்கள் நெருப்பு நாள்கள் கோள்கள் முதலிய ஒளிப் பொருள்க ளெல்லாவற்றினும், மிக்க ஒளி யுடன் தோன்றி நிற்கின்றமையாலும், அவற்றையும், விளக்குகின்றமையா லும், "எண் ணரும் சோதி" என்றனர். ஞாயிறு முதலிப வெளி ஒளிகளால், போக்க முடியாத அஞ்ஞாந வுள் ளிருளைச் சிறிது மில்லா தொழிக்கு மொளி யாதலால், "எண் ணரும் சோதி" என்ருர் எனினும் ஆம்.

மாலும், பிரமனும், அடி முடி யறியாது, செருக் கடங்கிப் பணிந் துய்தி பெற்றமை யறிந்து, வந்து அடி பரவ என்பார், "வந்து அடி பரவ" என்றனர்.

தேவரும், பூ வுலகில் வந்து பரவினு லொழிய, உய்தி பெற லரிது என்பதைக் குறிக்கவும், "வந்து" என்றனர் என்க.

"அருண் மலை" என்பதே, அண்ணுமலை என ஆயிற்று என்க இனி, "அண்ணு" என்பதை, ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சச் சொல் எனக் கொண்டு, மாலும், பிரமனும், நெருங்கி அடி முடிகளை யுணர முடியாத எனப் பொருள் கூறலும் ஒன்று.



பூசை முறைகளும், வணக்க முறையும், புகழு முறையு, மாகிய வழிபாட்டு முறைகள், ஒன்றும் குறைவில் லாமற் செய்யினும், அன்பில்லா திருப்பின், "எண்ணரு மன்புளத் தில்லை யேயெனில், பண்ணிய பூசனை பயன்ற ராதரோ" (பிரபு லிங்க லீலை) என்றபடி, பயன்படாதன வாக முடிதலால், "அன்புடன் வணங்கி வாழ்த்திடு வாம்" என்றனர். 1

நண்ணலில் பகைவர் தாமுமே வந்து
நலம்பல விளங்குகார்த் திகையில்,
பெண்மையோர் பாகம் உடையனும் தன்னைப்
பெட்புடன் வழிபடுந் தன்மை,
விண்ணவர் கண்டு வியந்துவந் தடைய
விளங்கிடுந் திருவண்ணு மலையில்,
அண்ணல்எம் அண்ணு மலையவர் அடியை
அன்புடன் வணங்கிவாழ்த் திடுவாம். 2

(இ—ள்) நண்ணல் இல்—(மந முதலிய கரணங்க ளால்) நெருங்கி வழிபடுந் தன்மை யில்லாத, பகைவர் தாமும்—சிவ வெறுப் புடையவர்களும் கூட, வந்து—(தரிசித்தால் உள்ளங் கையி னெல்லிக் கனி போலக் கண்கூ டாகப் பயன் கிட்டும் என அறிதலால்) விருப்புடன் வந்து, நலம் பல விளங்கு கார்த்திகையில்—பல நன்மைகள் விளங்கும்படி யான கார்த்திகை மாதத் திரு விழாவிலே, பெண்மை ஓர் பாகம் உடையன் ஆம் தன்னை—(இடப் பாகம் பெறப் பவளக் குன்றில் தபசு செய்து இடப் பாகம் பெற்றமையால்) இடது பாதித் திரு மேனி யானது பெண் வடி வாக விளங்குதலை யுடையவ ருகிய தன்னை, பெட்புடன் வழிபடும் தன்மை—பகைமையை விட்டு மிக்க அன்புடன் வழிபாடு செய்கின்ற தன்மையை, விண்ணவர் கண்டு—புல மிக்கவ ராகிய தேவர்க ளறிந்து, வியந்து—என்னே இத் தலத்தின் பெருமை, இவ் விழாவின் பெருமை,

இவ் விறைவர் பெருமை, இருந்தபடி என்று, இரும்பூது கொண்டு, வந்து அடைய-(தாம் வழிபட்டுப் பயன் பெரு திதுவரை இருந்தோமேயென்று வருந்தி விரைந்து) வந்து நெருங்கி அன்புடன் வழிபட்டு வேண்டுவன பெற்றின்புற் றிலங்கும்படி, விளங்கிடும்-(அன்புடையவர் வேண்டுவன அளிப்பதற்கு செவ்வி யுடையவ ராகத் தாம் இருப்பதற் கேற்ப) விளங்குகின்ற, திரு அண்ணுமலையில்—திரு அண்ணு மலை என்னும் அறம் பெருகும் திருப் பேரூரில் எழுந்தருளி யிருக்கின்ற, அண்ணல்-பெருமையிற் சிறந்தவ ராகிய, எம் அண்ணுமலையவர்-எங்கள் திரு அண்ணுமலை நாத ராகிய சிவ பெருமா னுடைய, அடியை-திரு அடிகளை, அன்புடன் வணங்கி வாழ்த்திடுவாம்-அன்போடு வணக்கம் செய்து துதிப்போ மாக. எ—று.

"ஆணு கிப் பெண்ணுய் அலியாய்ப் பிறங்கொளி சேர்."(திருவாசகம்) என்றமையால், பெண் ணுக விளங்கு வதும், அவ் விறைப் பொருளே யாகும் என்று கண்ட மையால், "பெண்" என்னுது, "பெண்மை" என்றனர். கார்த்திகைத் திரு விழாவில, சிவ பெருமானைப் பிற மதத் தினரும், பயன் பெற வழிபடுதல் கண்டமையால், "நண்ணலில் பகைவர்" எனக் கூறத் தொடங்கினர். முன்னர் அண்ணு மலை என்று வந்தமையால், பின்னர், "அண்ணுமலையவர்" என வாளா பெயராக நின்ற தென்க. 2

தண்மையார் மதியைச் சார்ந்துள தவத்தர்
சருவதா வந்துவந் தேகும்,
திண்மையார் பெரிய அருணையில் உறையும்
பெரியதந் திருவடி அடைய,
உண்மையார் ஞானம் தனைவிளக் கமதா
வுலகத்தார் உணரவே யுரைக்கும்,
அண்ணல்எம் அண்ணு மலையவர் அடியை
அன்புடன் வணங்கிவாழ்த் திடுவாம். 3



(இ—ள்) தண்மை ஆர்-செந் தண்மை என்னுந் தண்ணளியை உடைய, மதியினை—புத்தியை (திரு வுள்ளத்தை), சார்ந்துள தவத்தர்-அடைந்த தபசிகள், வந்து வந்து ஏகும்-அடைந்து தம்மை தெரிசித்து வேண்டு வன பெற்று மகிழ்ந்து செல்லும்படியானதும், உறையும் பெரியவர் தம்-தன்பால் வசிக்கின்ற பெரும் பொருளைத் தா மாகக் கண்டுயர்ந்த மெய்ஞானிகளின், திருவடி அடைய-திருவடிகளை அடைந்து வழிபடவும், உலகத்தார் உணரும் ஆறு-(அடைந்து வழிபடும் உலகத்தவர்கள்) அறிந் தின்ப வுறுதியை அடையும்படி, உண்மை ஆர் ஞானந்தனை-மெய்ஞ் ஞான நூல்களை, விளக்கமதா உரைக் கும்-மெய்ஞ் ஞானந் தோன்றும் வகையில் விளக்க முற அவர்கள் உபதேசிக்கும்படியானது மாகிய, திண்மை ஆர் பெரிய அருணையில்-திணிந்த பெரிய அருணுசலத் திலே எழுந்தருளி யிருக்கின்ற, அண்ணல்-அண்ண லாகிய, எம் அண்ணுமலையவர்-எங்கள் அண்ணு மலை நாத ருடைய, அடியை அன்புடன் வணங்கி வாழ்த்திடுவாம்-திரு வடிகளை அன்போடு வணக்கம் செய்து துதிப்போ மாக. எ—று.

"உண்மையார் ஞானம்" என்பது, "இடம்படமெய் ஞானம்" (நாலடியார்) என்புழிப் போல, ஞான நூல்களை உணர்த்திற்று ஆகு பெயராக என்க. "உரைக்கும்" என் பதனுல், "ஞான நூல்கள்' என்பது புலப்படல் காண்க. "அங்குக் கற்பினும்" என்பதனுலும், "ஞானம்" என்பது, 'ஞான நூல்களை' என்பது புலப்படுகின்றது. 'வந்து வந்து' என்பவற்றை. 'வந்து, உவந்து" எனப் பிரித்துப் பொருள் காண்க. 3

கண்ணினேர் நெல்லிக் கனியதைப் போலக்
கடவுளின் சொருபத்தை விளக்க.
மண்ணவர் பெருமற் பெற்றிட விரைவில்
மறுவுடல் தனைப்பெரு திருக்கத்,
தண்ணலர் சோதி சொருபமாய் விளங்கும்
தத்துவம் அசிமுதற் பொருளாம்,
அண்ணல்எம் அண்ணு மலேயவர் அடியை
அன்புடன் வணங்கிவாழ்த் திடுவாம். 4

(இ—ள்.) கண்ணின் நேர்-கண்ணுலே காணத் தக்க, நெல்லி கனியதை போல-உள்ளங் கையி லமைந்த நெல்லிக் கனியைப் போல, தத் த்வம் அசி முதல் பொருள் ஆம் கடவுளின் சொருபத்தை-தத்வம் அசி மகா வாக்கியத்தின் மெய்ப் பொரு ளாகிய மாற்ற மநங்கழிய நின்ற பிரத்தியக் கபிந்ந பரமாந்மாவின் ஐக்கிய சச்சிதாநந்த சொருபத்தை, மண்ணவர்-மண் ணுலகத்திலே யுள்ள உயர் திணை ஆகிய மக்கள், விரைவினில்-("இக்கணத் திருந்த தினிவரும் கணத்தூ டிருக்குமோ மரிக்குமோ" என ஐயுறும்படி, பெற்ற வுடல் இருத்தலால், உடல் மடிவதற்கு முன்னரே) விரைந்து, பெருமல் பெற்றிட-அடைந்ததன் அடை வாக அபரோக்ஷ மாக அடையும்படியும், மறு உடல் தனை பெரு திருக்க-(சச்சிதா நாந்த மெய் பரம்பொருளை பிரத்தியக் காகிய தாணுக அபரோக்ஷமாக அறிந்து அடைந்த மையினுலே, பிறப்பிற்குக் காரண மாகிய ஆவரண ரூப அஞ்ஞாநமும், அஞ்ஞாநத்தின் காரிய மான சூக்கும சரீரங் களும், அழிதலைப் பெறுதலால்) வேறு பிறப்பினை பெரு திருக்கும்படியும், விளக்க-விளக்குதலின் பொருட்டு. தண் ணலர் சோதி சொருபம் ஆய் விளங்கும்-குளிர்ச்சி விரிந்த ஒளி வடி வாக விளங்குகின்ற, அண்ணல்-அண்ணல் ஆகிய, எம் அண்ணு மலேயவர்-எங்கள் திரு அண்ணு மலே நாத ருடைய, அடியை அன்புடன் வணங்கி வாழ்த்திடு



வாம்-திரு அடிகளை அன்போடு வணக்கம் செய்து துதிப்போ மாக. எ—று.

பூ வுலகத்திலே மக்க ளாகப் பிறந்தவர்களே, புண்ணி யங்களைச் செய்து, நரகங்களை யடையாமல், துறக்கத்தை யடையவும், வீ ட்டைதற்குக் கருவி யாகிய மெய்ஞ் ஞாநத் தையும், அம் மெய்ஞ் ஞாநத்தைப் பெறுதற்கு வாயில் க ளாகிய நித்த வநித்தப் பொருகளின் வேறுபாட் டுணர் வும், அவ் வுணர்விஞல் அநித்திய மாகிய இம்மை மறுமை யின்பங்களின் உவர்ப்பும், அவ் வுவர்ப்பால் நித்த மாகிய வீடு பே றடைய எழும் வேட்கையும், அவ் வுவர்ப்பும், வேட்கையும். உறுதி பெறுவதற்கும். இன்னும், அம் மெய்ஞ் ஞாநத்திற்கு வாயி லாக அமைகின்ற கேட்டல் தெளித லாகியவற்றிற் குறு துணை யாக நிற்றற்கு முரிய, உட் பொறி வெளிப் பொறிகளை தகைய வல்ல சமம் முதலிய பண் பாறன் உறுதிச் சேர்க்கையும் பெறுதற் கும், மெய்ஞ் ஞாந நூல்களைக் கேட்டல் முதலியன செய் தற்கும், அவற்ருல் மெய் உணர்வு பிறக்க வீடு பே றடை தற்கும், உரியவர்க ளாக இருத்தலால், "மண்ணவர்" என் றனர். இம் மூன் றினை பற்றியே, என்று முள தென் றமிழ்ச் சான்றோர்கள், மக்களை, "உயர் திணை" அதாவது, உயர்ந்த தன்மையை உடையவர் என ஆள லாயினர் என்க. இவ் வாறு, ஆண்டனர் என்பதை, "உயர்திணை என்மஞர் மக்கட் சுட்டே." என ஆசிரியர் தொல் காப்பியர் கூறுதலால் அறிய வாம். தேவர்களும், புலம் மிக்கவர் ஆயினும் பெரிதும் இன்பந் துய்த்தற் கன்றி, அறம் ஈட்டவும், வீ டடையவும், முயல்வார். முயலினும், மண் ணுலகில் வந்தே, ஈட்டவும், அடையவும் முயல்வார் என்பது, புராண முதலியவற்ரு லறியலாம். அவர்ளுகம், மண்ணு லகிலே வந்து மண் ணுலகத்தார் போல, அறம் வீடுகளை யீட்டவும், அடையவும், முயறலால், அவரும் அடங்க, "மண்ணவர்" என்ருர் எனினும் ஆம். 4

எண்ணரும் அண்ணா மலையவர் எனவே
இருக்குமீ சானதே சிகரும்,
தண்ணிய உளத்தைத் தகைந்துநற் சமாதி
தனிலிருந் திடுகவென் றருள,
உண்ணெகிழ்ந் தெனக்கும் ஒருவரம் அளித்தே
உதவுவாய் எனத்திநம் வேண்டி,
அண்ணல்எம் அண்ணா மலையவர் அடியை
அன்புடன் வணங்கிவாழ்த் திடுவாம். 5

(இ—ள்.) எண் அரும்—"இப்படியன் இந் நிறத்தன் இவ் வண்ணத்து இவன்" என்று அளவிட்டுக் கூறுதற்கு அரியவரான, அண்ணா மலையவர் எனவே—திரு அண்ணா மலை நாதரே இப் பெரியார் என்று எவரும் கூறும்படி, இருக்கும்—வியக்கு மாறு புலிகளின் நடுவே சமாதி நிலையுற் றெழுந்தருளி யிருக்கும்படி யான, ஈசாந தேசிகரும்—ஈசாந ஞாந தேசிக மூர்த்திகளும், நல் சமாதியில் இருந்திடுக என்று, தண்ணிய உளத்தை தகைந்து—தாழ்ந்த விஷயங் களைப் பற்றி ஓடுகின்ற என்னுடைய உள்ளத்தை தடுத்து, அருள (முன் சென்று பலகால் வலம் வந்து பணிந்து நிற்கும் என்னை நெருங்கித் திரு வுள்ளத் தெழும் தண் ணளியினாலே என்னைப் போல நீயும்) நிட்டாபர னாக இருப்பா யாக என்று திரு வாய் மலர்ந் துரைத்து உரைத்த படியே நிட்டை யுடையவ னாக இருக்கும்படி அருள் புரிவதற் குரிய, ஒரு வரம்—ஒரு வரத்தை, எனக்கும்—(மிகத் தாழ்ந்த) அடியேற்கும், அளித்தே உதவ—கொடுத் துதவும் படி, அண்ணல் எம் அண்ணா மலையவர் அடியை அன்பு டன் வணங்கி வாழ்த்திடு வாம்—பெருமையிற் சிறந்தவ ராகிய எங்கள் திரு அண்ணாமலை நாத ராகிய சிவ பெருமா னுடைய திரு வடிகளை அன்போடு வணக்கஞ் செய்து துதிப்போ மாக. எ—று.



"ஈசாந ஞாந தேசிகர்" என்று இப் பெரியாருக்குப் பெயர் வந்தது. ஈசாந பாகத்தில், திரு அண்ணா மலையில் இருந்தமையானும், மெய்ஞ் ஞாநநிட்ட ராக இருந்தமையா லும் ஆகும். இப் பெயரி லிருந்து, திரு வண்ணா மலையில், ஒவ்வொரு திசையிலும், இத் தகைய பெரியார்கள் இருந்த னர் என்பதும், இன்றும், இருக்கின்றனர் என்பதும், புலப் படுகின்றன. பெரியவர்கள் என்றும் இருத்தலாலே தான், "தவக்கல நடத்த வளர்ந்தெழுஞ் சோண சைல (சிவப்பிர காச சுவாமிகள்) எனச் சான்றோர் கூற லாயினர். ஈசாந ஞாந தேசிகர். சிதம்பரத்தி லிருந்த ஸ்ரீ மௌந சுவாமிகளின் மாணவர்களுள் ஒருவர் ஆவார். ஸ்ரீ மௌந சுவாமிகளைப் பாவால் புகழ்ந்தி ருத்தலால் என்பர் சிலர். சிலர் இவரும், மௌந ஞாந தேசிகரும். ஒரு குரு சீடர்கள் ஆவார்கள். மௌந ஞாந தேசிகரைத் தம்மிலும் மேம்பட்டவ ராகக் கருதினமையால் அவரைப் பாவால் புகழ்ந்தனர் என்பர்.

இப் பா வாசிரியர், அண்மையி லன்றிச் சேய்மையி லிருப்பினும், ஈசாந ஞாந தேசிகர் பால் பே ரன்பு கொண் டவ ரென்பதும், திரு அண்ணா மலை ஈசாந ஞாந தேசிகர் மடத்தில், சில காலம் தங்கி வசித்தனர் என்பதும், பழ வடியவர்களோடு கூடிய கூட்டுறவும். தாம் பழ வடியவ ராக இருத்தலும், பே ரன்பிற்குக் காரணங்க ளாகும். என் பதும், புலப்பட, இப் பா நிகழ்கின்ற தென்னற் கைய மில்லை.

இறைவன் குரு வாகத் தோன்றியே அருள் புரிதலின், அவ் விறைவன் தாம் உயர்ந்தவ ராகக் கருதுகின்ற ஈசாந ஞாந தேசிக ராக எழுந்தருளிவர, அவர் மூல மாக நிட்டை பெற வேண்டு மென விரும்புகின்றனர், என்பது புலப் படக் கூறுகின்றனர், அத் தேசிகர்பால் கொண்டபேர் அன்பினால் எனச் சான்றோர்கள், தம்மில் மேம்பட்டவர் களைத் தங் குருபர ராக எண்ணுதல் வேண்டும் என்பதை யும், இதனாற் குறிப்பித்தனர் என்னல் ஆம் இன்னும்

இதனால், அடியவர்களை, அவர்கள் எவராயினும், அவரை மெய் யடியவ ராகக் கொண் டவரோ டிணங்கி அவர் பால் அன்பு செய்தல் பெரும் புண்ணியஞ் செய்தவர்க்கே யியலும் என்பதையும், ஞாபித்தனர் எனவும் கூற லாம்.

இனி இப் பாவிற் குறையிடுங்கால், சென்னையி லமர்ந் திலங்கும், "கேட்டார் பிணிக்குந் தகையவாய்க், கேளாரும் வேட்ப மொழிவதாஞ் சொல்." என்றபடி, சொற் பொழி வாற்றும் ஆற்றல் மிகப் படைத்த, நியாயசந்திர வேதாந்த பாஸ்கரர் எனச் சிறப்புப் பெயர் பூண்ட, ஸ்ரீ கோவி லூர் வீர சுப்பய்ய ஞான தேசிக ரென்னும் இயற் பெய ருடைய நுண்மாண் நுழை புலம் கொண்டவ ராகிய பெரியார், திருப் பாதிரிப் புலியூரில், கடியா பட்டி, தி. சொ. குடும் பத்தார், தாம் கட்டி யமைத்த பெருங் கோயிற் பெருங் கும்பாபிடேகஞ் செய்த நாளில், அங்குச் சான்றோர் அவை யில் ஆற்றிய சொற் பொழிவால். ஈசான ஞான தேசிகர் மெய் வரலாற்றை விளக்கி, அத் தேசிகர்பால் யாவரையும் அன்பு கொள்ளச் செய்தமை நினைவிற்கு வருகின்றது. இவ் வாறு நினைவு கொள்ளு மாறு, அப் பெரியாருடன் ஒரு சாலை மாணவ ராக விளங்கிய இப் பா வாசிரியர் செய்தமைக்கு நன்றி செலுத்துங் கடப்பாடு டையவ னாகின்றனன். 5

இந்த உபந்யாசம் 1912-௵ நடந்திருக்க லாம்.

வண்மைசான் றெவையும் வழங்குவல் எனவே
வண்கொடி யேற்றவள் ளாளன்,
அண்மியெத் தேவர் அடியவர் இடத்தும்
அன்பராக் கணங்களை ஏவித்,
திண்ணமாய் ஓர்பெண் அவாவியே அரசன்
அருகினில் அறிவுறச் சேர்ந்த,
அண்ணல்எம் அண்ணா மலையவர் அடியை
அன்புடன் வணங்கிவாழ்த் திடுவாம். 6



(இ—ள்.) வள்ளாளன்-வள்ளாள (வல்லாள) மகா ராஜன், வண்மை சான்று-(பிறர்க்கு வேண்டுவனவற் றைக்) கொடுக்கும் தன்மை நிறையப் பெற்று, எவையும்-கேட்கும் பொருள்கள் எவை யாக இருந்தாலும் தன்பால் உள்ளவை எல்லாவற்றையும், வழங்குதல் எனவே-(இல்லை என்னாமல்) கொடுப்பேன் என்று, வண் கொடி ஏற்ற-கொடைக் கொடியை ஏற்றி யிருத்தலால், அறிவுற-(அம் மாகா ராஜனது கொடைத் தன்மையைச்) சோதிப் பதற் காக, எத் தேவர் அடியாரிடத்தும்-திரு அண்ணா மலை நகரி லுள்ள எல்லா வார நாரியர்க ளிடத்திலும் (தவறாமல் வீட்டுக் கொருவ ராகப் போய மரும்படி). அன்பரா—அடியவர் ஆக (ஆக்கி), கணங்களை ஏவி—தம்(சிவ) கணங்களை அனுப்பிவிட்டு,ஓர் பெண்-தான் ஒரு பெண்ணை, திண்ணம் ஆய் அவாவி—ஒருதலை யாக அடைய வேண்டும் என்று விரும்பி விருப்பின ஒரு அடியவர் போல நடித்து), அரசன் அருகில் அண்மி—அவ் அரசன் பக்கத்தில் சமீபித்து, சேர்ந்த—அடைந்து (ஒரு பெண்ணை வேண்ட அரசன் அவர் நுகர்ச்சிக்கு வேண்டியபடி கொடுக்க முடி யாமல் மனம் வருந்தும் சமயத்தில், மனைவி குறிப் பறிந்து அடியானை மனம் ஒத் தனுப்பின் யான் சென்று அவர் குறையை முடித்து வருவல் என்று சொல்ல, ஒப்பி அனுப் பப்பட்ட உத்தமியாள், விரும்பிய அடியவ ராகிய அரனைத் தழுவக் கிட்டும் பொழுது குழந்தை யாகி) அருள் புரிந்த, அண்ணல் எம் அண்ணா மலையவர் அடியை அன்புடன் வணங்கி வாழ்த்திடு வாம்—பெருமையில் சிறந்தவர் ஆகிய எங்கள் திரு அண்ணா மலை நாதராகிய சிவ பெருமானுடைய திரு வடிகளை அன்போடு வணக்கம் செய்து துதிப்போ மாக. எ—று.

"பிறர்க்கு" என்பது, அடியவர்க்கு எனக் கொள்க. "எத் தேவர் அடியாரிடத்தும்" என்புழி எகரம் எஞ்சா மைப் பொருளில் வந்தது. கொடைக் கொடி—கொடை

யைக் குறிக்கும் கொடி இவ் வரல் ஆறு, அருணுசல புராணத்தில் வெளிப்படும் 6

கண்கள்மூன் றுடையான் களிறுரி யுடையான்
கவர்தரும் ஊடலேத் தவிர்ப்பான்,
பண்பமர் நந்தி பகவனே அநுப்பிப்
பகர்ந்திடப் பார்வதி தானும்,
பெண்களின் இயல்பு பெறுகையால் வாளாப்
பிறங்குறப் பெருகிடக் கலங்கும்,
அண்ணல் எம் அண்ணு மலேயவர் அடியை
அன்புடன் வணங்கிவாழ்த் திடுவாம். 7

(இ—ள்.) கண்கள் மூன்று உடையான்—ஞாயிறு திங்கள் அநல்கள் என்று கூறப்படும் திருவிழிகள் மூன்றினே உடையவரும், களிறு உரி உடையான்—தாருகாவநத் திருடிகள் விட்ட ஆண் யானேயை உரித்த தோலே போர்த்தும் போர்வை யாக உடைய வரும். கவல் தரும் ஊடலே தவிர்ப்பான்—மந வருத்தத்தை தருகின்ற பிணக்கத்தை நீக்கும் பொருட்டு, பண்பு அமர் நந்தி பகவனே—ஊடல் தவிருதற் குரிய சாந்த வசநங்களேப் பேச வல்ல நந்தி எம் பெருமானே, அநுப்பி பகர்ந்திட—ஏவி ஊடல் நீங்குமாறு பல படி யாகச் சொல்லும்படி செய்தும், பெண்களின் இயல்பு பெறுகையால்—பெண்களின் தன்மையை யடைந் தமையை யடைந்தமையினுல், வாளா—ஒன்றும் பதில் உரையாமல், பிறங்கிட—(பிணக்கத்துடனேயே) விளங்குதலால், பெருகிட கலங்கும்—(அப் பிணக்கத்தை நீக்குதற் குரிய வாயில்களே யாராய்தலால்) மிக வருந்துகின்ற, அண்ணல்—தலேவரும் ஆகிய, எம் அண்ணு மலே யவர் அடியை அன்புடன் வணங்கி வாழ்த்திடு வாம்—எங்கள் திரு அண்ணு மலே நாத ராகிய சிவ பெருமா னுடைய திருவடிகளே அன்போடு வணக்கம் செய்து துதிப்போம் ஆக. எ—று.



முன் பாவில் குறிப்பிட்ட வல்லாள அரசன் வரல் ஆறும், இப் பாவில் குறிப்பிட்ட நந்தியெம் பெருமான் ஊடல் தீர்த்த வரல் ஆறும், அருணுசலப் புராணத்தில் வெளிப்படும். 7

விண்ணிலேய் மதியும் சூரியன் ருனும்
விளங்குரு வகையிற்சோ தியராய்த்,
தண்ணறுந் துளபமால் பிரமனும் சென்று
தாடலே உணர்ந்திடார் அன்பால்,
மண்ணவர் வந்து கடலொலி போல
வாழ்த்திட அருளுருக் கொண்ட,
அண்ணல் எம் அண்ணு மலேயவர் அடியை
அன்புடன் வணங்கிவாழ்த் திடுவாம். 8

(இ—ள்.) விண்ணில் ஏய்—ஆகாயத்திலே சுற்றி வருகின்ற, மதியும்—சந்திரனும், சூரியன் தானும்—ஞாயிறும், விளங்குரு வகையில்—ஒளி மழுங்கும்படி, சோதியர் ஆய்—விளங்குகின்ற ஒளி வடிவினர் ஆக (நிற்க), தண் நறும் துளபம் மால் பிரமனும்—குளிர்ந்த மணக்கின்ற துளப மாலேயை அணிந்த திருமாலும் பிரமனும், சென்று—நான் பெரியன் நான் பெரியன் என்று செருக்கி மேலும் கீழும் சென்று, தாள் தலே உணர்ந்திடா—தாளேயும் (அடியையும்) தலேயையும் (முடியையும்) பார்த் தறிய இயலாத, அன்பால்—(செருக் கடங்கி) அன் பாகிய துணேயைப் பெற்றமையால், மண்ணவர்—மண் ணுலகிலே அன்பர்கள், வந்து—(நெருங்கி) வந்து (அடி முடிகளேக் கண்டு மகிழ்ந்து), கடல் ஒலி போல வாழ்த்திட—கடலின் ஒலியைப் போல பேர் ஒலி எழும்படி வாழ்த்தி நிற்க, அருள் உரு கொண்ட—அருளாலே காணத் தக்க வடிவம் கொண்டு நிற்கின்ற, அண்ணல்—பெருமையிற் சிறந்தவ ராகிய, எம் அண்ணு மலேயவர் அடிகளே அன்புடன்

வணங்கி வாழ்த்திடு வாம்—எங்கள் திரு அண்ணு மலை நாதர் ஆகிய சிவ பெருமா னுடைய திரு வடிகளை அன்போடு வணக்கம் செய்து துதிப்போம் ஆக. எ—று. தான் அசை.

"உணர்ந்திடார்" "அருளுருக் கொண்ட" என்னும் பெயர் எச்சங்க ளிரண்டும், "அண்ணல்" என்பதைக் கொண்டு முடிந்தன. 8

புண்ணுறும் பவத்தைப் பலதாம் பெற்றும்
புநிதனு காததைக் கண்டு.
கண்ணுறும் நெற்றிக் கடவுளைத் தொழுது
கைலையை யடைகுவான் விரும்பிப்,
பண்ணுறு பாக்கள் பாடவும் அறியாப்
பதடியைக் கடைக்கண் வைத் தருளும்,
அண்ணல் எம் அண்ணு மலையவர் அடியை
அன்புடன் வணங்கிவாழ்த் திடுவாம். 9

(இ—ள்.) புண் உறும் பவத்தை—புண் புலால் யாக்கை கொண்டு பிறக்கும் மநிதப் பிறப்பை, பல தரம் பெற்றும்—பல தடவை யாக எடுத்தும், புநிதன் ஆகாததை கண்டு—வீடு பெறுதற் குரிய முத் தோடம் நீங்கித் தூயனு காமல் யான் இருத்தலை அறிந்து, கண் உறும் நெற்றிக் கடவுளை தொழுது—விழி யமைந்த நெற்றியையுடைய (நெற்றிக் கண்ணை உடைய) மாற்ற மநங் கழிய நின்ற இறைவ னுகிய தன்னை யான் எனக்கு ஆண்டவ னுகவும், அஸ்மியாகவும் என்னின் வே ருகாத மெய்ப் பொரு ளாகவும் கண்டு வணங்குதல் முதலிய வழிபாடு செய்தலும் அகம் பிரஹ்மாஸ்மி, பிரஹ்மைவாஹகம் எனப் பாவித் தலும், ஆகியவற்றைச் செய்து, கைலையை அடைகுவான் விரும்பி-கைலை முதலிய பத முத்திகளையும், அநர்த்த நிவிர்த்தி ஆநந்தப் பிராப்தி வடிவ மெய் வீடு பெறுதலையும், அருளுவதற்குத் திரு வுள்ளத்தில் இச்சை யுற்று, பண்



உறு பாக்கள் பாடவும் அறியாப் பதடியை-சிவ ஞாநச் செல்வர்கள் பாடிய பண் அமைந்த தேவார முதலிய அருட் பாக்களை வாயினுலே பாடுதற்கும் அறியாத மூட னுகிய அடியேனை, கடைக் கண் வைத்து அருளும்—திருக் கடைக் கண்ணுல் நோக்கி அருள் புரிகின்ற, அண்ணல்—பெருமையில் சிறந்த, எம் அண்ணு மலையவர் அடியை அன்புடன் வணங்கி வாழ்த்திடு வாம்—எங்கள் திரு அண்ணு மலை நாதர் ஆகிய சிவ பெருமா னுடைய திரு வடிகளை அன்போடு வணக்கம் செய்து துதிப்போம் ஆக. எ—று.

விலங்கின முதலியவற்றின் உடம்புகளிற் சில உறுப்புக்கள், நாற்றம் இன்றி, எல்லாரும் கொள்ளத் தக்கன வாக இருத்தலாலும், மரம் முதலிய உடம்புகள், தேவர் கோவி லாகவும், மக்கள் இல்ல மாகவும், அமைதலோடு அவற் றுறுப்புக்களில், சில இறைவர்க்கும், பிறர்க்கும், அணியும் அணிக ளாகவும், பூசும் சாந்தளிக்கவும், நறும் புகைக் குரியனவு மாக அமைதலாலும், என்றும் எப் பொழுதும் புண் வடி வாய் நாற்றம் கெழும நிலவும் உடம்பு, மக்கள் உடம் பாதலாலும், விலங்கு முதலிய வற்றை நீக்கி மக்கட் பிறப்பை யுணர்த்துவதற்கு, "புண்ணுறும் பவம்" என்றனர். அப் பிறப்புடைய உயிர்களே, "புநிதர் ஆதற் கியலும்" ஆதலின், என்க. 9

அண்முதல் இல்லா தவரையும் அருளால்
அழைத்துநல் தாள்தனை அருளும்,
தண்மதி கோடி கோடியே அனைய
தட்பமார் திருவுளத் தவனும்,
புண்மதி போன போக்கிலே நிலவும்
புலையனேன் எனையுமே ஆள,
அண்ணல் எம் அண்ணு மலையவர் அடியை
அன்புடன் வணங்கிவாழ்த் திடுவாம். 10

(இ—ள்.) அண் முதல் இல்லதாவரையும்-நெருங்கி வந்து வழிபாடு செய்தற் குரிய அன் பாகிய சாதனம் இல்லாத வரையும், அருளால்-தனக்கு இயல் பாக அமைந்த இன்னார் இனியவர் என்று கருத விடாத திரு வுள்ளத் தருளினாலே, அழைத்து-தன்பால் வந்து வழிபடு மாறு செய்து, நல் தாள் தனை அருளும்-அவ் வழிபாட்டின் மூல மாகத் தன் னடி நிழலிலே இறுமாந் திருக்கச் செய் கின்ற, தண் மதி கோடி கோடியே அனைய-குளிர்ந்த திங்கள் கோடி கோடிகளை ஒத்த, தட்பம் ஆர் திரு உளத்தவன் ஆம்-குளிர்ந்த திரு வுள்ளம் உடையவன் ஆகிய, அண்ணல்-பெருமையிற் சிறந்த, எம் அண்ணா மலையவர்-எங்கள் திரு அண்ணா மலை நாத ருடைய, அடியை-திரு வடிகளை, புண் மதி போன போக்கிலே நிலவும்—மனம் போன போக்கிலே செல்லுகின்ற, புலையனேன் எனையுமே ஆள-இழிந்தவ னாகிய அடியேனையும் ஆட் கொண் டருளுவதற் காக, அன்புடன் வணங்கி வாழ்த்திடுவாம்—அன்போடு வணக்கம் செய்து துதிப்போம் ஆக. எ—று.

வழிபடுவார் பிறவிப் பிணி அறுத்தலால், "நற் றாள்" என்றனர். புண் மனதை. "புண் மதி" என்றனர். ஒன்று பட்டு நிற்றலால், நுண் பூதங்களின் சத்துவ குணக் கூற்றினால் ஒன்றுபடுத்தி அமைக்கப்பட்டது உட் கரணம் ஆகும். எண்ணுதல் செய்கின்ற காற்றின் கூறாகிய மனமும், துணிதலைச் செய்கின்ற நெருப்பின் கூறாகிய புத்தியும், மாலையில் மலர்கள் போலச் சேர்ந்து, அந்தக் கரணத்தில் இருத்தலால், ஒன்றன் பெயரால் வேறொன் றைக் கூறினும், சொல்வோனது குறிப்பினால், அஃ ததனை விளக்க வல்ல தாகும் என்க. 10

திரு அண்ணா மலை, அண்ணா மலையார் ஸ்தோத்திரமும்,
நுந்தா ஒளி (நித்தியப் பிரகாச) உரையும்,
முற்றுப் பெற்றது.

---

உ

சிவமயம்

# தில்லை, சிவகாம சுந்தரி ஸ்தோத்திர ரச மஞ்சரி.

## நுந்தா ஒளி உரை.

---

கல்லினால் ஆய களிறுமெய்க் களிறாய்க்
கரும்பினைக் கறிக்கவும் மேருக்,
கல்லதே வில்லா வளையவும் செய்த
கணவன்பால் அருளினால் அம்மே,
கல்லதே ஆகும் என்மனந் தனையும்
கனிவிக்க உரைத்திநீ என்று,
தில்லைவாழ் தாய்சிவ காமசுந் தரியின்
திரு அடி தொழுதிடர் ஒழிப்பாம். 1

(இ—ள்.) கல்லினால் ஆய-கருங் கல்லினால் சிற்பியி னால் அமைக்கப் பெற்று விளங்கிய, களிறு மெய் களிறு ஆய்-பொய்க் களிறு மெய்க் களிறாக ஆகி, கரும்பினை கறிக்கவும்-நீட்டிய கரும்பினைக் கடித் துட் கொள்ளவும், மேருக் கல்லதே-மேரு மலையே, வில்லா-மூங்கில் வில்லுப் போல, வளையவும்-வளைந்து போர்க் கருவி யாகப் பொருந்தவும், செய்த-எளி தாக ஆக்கிய, அம்மே நீ-தாயே நீ, கணவன் பால்-ஐந் தொழிலையும் வருந்தாமல் நினைவினள வாகச் செய்து, அவற்றை விளக்கத் திருக் கூத்துக் கோலத்துடன் நின் நாயக ராகிய திருக் கூத்தப் பெருமானிடத்திலே, கல்லதே ஆகும் என் மனம் தனையும்-கல் லாகவே திணி வுடைய தாக விளங்கும் அடியே னுடைய வன் மனதையும், கனிவிக்க-(அன்பினால்) கனிந்து, கரும்பும் வில்லும் ஆக ஆய், உண்ணவும் போர் செய்யவும் உதவியது போல, நின்னா டிறைவ னாகிய தன்னைச் சிந்தித்தற் குதவியாகு மாறு செய்ய, அருளினால் உணர்த்தி என்று-இயல் பாக அருள் வடி வாக அமைந் திருத்தலால் கூறுவா யாக

என்று, தில்லை வாழ்—தில்லை நகரிலே எழுந் தருளி யிருக்கின்ற. தாய் சிவ காம சுந்தரியின்—உலக மாதா வாகிய சிவ காம சுந்தரி அம்பிகையின், திரு அடி தொழுது—திரு அடிகளை வழிபட்டு, இடர்—(பிறவித்) துன்பங்களை, ஒழிப்பாம்—(வாராமல் தத்துவ ஞா ந வாயி லாக) நீக்குவோமாக. எ—று.

கல் ஆனைக்குக் கரும் பருந்தக் கொடுத்த வரல் ஆறு, திரு விளையாடற் புராணத்தால் வெளிப்படும். மேருவை வில் லாக அமைத்தது, பல புராணங்களால் வெளி யாகும். கல்—மலை,

அருளே, அபிந்நா சக்தி யாகிய (சிவ சக்தி யாகிய) சிவ காம சுந்தரியாதலின், அவ் வருளின் மூல மாக இறைவன் அளிக்கும் தத்துவ ஞாநத்தால் பிறவித் துன்பங்களினின்று நீங்குவோ மென் றுரைத் தாகும் என்க. 1

பல்லினைக் காட்டிப் பலரிடம் புகுந்து
பரிதவி யாமலே அன்பால்,
சொல்லமை பாவால் தனைத்திநம் புகழ்ந்து
துரிசறும் உளத்தினுல நினைந்து,
கல்லையே புணையாக் கடலினைக் கடந்த
கவிஞர்போல் ஐந்தெழுத் துரைத்து,
தில்லைவாழ் தாய்சிவ காமசுந் தரியின்
திரு அடி தொழுதிடர் ஒழிப்பாம். 2

(இ—ள்.) பல்லினை காட்டி பலர் இடம் புகுந்து—இப் பொய் உடலை காப்பாற்றுவதற் காக பற்கள் வெளிப் படும்படி யாக வாயை திறந்து ஏ தாவது பொருள் கொடுப்பீர் என்று சொல்லி யாஜிக்கவும். பாக்களைப் பாடி யாஜிக்கவும், ஒருவரும் போதும் எனக் கொடுப்பார் இன்மை யால் நல்லோரும் தியோரு மாக வுள்ள பலரிடமும் அலை



யாமல் வலியப் போய், பரிதவியாமல்—நிச்ச நிரப்பின ராக வருந்தாமல் (வருந்துதல் ஒழிந்து), சொல் அமை பாவால்—புகழ் அமைந்த பாக்களினுலே, (வழு வின்றிய பாக்களினுலே), தனை திநம் புகழ்ந்து—வேண்டுவார் வேண்டுவன எல்லாவற்றையும் கொடுத் தளிக்க வல்ல அப்பனுக்கு வேருகாத அம்மை யாகிய (அபிந்ந அருட் சத்தி யாகிய) தன்னை யாங்கள் இடைவிடாது புகழ்ந்து, கல்லையே புணை ஆக் கடலினை கடந்த கவிஞர் போல்—திரு ஐந் தெழுத்தை, “நற்றுணை யாவது நமச்சி வாயவே” என்று ஜெபித்துப் பிறவிக் கடலைக் கடந்தது மன்றிக், கல்லைத் தெப்ப மாகக் கொண்டு கடலையுங் கடந் தேறிய திரு நாவுக் கரசு மூர்த்திகள் போல ஐந்து எழுத்து உரைத்து—“வணிகர் குல ஒஷதிகள் தளைய வந்த அமிழ்த சொருப ராகிய எங்கள் குல குருபரரா லுபதேசிக்கப் பெற்ற திரு வைந் தெழுத்துச் சித்த மலத்தைப் போக்கிச் சிவ மாக்குதலால் மகா வாக்கியத்திற்த அபிந்ந மாகு மாதலின் என்றும் ஜபித்து-துரி சறும் உளத்தினுல் நினைந்து-புகழ்ச்சிபா லும். ஜெபத்தா லும், குற்ற மற்று விளங்கு மநதினுலே தியாநித்து, தில்லை வாழ்—தில்லை நகரிலே எழுந் தருளியிருக்கின்ற. தாய் சிவ காம சுந்தரியின்—உலக மாதா வாகிய சிவ காம சுந்தரி அம்பிகையின், திரு அடி தொழுது—திரு அடிகளை வழிபட்டு. இடர்—(பிறவித்) துன்பங்களை, ஒழிப்பாம்—(வாராமல் தத்துவ ஞா ந வாயி லாக) நீக்குவோமாக எ—று. 2

புல்லையிங் குண்ணும் இடபமாப் பிறந்து
பொருந்திவாழ் இடமதாப் புரிந்து,
எல்லைவிட் டகலா துறையினும் நன்றும்
எழிற்புவி முநிவரற் கிறைவர்,
தெல்லைவிட் டகலாப் பிறவியை யொழிக்கத்
தூயநற் கூத்துகந் தாடும்,
தில்லைவாழ் தாய்சிவ காமசுந் தரியின்
திரு அடி தொழுதிடர் ஒழிப்பாம். 3

(இ—ள்.) இங்கு—இப் பூ வுலகத்தில், புல்லை உண்ணும்—மக்களாற் றாழ்ந்த தெனக் கருதப்படும் புல்லை உண வாகக் கொள்கின்ற, இடபம் ஆ பிறந்து—ஐ அறி வுடைய பசு வாகப் பிறந்து, பொருந்தி வாழ் இடமது ஆ புரிந்து—தங்கி வாழ்தற் குரிய இட மாக விரும்பி, எல்லை அகலாது உறையினும்—தன் எல்லையை விட்டு நீங்காது தங்கினும், நன்று ஆம்—தான் ஆக அநர்த்த நிவிர்த்தி ஆநந் தப் பிராப்தி வடிவ வீடு பே றுண்டாகக் கூடியதும் (அடையத் தக்கதும்), எழில் புவி முநிவரர்க்கு-இறை பணி செய்தலிலே உள்ள எழுச்சி உடைய வியாக்கிர பாத முநி சிரேஷ்டருக்கும் (பதஞ்சலி முநிவரர்க்கும்), தொல்லை விட்டு அகலா—துன்பம் விட்டு நீங்காத, பிறவியை ஒழிக்க—பிறவிப் பிணியை ஒழிப்பதற் காக, இறைவர்-தேவாதி தேவ னாகிய சிவ பெருமான், தூய நல் கூத்து உகந்து ஆடும்—தூய்மை யான நல்ல திருக் கூத்தைச் செய் தருளக் கூடியது மான, தில்லை வாழ்—தில்லை நகரிலே எழுந்தருளியிருக் கின்ற, தாய் சிவ காம சுந்தரியின் உலக மாதா வாகிய சிவ காம சுந்தரி அம்பிகையின், திரு அடி தொழுது—திரு அடிகளை வழிபட்டு, இடர்—(பிறவித்) துன்பங்களை, ஒழிப் பாம்—(வாராமல் தத்துவ ஞாந வாயி லாக) நீக்குவோ மாக. எ—று.

கண்டு தொழுவார்க்கு மநத் தூய்மையும், மந வொடுக்கமும், அஞ்ஞாந ஆவிருதம் இன்றிய ஞாநமும் உண்டாகும். ஆதலால், "தூய நற் கூத்து" என்றனர். 3

இல்லையே விரும்பி எண்ணிலாத் துன்பம்
எய்தினேன் கழநியம் பதியான்,
நல்லவீ ரேசன் கழல்புணை ஆக
நம்பியான் உய்வதற் கருளும்,
நெல்லையே விரும்பி நீண்முடி யணிந்த
நேரிழை சாலிவா டீசி,
தில்லைவாழ் தாய்சிவ காமசுந் தரியின்
திரு அடி தொழுதிடர் ஒழிப்பாம். 4



(இ—ள்.) இல்லையே விரும்பி—அடைவார்க்கு இன் பம் இல்லை என்னும் பொருளைத் தரக் கூடிய இல்லில் இருந்து வாழும் வாழ்க்கையையே விரும்பி, எண் இலாத் துன்பம் எய்தினேன்—அளவிட முடியாத துன்பங்களை அடைந்தவ னாகிய. யான்—அடியேன், கழநி அம்பதியான்—கழநி நகர் என்னும் கோயி லூரின்கண் எழுந்தருளி யிருக்கும், நல்ல வீரேசன்—நன்மை யான ஞாநத்தால் துன்ப ஒழிவு இன்ப அடை வான வீடு பேற்றைத் தர வல்ல வீர சேகர ஞாந தேசிக மூர்த்திகளின், கழல் புணை ஆக—திரு அடிக ளாகிற தெப்பத்தைப் பிறவிக் கடலை கடப்பதற் குறு துணை யாக, நம்பி—நம்பிக்கை கொண்டு, உய்வதற்கு—(பிறவிக் கடலைக் கடந்து முத்திக் கரையை அடைந்து) இறுமாந்திருப்பதற்கு, அருளும்—அருள் புரிந்த, நெல்லையே விரும்பி நீண் முடி அணிந்த—விரும்பி நெல்லைத் தன் நீண்ட முடியிலே அணிந்து கொண்ட, நேர் இழை—நேர்மை யான அணிகளை அணிந்த அம்மையார் ஆகிய, சாலி வாடீசி—திரு நெல்லை நாயகி யாகக் கோவி லூரில் எழுந்தருளி யிருக்கின்ற, தில்லை வாழ்—தில்லை நகரிலே எழுந்தருளி யிருக்கின்ற, தாய் சிவ காம சுந்தரியின்—உலக மாதா ஆகிய சிவ காம சுந்தரி அம்பிகையின், திரு அடி தொழுது—திரு அடிகளை வழிபட்டு, இடர்—(பிறவித்) துன்பங்களை, ஒழிப் பாம்—(வாராமல் தத்துவ ஞாந வாயி லாக) நீக்குவோம் ஆக. எ—று.

"நெல்லையே" என்பதில், ஏ என்பது, கட்டுரைச் சுவைபட நின்றது. "இல்லையே" என்பதில், ஏ என்பது, பிரி நிலை ஏ காரம் ஆகும். 4

நல்லவர் கூட்டம் நயந்துநின் றுலகம்
நயந்திடல் தவிர்ந்துநின் றென்றும்,
எல்லையில் பிறவி யொத்தெடுத் துழல
இருதயத் தொழிதரா திருக்கும்,

அல்லினைத் துடைத்தே ஆறியிங் கிருக்க
அருடரும் பெரும்பொரு ளான,
தில்லைவாழ் தாய்சிவ காமசுந் தரியின்
திருஅடி தொழுதிடர் ஒழிப்பாம். 5

(இ—ள்.) நல்லவர் கூட்டம் நயந்து நின்று—சத் சங்கத்தை விரும்பி அதனோடு கூடி யுறைந்து, உலகம் நயந்திடல் தவிர்ந்து நின்று—துர்ச் சங்கத்தை விரும்பி அடைதலை விட்டு, என்றும்—இடைவிடாமல், எல்லையில் பிறவி எடுத்து எடுத்து—அளவற்ற பிறவிகளை மேற் கொண்டு மேற்கொண்டு, உழல்—அங்கு மிங்கு மாக அலையும் படி, இருதயத்தில் ஒழிதரா திருக்கும்—அநாதி யாக உள்ளத் தை விட்டு நீங்காதிருக்கும் படியான, அல்லினை துடைத்து—அஞ்ஞான இருளைப் போக்கி, இங்கு—ஜீவ தசையிலேயே, ஆறி இருக்க—இளைப் பாறி இன்புற் றிருக்க, அருள் தரும்—அருள் புரிகின்ற, பெரும் பொருள் ஆன—நிரபேக்ஷிக வியா பகப் பொரு ளாக விளங்கும், தில்லை வாழ்—தில்லை நகரிலே எழுந்தருளி யிருக்கின்ற, தாய் சிவ காம சுந்தரியின்—உலக மாதா வாகிய சிவ காம சுந்தரி அம்பிகை யின், திரு அடி தொழுது—திரு அடிகளை வழிபட்டு, இடர்—(பிறவித்) துன்பங்களை, ஒழிப் பாம்—(வாராமல் தத் துவ ஞான வாயி லாக) நீக்குவோ மாக. (எ—று.)

நல்லவர்—இறுதியில் இன்ப வடிவம் யாம் எனத் தேறி யாறியிருப்போரும், ஆறுதற்கு முயல்வோரும் ஆவார். உலகம்—சிற்றினம்.

சிற்றின மாவது—உலகினை மெய் யெனக் கருதி முயல் பவர் கூட்டம். பெரும் பொருள்—பெரிது என்பவைகட் கெல்லாம் பெரி தாகிய பொருள். அது மகா வாக்கியத்தில் அறியப்படும் பொருள் ஆகும் என்க.





தில்லையில் உறைந்த வாதவூர் அடிகள்
திருப்பெருந் துறைமது ரையினில்,
மல்லலுத் தரகோ சமங்கையில் இன்றி
மங்களம் பொங்குசீர் படைத்த,
தில்லையில் நடந நாயகன் அடியைச்
சேர்ப்பித்த நற்றயை விரும்பித்,
தில்லைவாழ் தாய்சிவ காமசுந் தரியின்
திருஅடி தொழுதிடர் ஒழிப்பாம். 6

(இ—ள்.) தில்லையில்—தில்லை வநம் ஆகிய பெரும் பற்றப் புலியூரின்கண், உறைந்த—நீண்ட நாட் டங்கிச் சிவாநுபூதிச் செல்வ ராக வீற்றிருந்த, வாத வூர் அடிகள்—திரு வாத வூரிலே (பாண்டி நாட்டிலே) அவதரித்த மணி வாசக சுவாமி யவர்கள், திருப் பெருந் துறையில்—தான் இருந்த மரத் தடியில் எழுந்தருளி யிருந்த சிவ பெருமா னுகிய குருபரரிடத்தில் உபதேசம் பெற்ற திருப் பெருந் துறையிலும், மதுரையினில்—தான் மந்திரி யாக இருந்து அர சாக்ஷி செலுத்தப் பெற்றதும், தனக் காகச் சிவ பெருமான் நரிகளைப் பரிக ளாக வரச் செய்யப் பெற்றதும், வைகையில் உடைப் படைக்க மண் சுமந்து கொட்டிப் பாண்டியன் பிரம்படியை அச் சிவ பெருமான் பெறு மாறு இலகுவது மாகிய மதுரைப் பதியிலும், மல்லல்—வள மிகுந்த, உத்தரகோச மங்கையினில்—நட ராஜப் பெரு மான் திருக் கூத்துக் காட்சி யளிக்கப் பெறுவதும், தம் பாண்டிய நாட்டில் உள்ளதும், தன்னால் மிகப் பாடப் பெற்றது மாகிய திரு உத்தர கோச மங்கை என்னும் தலத்திலும், இன்றி—சேர்ப்பிக்கப் பெறுமல், மங்களம் பொங்கு சீர் படைத்த, ‘செல்வ நெடுமாடஞ் சென்று சேணோங்கிச் செல்வர் வாழ் தில்லை’’ (திரு ஞாந சம்பந்த சுவாமிகள்) என்று கூறும்படி எல்லா மங்களங்களும் வளர்ந் தோங்கும்படி யான விழுப்பம் அமையப் பெற்ற, தில்லையில்—அந்தத் தில்லைப் பதியிலே, நடந நாயகன்—பதஞ்

சலி வியாக்கிர பாதர் பொருட் டாடிய திருக் கூத்துக் காட்சியை என்றும் வருவார்க் களிக்கும் தேவாதி தேவனது, அடியை சேர்ப்பித்த-திரு அடியில் இரண்டறக் கலக்கு மாறு செய்த, நல் தயை விரும்பி-தனது நல்ல கிருபையை எண்ணி விருப்பங் கொண்டு, தில்லை வாழ்-தில்லை நகரில் எழுந்தருளி யிருக்கின்ற, தாய் சிவ காம சுந்தரியின்-உலக மாதா வாகிய சிவ காம சுந்தரி அம்பிகையின், திரு அடி தொழுது-திரு வடிகளை வழிபட்டு, இடர்-(பிறவி) துன்பங்களை, ஒழிப் பாம்-(வாராமல் தத்துவ ஞான வாயிலாக) நீக்குவோ மாக எ—று. 6

தொல்லையி லுணர்வைச் சுருதியின் வழித்தாத்
தோன்றிட வருளுவா யென்று,
முல்லையிற் குறிஞ்சி முறையினி லிருந்தே
முழுத்தவம் ஆற்றிய முனிவர்,
நல்லவர் உளம்போல் தெளிவுறும் வாவி
நிரம்புறத் திகழ்தரு நகராம்,
தில்லைவாழ் தாய்சிவ காமசுந் தரியின்
திருவடி தொழுதிடர் ஒழிப்பாம். 7

(இ—ள்.) தொல்லையில்-துன்பம் சிறிதும் இல்லாத இன்பம் அளிக்க வல்ல, உணர்வை-தத்துவ ஞானத்தை, சுருதியின் வழித்தா-மகா வாக்கிய வடிவ சுருதியின் மூல மாக, தோன்றிட-தோன்றும்படி யாக, அருளுவாய் என்று-எனக்கே அன்றி என்னைச் சார்ந்தவர்க்கும் அருள் புரிக என்று. முல்லையில்-வளங்களிலும், குறிஞ்சி முறையில்-குறிஞ்சி நிலத்து மழைக் குகைகளிலும், இருந்தே-நெடுங் கால மிருந்து, முழுத் தவம் ஆற்றிய-நீர் நிலை நிற்றல் முதலிய எல்லாப் பெருந் தவங்களையும் செய்த, முனிவரர்-மகா சீலர்க ளாகிய, நல்லவர்-நல மாகிய வீட்டின்பம் பெற்றவர்க ளுடைய, உளம் போல் தெளிவுறும்-



மனத் தெளிவு போலத் தெளிகின்ற நீரை யுடைய, வாவி நிரம்புற-திருக் குளங்கள் நிரம்பி விளங்க, திகழ் தரும்-மேன்மை யுடைய தாக விளங்குகின்ற, தில்லை வாழ்-தில்லை நகரிலே எழுந்தருளி யிருக்கின்ற, தாய் சிவ காம சுந்தரியின்-உலக மாதா வாகிய சிவ காம சுந்தரியின், திரு அடி தொழுது-திரு அடிகளை வழிபட்டு. இடர்-(பிறவித்) துன்பங்களை. ஒழிப் பாம் (வாராமல் தத்துவ ஞான வாயிலாக) நீக்குவோ மாக. எ—று. 7

நல்லதோர் நாவல் ஊர்நம்பி தனக்கா
நள்ளிருள் பொழுதினில் நடந்து,
வில்லினை உறழ்ந்த புருவங்கொள் பரவை
வீட்டினிற் றூதுசென் றருளும்,
பல்புகழ் படைத்த கமலையம் பதியான்
காதலி கமலையம் பிகையாம்,
தில்லைவாழ் தாய்சிவ காமசுந் தரியின்
திரு அடி தொழுதிடர் ஒழிப்பாம். 8

(இ—ள்.) நல்லது ஓர்-நல்ல தவத்துடன் கூடிய தாகிய ஒப்பற்ற, நாவ லூர் நம்பி தனக்கா (க)-திரு நாவ லூரில் அவதரித்த சுந்தர மூர்த்தி சுவாமிகளின் பொருட்டு, நள் இருட் பொழிதினில்-செறிந்த இருளை உடைய நடு இரவிலே, வில்லினை உறழும் புருவம் கொள்-வில்லை யொத்து வளைந்து அழகு பொருந்த விளங்குகின்ற புருவங்களைக் கொண்டு பிற வுறுப்புகளின் அழகையும் இணை இன்றிக் கொண்ட, பரவை வீட்டினில்-பரவை நாச்சியாரது இல்லத்திற்கு, நடந்து தூது சென்றருளும்-பூமியிலே பாதம் படும்படி நடந்து தூது போ யருளிய, பல் புகழ் படைத்த கமலை அப் பதியான்-பல புகழ்களைப் பெற்ற திரு வாரூர்த் தியாக ராஜப் பெருமா னுடைய, காதலி-நாயகி யாகிய, கமல அம்பிகை யாம்-கமலாம் பிகை யான, தில்லை வாழ்-தில்லை நகரிலே எழுந்தருளி

யிருக்கின்ற, தாய் சிவ காம சுந்தரியின்-உலக மா தா வாகிய சிவ காம சுந்தரி அம்பிகையின், திரு அடி தொழுது-திரு அடிகளை வழிபட்டு, இடர்-(பிறவித்) துன்பங்களை, ஒழிப் பாம்-(வாராமல் தத்துவ ஞான வாயி லாக) நீக்கு வோ மாக. எ—று.

சுந்தர மூர்த்தி சுவாமிகள் திரு அவதாரம் செய்யப் பெற்றமையால், “நல்ல தோர் நாவ லூர்” என அவ் வூர் சிறப்பிக்கம் பெற்றது. தங்கள் கோயி லூர் மரபிற் குபாசனா மூர்த்தி யாகிய நட ராஜப் பெருமானது அருட் சத்தி யாகிய சிவ காம சுந்தரியைத் துதிக்கும் போது, கோயி லூர் மரபிற் குத் தொடர் புடைமையானும், தன்னொடு ஒரு சாலை மாணாக்க ராகிய, நியாய சந்திர, வேதாந்த பாஸ்கர, வீர சுப்பய்ய ஞான தேசிக ஸ்வாமிகளின் தலைமையில் அதீன மாக விருந்து இப் போது அந்த ஞான சீடரின் சிஷ்ய ராகிய ஷண்முகானந்த ஞான தேசிகர் தலைமையின் அதீன மாக விருத்தலா லுந் தமக்குத் திரு வாரூர் மடப் புரம் குரு தக்ஷிணா மூர்த்தி சுவாமிகளின் மடலாயத்தின் தொடர் புடைமை யால், அவ் வூர்க் கமலாம்பிகையின் நினைவு வர, அங்கு அஜபா நடனத் தியாகேசர் நினைவும் வர, “பல் புகழ் படைத் த கமலை யம்பதியான் காதலி கமலை யம்பிகையாம்” எனத் தொடர்பு படுத்திக் கூறினர் என்க. 8

அல்லையே பயக்கும் ஐம்பொறிக் கடிமை
ஆகவே அநேகநாள் இருந்து,
தொல்லையா மூன்று தேகத்தி லிருப்பைத்
தொலைப்பதற் காகநன் னாளைச்,
செல்லவே விட்டுச் சிவைவடி வங்களைச்
சிந்தைசெய் மனத்தனாய்ச் செய்ய,
தில்லைவாழ் தாய்சிவ காமசுந் தரியின்
திரு அடி தொழுதிடர் ஒழிப்பாம். 9



(இ—ள்.) அல்லையே பயக்கும்-இருள் வடி வான அஞ்ஞானத்தின் காரிய மாய் அவ் வஞ்ஞானத்தா லுண்டா கும் பிறவிக் கேது வாகிய நல் வினை தீ வினைக ளாகிய இருள் சேர் இரு வினைகளையும் பயக்க வல்ல, ஐம் பொறிக்கு-மெய் வாய் முதலிய ஐந்து பொறிகட்கும், அடிமை யாகவே-வசப்பட்டு, அநேக நாள் இருந்து-பல கால மிருந்து (ஏ தோர் புண்ணிய வசத்தால்), தொல்லை ஆம்-துன்பமே வடி வான, மூன்று தேகத்தில் இருப்பை-தூல சூக்கும காரணம் என்னும் மூன்று தேகங்களுடன் கூடி வாழ்தலை, தொலைப்பதற் கா (க)-ஒழித்துப் புக்கில் புகுந்து ஆறி யிருப்பதற் காக, நன் னாளைச் செல்லவே விட்டு-மக்கட் பிறவி யாகிய இதனுள்ளும் முயன் றடை தற் குரிய இளம் பருவத் துள்ள நல்ல நாள்களையும் வீ ணாகக் கழிய விட்டு விடடு இந்த முதிர் பருவத்திலே யாவது, சிவை வடிவங்களை-தா யாகிய உமை யம்மையா ருடைய வடிவங்களி லேதாவ தொன்றை, சிந்தை செய் மனத்த னாய்ச் செய்ய-சிந்தித் திருக்கும் மனதை யுடையவ னாகச் செய்வதற்கு ஆக, தில்லை வாழ்-தில்லை நகரிலே எழுந்தருளி யிருக்கின்ற, தாய் சிவ காம சுந்தரியின்-உலக மாதா வாகிய சிவ காம சுந்தரி அம்பிகையின், திரு அடி தொழுது-திரு அடிகளை வழிபட்டு, இடர்-(பிறவித்) துன் பங்களை, ஒழிப்பாம்-(வாராமல் தத்துவ ஞான வாயி லாக) நீக்குவோ மாக. எ—று. 9

வில்லையே யுறழும் புருவநீழ் விழிகள்
வேலையே யுறழுமிம் மாதர்,
சொல்லெலாம் கரும்பின் சாறுகொல் லெனவே
துதிதரா மதியினை அருள்வாய்,
எல்லியும் பகலும் இடையறு துணையே
ஏத்துதற் கருள்கௌ விறைஞ்சித்,
தில்லைவாழ் தாய்சிவ காமசுந் தரியின்
திருஅடி தொழுதிடர் ஒழிப்பாம். 10

(இ—ள்.) இம் மாதர்-இந்தக் கண்ணுக் கெதிர்பட்டு புத்தியை மயக்குகிற பெண்களுடைய, புருவம்-புருவங்கள், வில்லையே உறழும்-வில்லையே ஒக்கும். நீள் விழிகள்-காதள வோடிய கண்கள், வேலையே உறழும்-வடிவத்தாலும், செயலாலும், வே லாயுத்தையே ஒக்கும், சொல் எல்லாம்-(இவர் தம்) சொற்கள் அனைத்தும், கரும்பின் சாறு கொல்-கருப்பஞ் சாறோ, எனவே-என்று, துதிதரா மதியினை-புகழ விரும்பாத புத்தியினை, அருள்வாய் என-ஈந் தருளுவா யாக என்றும், எல்லியும் பகலும் இடையறுது-(அப் புத்தியைத் தருதலோடு அதனு லடையக் கூடிய தாக வுள்ள) இரவும் பகலும் இடைவிடாமல், உனையே-எல்லா மாய் அல்லது மாய் இலகும் பரிபூரண பரமாத்மா வான நின்னை, ஏத்துதற்கு-துதித்தல் முதலிய வழிபாட்டைச் செய்து மல விக்ஷேப மற்று பிரமாபின்னன் யான் எனத் திட மாக அறிந்து ஆறி யிருப்பதற்கு, அருள்க என-அருள் செய்வா யாக என்றும், தில்லை வாழ்-தில்லை நகரில் எழுந்தருளி யிருக்கின்ற, தாய் சிவ காம சுந்தரியின்-உலக மாதா வாகிய சிவ காம சுந்தரி அம்பிகையின், திரு அடி தொழுது-திரு அடிகளை வழிபட்டு, இடர்-(பிறவித்) துன்பங்களை, ஒழிப் பாம்-(வாராமல் தத்துவ ஞான வாயி லாக) நீக்குவோ மாக. எ—று.

இறைஞ்சி வணங்கி-முதலில் கைகளாற் கும்பிட்டு என்ற படி யாம் விசுத்த ஆத்மாவே, ஆத்ம ஞானத்தை அடைதற் குறு துணையா மாதலின், "துதிதரா மதியினை யருள்வாய்" என வேண்டிய தாகக் கூறினர். எல்லி இரவு 10

திருப்பூ வண மடம். ஸ்ரீ காசிகாந்த ஞானச்சார்ய ஸ்வாமிகள் இயற்றிய, தில்லை, சிவ காம சுந்தரி தோத்திர ரச மஞ்சரியும், திரு வை யாறு, அறு பத்து மூவர் மடாதிபதி, சிதம்பரம், கோ சித. மடம், ஸ்ரீ சிதம்பர ஞான தேசிகர் மாணுக்கர், ஸ்ரீ நாராயண சுவாமிகள் இயற்றிய நுந்தா ஒளி (நித்திய பிரகாச) உரையும், முற்றுப் பெற்றது.

---



12. வேதாந்த சூடாமணி-சந்தோஷ தாயினி உரை. 4—00

## 4 இயற்றிய நூல்.

1. சார்த சதக ஸ்தோத்ர ரச மஞ்சரி பரிமள தீப உரை. 1-50
2. சூட்டுக் கோல, கட்டாரி, புச்சம், கண்டனம் 1—00
3. திரு எம் பாவை, திருப் பள்ளி எழுச்சி, [மணி மாலை சிறு சுடர் உரை. 0—75
4. சப்ததா சப்ததி : ஸ்தோத்திர ரச மஞ்சரி. [நுந்தா ஒளி உரை. 0—50
5. விம்சதி ஸ்தோத்ர ரச மஞ்சரி, நுந்தா ஒளி உரை. 0—25
6. மந்திர உபதேசம்-வசனம். 0—25
7. திரிம்சத் ஸ்தோத்ர ரச மஞ்சரி, நுந்தா ஒளி உரை. 0—25
8. வட நாட்டில், ஹரித்வார கும்ப மேளாவும், [தென் னாட்டில், சாதுக்கள் மேளாவும். வசனம் 0—25
9. சாது சங்க நிறுவல் விழா வைபவம்-வசனம். 0—25
10. மடங்களின் உத்பத்தியும், தற்போதுள்ள நிலைமையும். 0-13
11. அதிஷ்டானத்தி லிருப்பவர்கட்கும், [அத்வைதிகட்கும், ஓர் அறிக்கை. 0—25
12. திரு எம் பாவை, திருப் பள்ளி எழுச்சி, பத உரை. 0—25

ஆக நூல் (37—26, 63

## 5 பிற நூல் அச்சிட்டன.

1. வேதாந்த சாஸ்திர ரத்னாவலி 9 சேர்ந்தது. [கவி 1132] 3—00
2. வேதாந்த சாஸ்திர ரத்னத் திரயம் 3 சேர்ந்தது. விவேக சூடா மணி கவி 671 அஞ்ஞ வதைப் பரணி கவி 494, பஞ்ச தசி 796) ஆக 1961 கவி 3—00
3. கீதாத் திரயம் பகவற் கீதை கவி 545 ஈசுவர கீதை கவி 338 பிரஹ்ம கீதை கவி 547 மூன்று சேர்ந்து கவி 1430 3—00
4. திருக் களர், வீர சேகர ஞான தேசிக சரிதம்-வசனம். 1-00
5. வாசிட்டம் கவி 2055. 2-25. 6. பஞ்ச தசி கவி 796.0-63
7. பிரஹ்ம கீதை கவி 547. 0—38
8. பகவற் கீதை கவி 545 1—25
9. ஈசுவர கீதை கவி 338. 0—25
10. பக்தி சதக தோத்ரம். தோத்ர பிரகாச உரை. 0—19
11. கைவல்ய நவநீதம் கவி 288. 0—56
12. ஒன்பது துறவியர் பாடிய அருட் பா மாலை 1—00

13. கைவல்ய நவநீதம், கவி 288.

ஸ்ரீ அருணாசல ஞான தேசிகர் பத சார உரை. 3—00

14. மார்கழித் திங்கள் பாராயண மஞ்சரி. கவி (62) 0—50

15. காசிகாநந்த விஜயம், வசநம். 0—25

## 6 அச் சாக வேண்டியன. 28

1. யுக்தி பிரகாசம் ஹிந்தி மொழி பெயர்ப்பு. வசநம்.

### சமஸ்கிருத மொழி பெயர்ப்பு.

2. பேத திக்காரம்—சத் கிரியை உரை. வசநம்.
3. விவேக சூடாமணி (வேதாந்தம்) பத உரை.
4. பிரபோத சுதாகரம், பத உரை-வேதாந்தம்.
5. சித்தாந்த லேச சார சங்கிரகம் 56 மத விசாரம்.
6. தர்க்க சங்கிரகம் தீபிகை உரையுடன் (தர்க்கம்.)
7. காணாத சித்தாந்த சந்திரிகை, வசநம் (தர்க்கம்.)
8. சப்த பதார்த்தீ. வசநம் (தர்க்கம்.)
9. லௌகிக நியாய சங்கிரகம் 400 நியாயம். வசநம்.
10. கணேச கவசம் பத உரை. 11. ஷை தமிழ்க் கவி உரை.
12. சிவ சங்கராவதாரம், சுலோகம் உரை.
13. ஸ்திரி புருஷ ஜநந மரண ரஹஸ்யம்—வசநம்.
14. மகாத்ம சரிதாமிரிதம்—வசநம்.
15 ஈசுவர கீதை ரஹஸ்யார்த்த விளக்க உரை.
16. சோவிலூர் மடத்தின் அத்புத மகிமா அகூபரம்—வசநம்.
17. தாயும், தநயனும், வேதாந்தம். வசநம்.
18. கட்கம் கொண்ட காளியை ஜயிக்கும் காமாரி—வசநம்.
(சோம சுந்தர மாலைக்கு கண்டநம்.)
19. நாநா ஜீவ வாதக் கட்டளையின் சாரமும்,
[சக்தி விவேசநமும்.
20. பட்டிநத்தார் பாடல் உரை.
21. பல கேள்வி சமாதாந லட்டர்கள். 22. சமாதி விதி.
23. உண்மைக் கடவுள். வசநம் 24. சந்யாச விதி.
25. சங்கர விஜய விலாசம்—வசநம்.
26. கைவல்ய நவநிதம்-கிருத பாந உரையும், 27. ஆராய்ச்சியும்.
28. சதுர்த் தச வித்யாப் பிரகாசிகை—வசநம்.

---